# வனஸ்பதி நமது உணவை அதிக போஷாக்குள்ளதாக்குகிறது

நாம் தினசரி உட்கொள்ளும் உணவில் குறைந்த பட்சம் 2 அவுன்ஸாவது கொழுப்புச்சத்து இருக்க வேண்டியது நம்முடைய ஆரோக்கியத்துக்கு மிக அவசியம் என்று உணவு ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். நமக்கு தொன்று தொட்டுப்பழக்கமான கொழுப்புச்சத்துக்களான நெய்யும் இதர தாவர எண்ணெய்களும், தற்போதுள்ள உற்பத்தி நிலையில் நமக்கு நாளொன்றுக்கு ½ அவுன்ஸுக்குமேல் கிடைக்க வழியில்லை!

இந்தக் கொழுப்புச் சத்துக்கள் போதிய அளவு கிடைப்பதில்லை என்பதோடுமட்டுமல்லாமல் விலையும் அதிகம். அதனால் லட்சக்கணக்கான மக்கள் கொழுப்புச் சத்துக் குறைவான உணவையே உட்கொண்டு தங்களது ஆரோக்கியத்துக்குக் கெடுதல் விளைவித்து வாழ்ந்து வருகிறார்கள்.

நம் நாட்டின் கொழுப்புச்சத்துக்களின் உற்பத்தியை அதிகரிப்பது எப்படி? அதிக பட்சம் எண்ணெயைத் தரக்கூடிய வேர்க்கடலையை பெரும் அளவில் பயிராக்கவேண்டும். நம் நாட்டில் ஏராளமாகக் கிடைக்கும் பருத்திக் கொட்டையை அதிக அளவில் பயன்படுத்த வேண்டும். இவ்விரண்டு விதைகளின் எண்ணெய்களை 'ஹைட்ரோஜனேஷன்' முறையில் கெட்டிப்படுத்தி மக்களுக்குப்பிடித்த வனஸ்பதியாக மாற்றவேண்டும். இந்த விதத்தில் வனஸ்பதியைத் தயார் செய்வதன் மூலம், பயிர்செய்யக்கூடிய நிலம் அளவோடு உள்ள நம் நாட்டில், கொழுப்புச் சத்துக்களின் அளவை அதிகரிக்க முடியும்.

## வனஸ்பதி உலகம் பூராவும் பிரபல்யம் அடைந்துள்ளது

முன்னேற்றமடைந்துள்ள, பெரும்பாலான நாடுகளில்கூட பாரம்பரையாகப் பழக்கமான கொழுப்புச்சத்துக்கள் பற்றாக் குறையாக இருந்தன. இந்தக் குறையை நிறைவு செய்வதற்கு அவர்கள் 'ஹைட்ரோஜனேஷன்' மூலம் எண்ணெய்களிலிருந்து வனஸ்பதி போன்ற கொழுப்புச் சத்துக்களை பெரும் அளவில் தயாரித்தனர். இவை, அந்நாடுகளில் ''ஷார்ட்னிங்'' ''வெஜிடபிள் கீ'', ''மார்கரீன்''போன்ற பற்பல பெயர்களில்வழங்கி வருகின்றன.

உயர்ந்த வாழ்க்கைத்தரமும்,திடமான ஆரோக்கியமும் உள்ள இந்த முன்னேற்றமடைந்த நாட்டு மக்கள் தங்கள் உடலுக்குத் தேவையான கொழுப்புச் சத்து முழு அளவும் பெறுவதற்கு வனஸ்பதி போன்ற கொழுப்புக்களையும், வெண்ணெய், நெய் போன்ற கொழுப்புக்களுடன் உட்கொள்ளுகிறார்கள் என்பதைக் கீழ்க்கண்ட புள்ளி விவரங்களிலிருந்து நன்கு அறியலாம்.

1959-ம் வருஷத்தில் ஒரு நபர் உட்கொண்ட கொழுப்புச் சத்து உணவு அளவு (ராத்தல்)

| நாடு | பாரம்பரையாகப் பழக்கமான கொழுப்புக்கள் (வெண்ணெய், நெய் முதலியன) | வனஸ்பதி போன்ற கொழுப்புக்கள் (''ஷார்ட்னிங்'' ''மார்கரீன்'' முதலியன) | மொத்தம் |
|---|---|---|---|
| இந்தியா | 9.8 | 1.7 | 11.5 |
| பிரான்ஸ் | 22.5 | 5.3 | 27.8 |
| கானடா | 18.1 | 8.7 | 26.8 |
| பின்லாந்து | 32.4 | 14.6 | 47.0 |
| இங்கிலாந்து* | 18.5 | 19.9 | 38.4 |
| அமெரிக்கா* | 8.0 | 20.6 | 28.6 |
| மேற்கு ஜெர்மனி* | 17.2 | 27.1 | 44.3 |
| டென்மார்க்* | 23.6 | 41.4 | 65.0 |
| நெதர்லாண்ட்ஸ்* | 9.0 | 44.8 | 53.8 |
| நார்வே | 8.4 | 53.1 | 61.5 |

வெண்ணெய் ஏராளமாகக் கிடைக்கும் நாடுகளில் * கூட மக்கள் வெண்ணெயைவிட வனஸ்பதிபோன்ற கொழுப்புகளைத்தான் அதிக அளவில் உட்கொள்ளுகிறார்கள். ''ஹைட்ரோஜனேடட்'' கொழுப்புக்களை அதிகமாக உபயோகிக்கும் இந்நாட்டு மக்களைப் போலவே, நம் நாட்டிலும், லட்சக்கணக்கான மக்கள், தங்களது உணவை அதிக போஷாக்குள்ளதாக்குவதற்கு, பரிசுத்தமுள்ள, போஷாக்கு வாய்ந்த, விலை அதிகமில்லாத, கொழுப்புச்சத்தான வனஸ்பதியை உபயோகிக்கிறார்கள்.

## வனஸ்பதியைப்போன்ற கொழுப்புச் சத்துக்கள் உலகம் பூராவும் உபயோகிக்கப்பட்டு வருகின்றன




அமெரிக்கா - அயர்லாந்து - அர்ஜெண்டினா - அல்பேனியா - அல்ஜீரியா - ஆஸ்திரேலியா – ஆஸ்திரியா - இங்கிலாந்து - இத்தாலி - இந்தியா – இஸ்ரேல் - ஈராக் - ஈரான் - எத்தியோப்பியா - ஏமன் - கானடா - கிரீஸ் - செக்கோஸ்லவேகியா - டென்மார்க் - துருக்கி - தென் ஆப்பிரிக்க யூனியன் - நார்வே -நெதர்லாண்ட்ஸ் – நைஜீரியா - பர்மா - பல்கேரியா – பாகிஸ்தான் - பிரான்ஸ்– பிரிட்டிஷ் கிழக்கு ஆப்பிரிக்கா – பிரேஜில் - பின்லாந்து– பெல்ஜியம் – போர்ச்சுகல் - போலந்து – மத்திய ஆப்பிரிக்க பெடரேஷன் – மலாயா - மெக்ஸிகோ – மொராக்கோ – யுனைடெட் அரபு ரிபப்ளிக் - யூகோஸ்லேவியா - ரஷ்யா - ருமேனியா – லிபியா - ஜப்பான் - ஜெர்மனி (கிழக்கு, மேற்கு) - ஸவூதி அரேபியா – ஸ்விட்ஸர்லாந்து – ஸ்வீடன் – ஹங்கேரி

அதிக விவரங்களுக்குத் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதுங்கள்,
தி வனஸ்பதி மானுபாக்சரர்ஸ் அஸோஸியேஷன் ஆப் இந்தியா
இந்தியா ஹவுஸ், போர்ட் ஸ்ட்ரீட், பம்பாய்-1

JWT/VMA 2909

பிலவ, மாசி 28

# கல்கி

மார்ச் 11, 1982



## பொருளடக்கம்



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



ஆடம்பரப் பொருளாகக் கருதப்படினும், அரசன் முதல் ஆண்டிவரை புகையிலையை ஏதேனுமொரு விதத்தில் உட்கொள்ளாதவர்களே இல்லை. இந்தியாவிலும் சரி, பொடியோ, புகையிலையோ போடும் பழக்கத்தைவிட புகைபிடிக்கும் பழக்கமே மக்களை மேன்மேலும் கவர்ந்துள்ளது. இதன் பயனாக ஆண்டுதோறும் 3200 கோடி சிகரெட்டுகளுக்கு மேலாக உபயோகிக்கப்பட்டு வருகிறதென இன்று உத்தேசக் கணக்கெடுக்கப்பட்டுள்ளது.

## புகையிலையின் வரலாறு... 8

Panama

20

CIGARETTES

GTC

GOLDEN TOBACCO COMPANY PRIVATE LTD.

பம்பாய்—57.

# பனாமா

ஒரு நல்ல சிகரெட்—
இறுதிவரை இன்பமூட்டுவது

பாரதத்தில் இத்தகைய
தேசிய ஸ்தாபனங்களில்
மிகப் பெரியது

GT 708 TM



மலர் 21 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 32

# ஒரு தேர்தல் முடிந்தது

ராஜாஜி

தேர்தல் முடிவுகள் எப்படியானபோதிலும் சுதந்திரக் கட்சியைத் தொடங்கியது விஞயிற்று என்று நான் எண்ணவில்லை. தேர்தலில் யார் எந்த முறையில் எவ்வளவு வெற்றியடைந்தாலும் என் போராட்டம் தவறானது என்று நான் எண்ணவில்லை. மக்களுடைய அடிப்படை உரிமைகளைக் காத்துத்தர வேண்டும் என்ற சுதந்திரக் கட்சியின் கொள்கையை எதுவும் அசைக்க முடியாது. பெர்மிட் லைசென்ஸ் ஆட்சி ஒழிய வேண்டும், ஜனநாயகம் தழைக்க வேண்டும், மகாத்மாஜியின் கோட்பாடுகள் புத்துயிர் பெற வேண்டும் என்பதற்காக நான் ஓர் எதிர்ப்புத் தொடங்கியது மிகவும் யுக்தமான காரியமே என்றுதான் இன்றைக்கும் உறுதியாக நம்புகிறேன்.

மக்களுடைய ஒவ்வொரு செயலிலும் பிரவேசித்து நாட்டுப் பொருளாதாரத்தை இஷ்டப்படி மாற்றும் சர்வாதிபத்தியத்தைச் சர்க்காரிடம் ஒப்புவிப்பதே காங்கிரஸின் கொள்கை. இந்த வரம்பற்ற அதிகாரத்தைப் பயன்படுத்திக் கொண்டு ஆளும் கட்சிக் காரர்கள் சர்க்கார் ஊழியர்களைத் தங்களுக்குக் கருவியாக உபயோகித்துக்கொள்ள வசதி செய்து தருவதே அதன் நோக்கம். காந்திஜி விரும்பிய சுதந்திர ஆட்சிக்கும் இதற்கும் எவ்வளவு தூரம்! தேர்தலில் காங்கிரஸ் எவ்வளவு அமோகமான வெற்றி கண்டாலும் அதற்கு வலுவான எதிர்ப்பு இல்லாதவரையில் இந்த நாடு ஒரு ஜனநாயக நாடாகாது என்று நான் திடமாகக் கருதுகிறேன்.

கொள்கைகளைக் காட்டிக் காங்கிரஸ் தேர்தலில் வெற்றி பெறவில்லை. வேறு உபாயங்களைக் கொண்டே ஜயம் பெற்றது. எனவே என் கொள்கை பிசகானது என்று எண்ணிக் கருத்துக்களை மாற்றிக் கொள்ள வேண்டிய அவசியமே எழவில்லை.

ஏக கட்சி எதேச்சாதிகாரம் ஒழிய வேண்டும், மக்களாட்சியைப் பேணிப் பராமரிக்க வேண்டும், மக்களுடைய சீலம் குன்றாது பாதுகாக்கவேண்டும், நல்ல நிர்வாகம் நிலைபெற வேண்டும்—என்றெல்லாம் நாம் விரும்பினோமானால் நம்முடைய சக்தி முழுவதையும் ஒன்று திரட்டி மீண்டும் எதிர்க்க வேண்டும். அல்லாத பட்சத்தில் ஜனநாயகமாவது, நேர்மையான ஆட்சியாவது நமக்குக் கிட்டாது. சர்க்கார் ஊழியர்களின் யோக்கியதை குன்றிப் போகும். மக்களின் வாக்குரிமையை விலைக்கு வாங்கும் அக்கிரமமும் வலுப்பெறும். தீமையை எதிர்க்காது விட்டுவிட்டோமானால் நாட்டில் தருமம் என்பதே தலைசாய்ந்துவிடும்.

நாட்டுக்குச் சுதந்திரம் வாங்கித் தந்த கட்சி என்ற பெருமையோடு, பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்தும் பேரதிகாரமும் காங்கிரஸுக்குச் சேர்ந்துவிட்டதால் அது ஆட்சி பீடத்தில் தன்னை ஸ்திரமாக இருத்திக் கொள்வது மிகவும் எளிதாகி விட்டது. அதே சமயத்தில், 'ஏக கட்சி ஆட்சி ஆபத்தானது; அதிலும் வரம்பற்ற அதிகாரத்தைச் சர்க்காரிடம் திரட்டித்தரும் ஆட்சி மிகவும் அபாயகரமானது' என்று உணர்ந்து போரிடுவது கடமை என்று முயல்வோருடைய வேலை மிகச் சிரமமாகிவிட்டது. காலம் செல்லச் செல்ல இந்த எதிர்ப்புப் பணி மேலும் கடினமாகும்.

என்றாலும் முடிவாக ஒரு காலம் வந்தே ஆகவேண்டும். எந்தத் தீமையும் ஒரு நாள் உச்ச கட்டத்தை அடைந்தே ஆகவேண்டும். அப்போது தன்னாலேயே அதற்குப் பரிகாரமும் ஏற்பட ஆரம்பிக்கும். 'வயது வந்த எல்லோரும் வாக்குரிமை பெற்றிருக்கும்போது பரிகாரம் ஏற்படுவது அசாத்தியம்; நாம் மீண்டும் எழுந்திருக்க

முடியாது' என்று சிலர் நினைக்கிறார்கள். வயது வந்தவர்கள் எல்லோரும் வாக்குரிமை பெற்றிருப்பதே தவறு என்று நான் எண்ணவில்லை. நம் மக்களுடைய சிலத்தை யாரும் குலைக்க முற்படா விட்டால்—ஏழை, எளியவர்களாயினும், எழுத்தறிவில்லா விடினும் — அவர்கள் நியாயமாகவே நடந்து கொள்வார்கள் என்று நான் உறுதியாக நம்புகிறேன். எது நல்லது எது கெட்டது என்று சீர்தூக்கிப் பார்க்க அவர்களுக்குத் தெரியும். எனவே வயது வந்த எல்லோரும் வாக்குரிமை பெற்றிருப்பதைக் குறை கூற வேண்டாம். நன்றாக விஷயம் தெரிந்தவர்களே ஒரு கட்சியானது சர்வாதிகாரத்தைக் கைப்பற்றிக் கொள்ள அனுமதித்திருக்கிறார்கள். இது தான் உண்மையில் மாபெரும் தவறாகும். அந்தத் தவறு காரணமாக இப்போது நிலைமையைச் சீர் செய்வது மிகவும் கஷ்டமாகி விட்டது. கஷ்டம் என்பதனால் கைவிடும் காரியம் அல்ல இது. இன்றைய நிலைமை மாற்றியே ஆக வேண்டும். மக்கள் சங்கற்பம் செய்து கொண்டு விட்டால் இயலாத காரியம் எதுவுமே கிடையாது. அவ்வாறு உறுதி பூணுவதற்கு மக்களை இனி பயிலுவிக்க வேண்டும்.

ஒரு தேர்தல் முடிவு காரணமாக விடுதலைப் போராட்டத்தை நிறுத்துவதற்கில்லை. மக்களின் சுதந்திரம் அதிகமாக இருக்க வேண்டும்; சர்க்கார் அதிகாரம் குறைய வேண்டும் என்பதொன்று தான் பிரச்னை. இந்த அம்சத்தை வைத்தே ஆளும் கட்சிக்கு ஓர் எதிர்ப்பை உருவாக்க வேண்டும். மற்ற காரணங்களுக்காக ஏற்படும் எதிர்க் கட்சிகள் ஜனநாயகத்தைக் காக்க உதவா. இத்தருணத்தில் செல்வாக்குள்ளவர்கள் தங்களுடைய அந்தஸ்தையும் சுயமுன்னேற்றத்தையும் பெரிதாகக் கருதுவார்களானால் அவர்கள் நாட்டுக்கே துரோகம் இழைத்தவராவார்கள். காந்திய நெறியைத் தள்ளி விட்டு, கம்யூனிஸ நாடுகளில் காண்பது போல் சர்க்கார் அரசியல் பலத்தையும் பொருளாதார வசதிகள் எல்லாவற்றையும் தன் ஆதீனத்தில் வைத்துக் கொண்டு நெருக்குவதற்கு நாம் ஒருநாளும் உடன்படலாகாது.

## பர்மா ராணுவப் புரட்சி

பர்மாவின் சேனாதிபதி ஜெனரல் நே வின் அங்கு நடைபெற்று வந்த ஜனநாயக சர்க்காரை மிக எளிதில் 'இரத்தம் சிந்தாமல்' கவிழ்த்து விட்டு நாட்டின் ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டு விட்டார். ஜனாதிபதியும் பிரதமர் உள்ளிட்ட மந்திரிகளும் இரு சபா நாயகர்களும், பிரதம நீதிபதியும் கைது செய்யப் பட்டிருக்கின்றனர். மக்கள் நிர்ணயிக்க வேண்டிய ஜனநாயக ஆட்சி என்பது ராணுவ பலத்துக்குப் பலியாகி விட்டது. சர்க்காரின் பொறுப்பில் ஊதியம் பெற்று உழைக்கும் ராணுவம் இருந்தபோதிலும் ராணுவத்தின் திடீர் செயல்களினால் உள்நாட்டு விவகாரங்கள் பாதிக்கப்படும் வேளைகளில் உதவக்கூடிய மக்களின் ராணுவம் என்பதாக ஒன்று இருந்தால் தான் ஜனநாயகத்தைக் காப்பாற்ற முடியும் போலும். இந்தியாவின் பிராந்திய சேனையை விரிவு படுத்துவது பற்றிச் சிந்திக்க இது ஒரு தருணமாகும்.

இரவோடு இரவாக நடைபெற்ற இந்த ஆட்சி மாற்றம் என்ற மாபெரும் சம்பவம் பர்மா மக்களின் பொது வாழ்வில் எதிர் விளைவுகள் எதுவும் ஏற்படுத்தாதது அதிசயமாக இருக்கிறது. தலைநகரமாகிய ரங்கூனில் அமைதி நிலவுவதாகவும், மக்களின் அன்றாட அலுவல்கள் வழக்கம் போல் நடைபெறுவதாகவும் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன. மக்களே ஆட்சி செலுத்துவதாக ஏட்டளவில் முழங்கப்படும் ஜனநாயகத்தில் மக்கள் எவ்வளவு அக்கறை காட்டுகிறார்கள் என்று அறிய இது ஒன்றே போதும். சர்க்காரின் அதிகாரங்கள் மிகவும் பெருகி, மக்களுடைய வாழ்க்கையில் அதன் தலையீடு அதிகரிக்குமானால் நாளடைவில் மக்கள் நாட்டு நிர்வாகத்துக்குச் சர்க்கார்தான் முழுப் பொறுப்பு என்று எண்ணி ஒதுங்கிவிடும் நிலை தன்னால் ஏற்படுகிறது. மக்கள் சக்தியற்றவர்களாகி விடும் இந்த அவல நிலை சர்க்கார் அதிகாரம் வலுக்கும் எந்த ஜனநாயகத்திலும் ஏற்படத்தான் செய்யும். காந்திஜி விரும்பியது போல் சர்க்காரை மக்கள் எதிர்த்து நிற்கும் மனோதிடத்தைப் பெறவேண்டியது அத்தியாவசியமாகும் என்ற உண்மையே பர்மா ராணுவப் புரட்சியிலிருந்து இந்தியா கற்க வேண்டிய பாடம். ஏனெனில் மக்களுடைய ஆதரவு இல்லாமல் எந்த ராணுவத் தலைவரும் ஒருமாதம் ஆட்சி நடத்த முடியாது. கண்ட்ரோல், கட்டுப்பாடுகளை ஏற்றுக் கொண்டு தங்கள் சக்தியை இழக்க மக்கள் அனுமதித்து விட்டால் அது சர்வாதிகாரத்துக்குத்தான் அடிகோலும். இந்த உண்மையைத்தான் இன்று நாம் ஆசியாவில் கண்கூடாகப் பார்த்து வருகிறோம்.

## யாருக்கு வெற்றி?




## பண பலம்!

அரசாட்சி அதிகாரம்

பணமூட்டைகளைக் கொண்டு —

# வாக்குகள் விளக்கும் உண்மை

காங்கிரஸின் வெற்றிக்குப் பல காரணங்கள் உண்டு. அதிகாரத்தில் இருப்பதால் உள்ள அநுகூலங்கள், நாடு முழுவதும் பரவியுள்ள மாபெரும் ஸ்தாபன அமைப்பு, சுதந்திரம் பெற்றுத் தந்த நீண்ட நாளையக் கட்சி என்ற அந்தஸ்து, பண பலம் இவை மற்ற எந்த எதிர்க் கட்சியையும் விடத் தேர்தலில் காங்கிரஸுக்குச் சாதகமாக வேலைசெய்துள்ளன. மேலும் பழைய காங்கிரஸ்போல மனச்சாட்சிக்கு அவ்வளவாக மதிப்புத் தராமல் தேர்தல் விவகாரங்களைத் திறம்பட நிர்வகித்த சாமர்த்தியசாலிகளும் காங்கிரஸில் நிறைய இருந்திருக்கின்றனர். இந்தக் கட்சியின் செல்வாக்கு எங்கே, இரண்டரை ஆண்டுகளே முடித்த சுதந்திரக் கட்சி எங்கே? திரவிய வசதியிலும் மிகவும் பின்தங்கியே நின்றது சுதந்திரக் கட்சி. இவற்றோடு பிரதம மந்திரி உட்பட எல்லாக் காங்கிரஸ் தலைவர்களும் இந்தக் கட்சியையே முக்கியமாகத் தாக்கி, நசுக்க முயன்றனர். இவ்வளவு இடையூறுகளில் சுதந்திரக் கட்சி அடைந்துள்ள வெற்றி போற்ற வேண்டிய வெற்றியாகும்.

லோக சபையில் சுதந்திரக் கட்சி இதுவரை (2-3-'62) பதினெட்டு ஸ்தானங்களைப் பிடித்திருப்பது பாராட்ட வேண்டிய சாதனையாகும். மேலும் பல இடங்களில் காங்கிரஸுக்கு நெருக்கமாகச் சுதந்திரக் கட்சி வாக்குகள் பெற்றுள்ளது. கீழ்க் கண்ட மக்கள் சபை ஸ்தானங்களின் நிலவரத்தைப் பாருங்கள் :

| | காங்கிரஸ் | சுதந்திரா |
|---|---|---|
| மேலூர் | 155629 | 142710 |
| திண்டிவனம் | 132330 | 118033 |
| திருநெல்வேலி | 151822 | 129803 |
| கரூர் | 139385 | 100229 |
| ராமநாதபுரம் | 145396 | 114513 |
| காவலி | 167031 | 139068 |
| சித்தூர் | 130026 | 106062 |
| அனகபள்ளி | 96985 | 80685 |
| குல்பர்கா | 92399 | 84326 |

சுமார் பத்து சத விகிதம் வாக்கு வித்தியாசத்திலேயே இவ்விடங்களில் காங்கிரஸ் வெற்றி கண்டிருக்கிறது.

மொத்தம் பதிவான வாக்குகளில் தமிழ் நாட்டு சட்டசபையின் எல்லாத் தொகுதியிலும் போட்டியிட்ட காங்கிரஸ் 57 லட்சம் வாக்குகள் பெற்றுள்ளது. பார்வர்டு பிளாக் உட்பட நூறே தொகுதிகளில் போட்டியிட்ட சுதந்திரக் கட்சியோ பதினைந்தரை லட்சம் வோட்டுக்கள் பெற்றுள்ளது. விஸ்தாரமான ஸ்தாபன அமைப்பும் பிரசார இயந்திரமும் பெற்றுள்ள தி. மு. க.வின் மூலம் பெருவாரி மக்கள் தங்கள் காங்கிரஸ் எதிர்ப்பைக் காட்டியது போக, பதினைந்தரை லட்சம் வாக்காளர்கள் சுதந்திரக் கட்சியை ஆதரிப்பது அக்கட்சியை மக்கள் எவ்வளவு வரவேற்றிருக்கிறார்கள் என்பதற்கு அத்தாட்சியாகும்.

தமிழ்நாட்டில் சுதந்திரக்கட்சிபோட்டியிட்ட மக்கள் சபைத் தொகுதிகளில் சுதந்திரக் கட்சி ஓரிடத்திலும் வெற்றி பெறுவிடினும் அது காங்கிரஸ் பெற்றுள்ள வாக்குகளில் அறுபது சதவிகிதம் பெற்றிருப்பது உற்சாகம் அளிக்கிறது. இந்தத் தொகுதிகளில் காங்கிரஸுக்கு 24,64,837 வாக்குகளும் சுதந்திரக் கட்சிக்கு 14,76,296 வாக்குகளும் கிடைத்திருக்கின்றன. இதுவும் பெர்மிட் — லைசென்ஸ் ஆட்சியை மக்கள் எவ்வளவு வெறுக்கிறார்கள் என்பதற்குச் சான்றாகும்.

தமிழகத்தில் பார்வர்டு பிளாக்குடன் சேர்ந்து ஒன்பதே சட்டசபை ஸ்தானங்களைச் சுதந்திரக் கட்சி பெற்றுள்ளபோதிலும் ஒரு பெரும் பகுதி வாக்காளர்களின் மனோபாவம் அதற்குச் சாதகமாக உள்ளது என்பதில் சந்தேகமில்லை.

ஏனைய சில ராஜ்ய சட்ட சபைகளில் சுதந்திரக்கட்சி கண்டுள்ள வெற்றியும் குறிப்பிட்டு மகிழ வேண்டிய விஷயமாகும்.

| | மொத்த ஸ்தானம் | சுதந்திரக் கட்சி |
|---|---|---|
| ஆந்திரம் | 300 | 19 |
| பீகார் | 318 | 50 |
| குஜராத் | 154 | 26 |
| ராஜஸ்தானம் | 176 | 36 |
| உத்தரப்பிரதேசம் | 430 | 15 |

சுதந்திரக் கட்சிக்கு வள மிக்க எதிர்கால வாழ்வுண்டு என்பது நடுநிலையில் நின்று எழுதும் பல பத்திரிகைகளின் அபிப்பிராயம். முயற்சி திருவினையாக்கும் என்ற பொன் மொழியைப் பின்பற்றி ஆதரவாளர்கள் கட்சியைப் பலப்படுத்தவேண்டியதே இன்றையத்தேவை.

## ஜனநாயகத் தலைவி

# ஜாக்குலின் கென்னடி



கணவர் கண்டு மகிழும் காரிகையாக

சென்ற வருஷம் கிறிஸ்துமஸ் தினத்துக்கு இரண்டு நாட்களுக்கு முன்னர் 'அஸோஸியேடட் பிரஸ்' ஸ்தாபனத்துக்குக் காலை 8-57 மணிக்குத் திடுக்கிட வைக்கும் ஒரு செய்தி வந்தது:

''அமெரிக்க ஜனாதிபதியின் மனைவி ஜாக்குலின் கென்னடி யாரும் அறியாமல் பாம்பீச் நகரத்திலிருந்து நழுவிச் சென்றார். ரகசியப் போலீஸைச் சேர்ந்த ஒருவன் மட்டும் பாதுகாப்புக்காகப் பின் தொடர்ந்து வர அவர் போர்ட் லாடர்டேல் பட்டணத்திலுள்ள ஓர் இரவுக் கேளிக்கை கிளப்புக்குள் நுழைந்தார். அங்கே சுமார் ஒன்றரை மணி நேரம் 'டுவிஸ்ட்' நடனம் ஆடினார்!''

டுவிஸ்ட் நடனம் என்பது ராக் அண்ட் ரோலுக்குப் பிறகு அமெரிக்க இளைஞர்களையும் யுவதிகளையும் பைத்தியமாக அடித்துக் கொண்டிருக்கும் டப்பா பாட்டுக்கு ஏற்ற ஒரு வகை டப்பா நடனம்.

இந்தத் தகவலை அறிந்ததும் அந்தச் செய்தி ஸ்தாபனத்தினர் ஸ்தம்பித்து நின்றார்கள். இந்தச் செய்தியைப் பத்திரிகைகளுக்கு அனுப்புவதா இல்லையா என்ற பிரச்னை எழுந்தது. இது உண்மையானால் அதை அமெரிக்க மக்களிடமிருந்து மறைத்து வைக்கத் தங்களுக்கு உரிமை இல்லை என்று செய்தி ஸ்தாபனத்தினர் கருதினார்கள். ஆனால் அதே நேரத்தில் ஜாக்குலின் இப்படிச் செய்திருக்க மாட்டார் என்றும் தீவிரமாக நம்பினார்கள்.

தந்திகள் பறந்தன. டெலிபோன் மணிகள் கணகணத்தன. செய்தி ஸ்தாபனத்தின் பல நிருபர்கள் உண்மையை அறிந்து கொண்டு வருமாறு ஏவப்பட்டனர்.

அரை மணி நேரத்தில் எல்லாம் தெளிவாகியது. ஜாக்குலினைப் போலவே தோற்றமளித்த ஸ்மூ. பென் என்ற பெண்ணைப் பார்த்து விட்டு அந்த ஓட்டல் முதலாளி ஏமாந்து போயிருக்கிறார். செய்தி ஸ்தாபனத்தின் நிருபருக்கு 'மிஸஸ் கென்னடி' பற்றிய அந்தப் பரம இரகசியத்தை வெளியிட்டிருக்கிறார்!

இந்தச் சம்பவம் ஜனாதிபதியின் மனைவியைச் சில மணி நேரங்களுக்கு ஒரு சங்கடமான 'நிலையில் வைத்து விட்டது என்றாலும் அதே நேரத்தில் அமெரிக்க மக்களிடையே அவர் எவ்வளவு தூரம் பிரபலமடைந்திருக்கிறார் என்பதையும் உணர்த்துகிறதல்லவா?

சினிமா நட்சத்திரம் மெரிலின் மன்ரோவைக் காட்டிலும் அதிகமாகப் பிரபலமடைந்துள்ள அமெரிக்கப் பெண்மணி யாராகிலும் உண்டா என்று கேட்டால் நேற்று வரை இல்லை என்று தான் அழுத்தம் திருத்தமாகச் சொல்வார்கள் சினிமாப் பிரியர்கள். அது உண்மையுங்கூட. ஆனால் இன்று மெரிலின் மன்ரோவின் அதி தீவிரமான விசிறிகூட ஜாக்குலின் கென்னடி தான் அந்த ஸ்தானத்துக்கு உரியவர் என்பதை மிகுந்த மகிழ்ச்சியோடு ஒப்புக் கொள்வார்.



புகைப்படக் கலை நிபுணராக

மிஸ்டர் கென்னடி அமெரிக்க ஜனாதிபதியாக மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட போது மிஸஸ்கென்னடியைக் காட்டிலும் அழகிற்சிறந்த மிஸஸ் பிரஸிடெண்ட் அமெரிக்கச் சரித்திரத்திலேயே இருந்ததில்லை என்ற புகழ் ஜாக்குலினுக்குக் கிடைத்தது.

ஒரு திரைப்பட நட்சத்திரத்தைப்

பார்த்து அவரைப் போல் தோற்றமளிக்க முயலுகிறார்களோ இளைஞர்களும் யுவதிகளும், அம்மாதிரியாக மிஸஸ் கென்னடியைப் போல ஆடை அணிய வேண்டும், ஜாக்குலீனைப் போலவே கேசத்தைச் சிங்காரித்துக் கொள்ள வேண்டும், அவரைப் போலவே நம் கழுத்திலும் முத்து மாலை ஒளிர வேண்டும் என்று பலர் அவர் தோற்றத்தைப் பின்பற்ற ஆரம்பித்தார்கள். இத்தனைக்கும் ஜாக்குலின் ஆடம்பரத்துக்கு இடமளித்து விடவில்லை. ஆடை அலங்காரங்களில் எப்போதும் போல அடக்கமாகவே இருந்து வந்தார். இருந்தாலும் ஒரு சினிமா நட்சத்திரத்துக்கு இல்லாத 'மவுசு' அவருக்கு ஏற்பட்டுவிட்டது. ஆரம்பத்தில் கூறியதுபோன்ற இக்கட்டங்களும் விளைந்தன.

ஒரு முறை ஜனாதிபதியின் இருப்பிடமான 'வெள்ளை மாளிகை'யில் நடைபெற விருந்த ஒரு கமிட்டிக் கூட்டத்தில் கலந்து கொள்ள வந்த ஒரு பெண்மணி, அன்று காலையில் மிஸஸ் பிரஸிடெண்ட் அணிந்து கொண்டிருந்தது போன்ற ஆடையையே உடுத்தி வந்திருப்பது கண்டு பத்திரிகை நிருபர்கள் திகைத்தனர். நல்ல வேளையாக அந்தக் கூட்டத்தில் பங்கு கொள்ளக் கிளம்பு முன்னர் ஜாக்குலின் தமது ஆடையை மாற்றிக் கொண்டு வந்து சேர்ந்தார். நிருபர்கள் நிம்மதிப் பெருமூச்சு விட்டனர். இரண்டு பெண்மணிகளும் ஒரே பாணியில் ஒரே நிறத்தில் தைக்கப்பட்ட உடைகளில் அங்கு தோன்றியிருந்தால் ரொம்பவும் எக்கச் சக்கமாக வல்லவா போயிருக்கும் ஜனாதிபதியின் மனைவிக்கு! இப்படி ஒரு 'ஜாக்குலின் பாஷனை' ஏற்படுத்துவதை மிஸஸ்



ஓர் ஆதரிசக் குடும்பம்



தலைசிறந்த குடும்பத் தலைவியாக



தாம் பெற்ற செல்வத்துடன்

கடற்கரையில் குழந்தையுடன்



கென்னடி கொஞ்சம் கூட விரும்பவில்லை தான். அமெரிக்க ஜனாதிபதி மாளிகையில் அடியெடுத்து வைத்ததும் அவர் தமக்குத் தாமே சில தீர்மானங்களைச் செய்து கொண்டார். 'பாஷன்' கதைகளுக்கு அனுமதியளிப்பதில்லை; தேவைக்கு அதிகமாகத் தம்மை யாரும் பார்க்கவோ, தம் பேச்சைக் கேட்கவோ இடமளிப்பதில்லை என்பன அந்தத் தீர்மானங்களுள் சில.

ஆனால் அமெரிக்க ஜனாதிபதிகள் அனைவரிலும் மிகவும் குறைந்த வயதுடைய கென்னடியின் கவர்ச்சி மிக்க மனைவியாக இருந்து வரும் அவரைச் சும்மா விட்டு வைப்பார்களா, பத்திரிகை நிருபர்களும் ஆசிரியர்களும்?

சினிமா நட்சத்திரங்களின் அந்தரங்க வாழ்க்கையை மட்டுமே பிரசுரித்து வந்த பத்திரிகைகள்கூடக் கென்னடி-ஜாக்குலின் காதல் வரலாற்றைச் சித்திரிக்கத் தொடங்கின. அவர்கள் வாழ்க்கையும் இன்பமும் துன்பமும் இணைந்து உறவாடிய சிறப்பானதொரு கதையாகத் தான் அமைந்திருந்தது. இதையெல்லாம் படித்த மக்களுக்கு அந்தத் தம்பதியிடம் பற்றுதல் மேலும் அதிகமாயிற்று. ஜனாதிபதிக்குத் தினம் எட்டாயிரம் கடிதங்கள் வருவதில் அவ்வளவாக அதிசயப்படுவதற்கில்லை என்றாலும், ஜாக்குலினுக்கு ஒரு வாரத்தில் நாலாயிரம் கடிதங்களும் ஜனாதிபதியின் குழந்தைகளான ஜானுக்கும் கரோலினுக்கும் வாரத்தில் சராசரி ஆயிரத்தைந்நூறு கடிதங்களும் வந்து குவிவதை என்னவென்பது?

ஜாக்குலின் இப்படிப் பெரும் புகழும் பிரபலமும் அடைந்திருப்பதற்குப் பெருமளவுக்கு அவர் அழகு காரணம் என்பதை மறுப்



நண்பர்களிடையில் கென்னடி தம்பதி

மறைப்பதில் பயனில்லை. ஆனால் அது மட்டுமே காரணம் என்றும் கூறுவதற்கில்லை. உண்மையில் சொல்லப் போனால் இந்த அழகே ஓரளவுக்கு வினையாகவும் வந்து முடிந்திருக்கிறது அவருக்கு. அவருடைய இளமையும் கவர்ச்சியும் அவரது மற்ற குண நலன்களைப் பின்னுக்குத் தள்ளி விடுகின்றன. அவரது இனிய சுபாவத்தையும் சிறப்பான பண்புகளையும் அறிவாற்றலையும் அந்த அழகுடன் இணைத்து அவரை முழுமையாகப் பார்க்க மறுக்கும் அமெரிக்கர்களும் பலர் இல்லாமற் போக வில்லை. லட்சக்கணக்கானோர் அவரை வியந்து பாராட்டுகையில் வேறு பலர் அநாவசியமாக அவரைச் சந்தேகக் கண்களால் நோக்கி வெறுப்பை வளர்த்துக் கொண்டும் இருக்கின்றனர். ஆயினும் எண்ணிக்கை அளவில் இவர்கள் சிறுபான்மையினரே.

செல்வாக்கு மிகுந்த உயர் குடும்பத்தில் பிறந்தவர் ஜாக்குலின். 1947-ம் வருஷத்திய சிறப்பான அறிமுகம் என்ற தலைப்பில் அவரது புகைப்படம் ஒரு பத்திரிகையில் வெளியானதிலிருந்து படிப்படியாக அவர் புகழும் உயர்ந்திருக்கிறது.

1953-ல் வேகமாக முன்னுக்கு வந்து கொண்டிருக்கும் ஓர் இளம் ஸெனடரின் மனைவியாகும் பேறு பெற்றதிலிருந்தே அவர் பிரபலஸ்தர் ஒருவரின் மனைவியாக விளங்கத் தம்மைப் பழக்கிக் கொண்டு வந்திருக்கிறார்! எவ்வளவு முன்னேற்பாடு பாருங்கள்! கணவனின் திறமையில் அவ்வளவு நம்பிக்கை!

'' 'இதுதான் நியாயம், இப்படித்தான் நாம் நடந்து கொள்ள வேண்டும்' என்ற ஒரு தீர்மானத்துக்கு வந்துள்ள கணவர் அதன்படி தன்னம்பிக்கையுடன் செயலாற்றுவாரேயானால் அதைக் காட்டிலும் மனைவிக்கு மகிழ்ச்சியளிக்கக்கூடிய விஷயம் வேறு ஏதுமில்லை'' என்கிறார் ஜாக்குலின். மிஸஸ் கென்னடி ரொம்பவும் சந்தோஷமாகவே இருக்கிறார் என்பதைச் சொல்லவா வேண்டும்?

சிறு வயது முதலே கலைகளில் அவருக்கு ஆர்வம் அதிகம். படங்கள் வரைவதிலும் பாடல்கள் எழுதுவதிலும் 'பாலே' நடனம் சம்பந்தப்பட்ட புத்தகங்களைச் சேகரிப்பதிலும் ஆசை காட்டினாள் குழந்தை ஜாக்குலின். இன்றைக்கும் ஓய்வு நேரங்களில் ஓவியம் தீட்டிவருகிறார். புகைப்படக் கலையிலும் வல்லவர் அவர்.

அவருடைய மொழி ஞானமோ பலரையும் பிரமிக்க வைக்கக் கூடியது. தாய் மொழியாகிய ஆங்கிலத்தைத் தவிர பிரஞ்சு மொழியிலும் இத்தாலிய மொழியிலும் பாண்டித்தியம் பெற்று விளங்கும் அவர், சமீபத்தில் வெனிஸுலா தேசத்தில் ஸ்பானிஷ் மொழியில் பேசி அந்நாட்டு மக்களை மகிழ்ச்சி கலந்த வியப்பில் ஆழ்த்தி விட்டார்.

ஜாக்குலினுடைய கலை ஆர்வம்தான் ஜனாதிபதியின் 'வெள்ளை மாளி'கைக்குள் புகுந்ததும் அதன் தோற்றத்தை மாற்றியமைக்கும் வேலையில் அவரை ஈடுபடச் செய்தது. சரித்திரத் தொன்மை வாய்ந்த அந்த மாளிகை நவீன தோற்றம் கொண்டதாய் விளங்கக் கூடாது. பழமைப் பொலிவு கொண்டதாய் விளங்க வேண்டும் என்ற எண்ணத்தில் அவர் பெரியதொரு திட்டம் வகுத்தார். பழைய குப்பைகள் என்று இருட்டடிப்பு செய்யப்பட்டுக் கிடந்த பல அரிய பொருள்கள் தூசு துடைக்கப்பட்டுப் புது மெருகுடன் அம்மாளிகையை அலங்கரிக்கத் தொடங்கின. அதோடு நிற்கவில்லை ஜாக்குலின். ஒவ்வொரு பொருளின் தொன்மையையும் ஆராய்ந்து பார்க்க ஆரம்பித்தார். இது ஆப்ரஹாம் லிங்கன் உபயோகித்த கட்டில். இது மன்ரோ காலத்திய விளக்குகள். ஜனாதிபதிகளின் இந்தச் சிலைகள் நூறு வருஷங்களுக்கு முன்னால் உருவாக்கப்பட்டவை என்றெல்லாம் பாகுபாடு செய்து வைத்துள்ளார்.

ஒரு நாள் 'இங்கே சில பழைய குப்பை கூளங்கள் இருக்கின்றன'' என்று 'பட்லர்' கேட்பாரற்றுக் கிடந்த ஓர் அறையில் தூசு படிந்த ஓர் அலமாரியைச் சுட்டிக் காட்டினான். ஜாக்குலின் உடனே தம் ஆராய்ச்சியைத் தொடங்கினார். 1817-ல் ஜனாதிபதி மன்ரோ பிரான்ஸிலிருந்து வரவழைத்த வெள்ளிப் பாத்திரங்கள் கிடைத்தன!

இன்று ஜனாதிபதியும் அவர் மனைவியும் உணவருந்த உபயோகிக்கும் பீங்கான் தட்டுகள், கொஞ்சம் உடைந்து போனவைதான், மிகப் பழையவைதான்; ஆனால் விலை மதிக்க முடியாதவை! ஆப்ரஹாம் லிங்கனே அதிலிருந்து உணவருந்தியுள்ளாரே!

மிஸ்டர் கென்னடி பயன்படுத்த வேண்டும் என்று அவர் மனைவி வற்புறுத்திய மேஜை ராணி விக்டோரியாவினால் 1878-ல் ஜனாதிபதி ஹேய்ஸுக்கு அனுப்பப் பட்டது என்பதைக் கண்டறிந்ததோடு அதன் சரித்திரத்தையே ஆராய்ந்திருக்கிறார் ஜாக்குலின்

1852-ல் ஒரு பிரிட்டிஷ் கப்பல் ஆர்டிக் சமுத்திரத்தில் போய்ப் பனிக் கட்டிகளுக்கு

இடையில் சிக்கிக் கொண்டதாம். இரண்டு வருஷங்கள் போராடியபின் அதை மீட்க முடியாது என்று விட்டு விட்டார்களாம். பிறகு திமிங்கில வேட்டையாடும் ஓர் அமெரிக்கனின் தலைமையில் அந்தக் கப்பல் மீட்டு வரப்பட்டது. அமெரிக்கர் அக்கப்பலைச் செப்பனிட்டுப் பிரிட்டனுக்கு அனுப்பி வைத்தனர், வெகுமதியாக. பல வருஷங்களுக்குப் பின் அந்தக் கப்பல் கடல் பயணத்துக்கு லாயக்கில்லாதவாறு பிளவு கண்டது. அப்போது ராணி விக்டோரியா அக்கப்பலின் மரத்தைக் கொண்டு அழகிய மேஜை ஒன்றைச் செய்து அதை அப்போதைய அமெரிக்க ஜனாதிபதி ஹேய்ஸுக்குப் பிரிட்டனின் நன்றியைத் தெரிவிக்கும் வகையில் அனுப்பி வைத்தாராம்!

இப்படி அபாரமான கலை ஆர்வமும் அறிவாற்றலும் பெற்று விளங்கும் ஜாக்குலின் நடிப்புக் கலையிலும் தேர்ச்சி பெற்றவர் என்பது, வெள்ளை மாளிகையில் தாம் நடத்திய ஆராய்ச்சிகளை விளக்கும் வகையில் சமீபத்தில் அவர் டெலிவிஷனில் தோன்றிய போது வெளியாகியது. அந்த டெலிவிஷன் காட்சியைத் தயாரிப்பதில் முக்கிய பங்கெடுத்துக் கொண்ட 'உல்ப்' சொன்னார்: ''மிஸஸ் கென்னடி மானுடப் பிறவிதான். அவர் தவறுகளே செய்யவில்லை என்று கூற முடியாது. நாங்கள் அவரைத் திருத்தினோம். ஆனால் ஒன்றை நான் நிச்சயமாகக் கூற முடியும். நடிப்புக் கலையில் நிபுணர்களான பலருடன் நான் உழைத்திருக்கிறேன். மிஸஸ் கென்னடி ஒரு நிபுணர்தான்!''

ஜனாதிபதியின் மனைவியாக விளங்க இவையெல்லாம் இருந்தால் மட்டும் போதாது! உலகத் தலைவர்களுடன் சரிசமமாகப் பழகி அவர்களுடைய நன்மதிப்பைப் பெறும் ஆற்றல் பெற்றிருக்க வேண்டும். ஐ. நா. சபையில் தமது பூட்ஸைக் கழற்றி மேஜையை அதனால் தாக்கும் குருஷேவ் ஜாக்குலினைக் கண்டதும் பண்பின் சிகரமாக மாறுகிறார் என்றால் கேட்கவா வேண்டும்? நமது பாரதத் தலைவர் நேரு அமெரிக்கா சென்றிருந்தபோது அவரைச் சரியான முறையில் உபசரிப்பதில் மிகச்சிறிய விஷயங்களில்கூட அக்கறை காட்டினார் மிஸஸ் கென்னடி. ஓர் அகதிக் குழந்தை நேருஜிக்கு ரோஜாவை ஒரு முறை தன் அன்பளிப்பாகத் தந்ததையும் அன்று முதல் நேரு எப்போதும் ரோஜா ஒன்றை மார்பில் அணிந்து வருவதையும் நாலு வயதே நிரம்பிய தம் மகளுக்கு எடுத்துக் கூறினார் ஜாக்குலின். நேருஜி வந்ததும் அவருக்குத் தம் மகள் கரோலினைத் தலை வணங்கி ஒரு ரோஜா மலரைப் பரிசளிக்கச் செய்தார்!

நேருஜியின் இந்த அமெரிக்க விஜயத்தின் போது அமெரிக்க ஜனாதிபதி பெரியதொரு விருந்தளித்தார். அதற்கு மிஸ்டர் கென்னடி, ஸ்ரீமதி கென்னடி, நேருஜி, ஸ்ரீமதி இந்திரா ஆகிய நால்வரும் ஒன்றாக வந்து சேர்ந்த போது புகைப்பட நிபுணர்கள் அவர்களை நெருங்கினர். காமிராக்களைக் கண்டதுமே ஜாக்குலின் தம் கேசத்தை மெல்லத் தட்டி ஒழுங்குபடுத்திக் கொண்டார். நேருஜி இதைக் கவனிக்கத் தவறவில்லை. காந்திக் குல்லாவைக் கழற்றி விட்டு மெல்லத் தமது வழுக்கைத் தலையைத் தடவி விட்டுக் கொண்டதன் மூலம் 'குபீர்' சிரிப்பை எழுப்பினார் அவர்!

ஜனாதிபதியின் மனைவியானால் என்ன? பெண்மைக்குரிய தனியான இயல்புகள் மறைந்து விடுமா?

செல்வமும் அந்தஸ்தும் அழகும் பெற்று விளங்கிய போதிலும் அவற்றால் நிதானமிழக்காமல் குடும்பத் தலைவி என்ற முறையில் அவர் பொறுப்புடன் நடந்து கொண்டு வருவதே சாதாரண அமெரிக்க மக்களின் அன்புக்கு அவர் பாத்திரமாகியிருப்பதற்கு முக்கிய காரணமாகும். கணவருக்குத் தேவையானவற்றைக் கவனிப்பதிலும் குழந்தைகளைச் சரிவரப் பராமரித்து வளர்ப்பதிலும் சற்றும் கவனக் குறைவாக இருப்பதில்லை அவர். ஆகவேதான் இவ்வார கல்கி மேலட்டையில் ஜாக்குலின் கென்னடியின் வர்ணப் புகைப்படத்தைப் பிரசுரிக்கும்போது அமெரிக்க ஜனநாயகத் தலைவியை மட்டுமல்ல, தாய்க்குலத்தின் தலைவியைப் போற்றுவதாக எண்ணிப் பெருமிதமடைகிறோம். இம்மாதம் 12ந் தேதி பாரத நாட்டுக்கு விஜயம் செய்யவிருக்கும் அவரை அகமகிழ்ந்து வரவேற்கிறோம்.

நேருஜிக்கு வரவேற்பு



# சுதந்திரக் கட்சியின் எழுச்சி

**சென்னை மெயில் தினசரியின் மார்ச் முதல் தேதிப் பதிப்பில் வெளியாகியுள்ள தலையங்கத்தின் பகுதிகளை இங்கு மகிழ்ச்சியுடன் தமிழாக்கித் தருகிறோம்.**

தமிழ் நாட்டின் தேர்தல் முடிவுகள் வரத் தொடங்கியவுடன் சுதந்திரக்கட்சியின் ஸ்தாபகத் தலைவர் மிகவும் மனச் சோர்வுடன் எழுதினார், ''இந்தத் தோல்விக்குப் பிறகு மீண்டும் ஒன்று சேர்ந்து எதிர்க்க நமக்குப் பொறுமையும் மனோ திடமும் உள்ளனவா என்பதே கேள்வி'' என்று. அதன்பின் விரிவாக வெளியாகியுள்ள அகில இந்தியத் தேர்தல் முடிவுகள் அவருடைய உள்ளத் தளர்ச்சியை நிச்சயமாக நீக்கும்; அது மட்டுமின்றி வருங்காலத்தைக் குறித்து அவரிடம் பொங்கி எழும் நம்பிக்கையையும் தோற்றுவிக்கும்.

மூன்றே ஆண்டுகளான ஒரு கட்சி— முதல் முறையாக மக்களின் வாக்கைக் கோரும் ஒரு கட்சி — என்ற முறையில் பார்த்தால் சுதந்திரக் கட்சியானது, அதன் தலைவர்கள் எவ்வளவு எதிர்பார்த்திருக்கலாமோ, அதைக் காட்டிலும் சிறப்பாக வெற்றி பெற்றுள்ளது. சுதந்திரக் கட்சியின் ஸ்தாபன அமைப்பு பலவீனமானது. கடக்கச் சாத்தியமற்ற மாபெரும் தடைகளை அது சமாளிக்க வேண்டியிருந்தது. எனினும் எல்லா ராஜ்ய சட்டசபைகளிலுமாகச் சேர்த்துப் பார்த்தால் மற்ற எந்த எதிர்க் கட்சியையும் விட சுதந்திரக் கட்சிதான் அதிக ஸ்தானங்கள் பெற்றுள்ளது. கம்யூனிஸ்ட், பிரஜா சோஷலிஸ்ட், ஜன சங்கம் முதலிய கட்சிகளைவிட அது அதிக ஸ்தானங்கள் அடைந்துள்ளது. ராஜஸ்தானம், பீஹார், குஜராத் முதலிய ராஜ்யங்களில் அதுதான் முக்கியமான எதிர்க் கட்சியாக உருவாகியுள்ளது. ஆந்திரத்திலும் உத்தரப் பிரதேசத்திலும் அது கணிசமான வெற்றி கண்டுள்ளது. தமிழ் நாட்டிலும் அதனுடைய அபேட்சகர்களில் பலர் காங்கிரஸ் அபேட்சகர்களுக்கு அடுத்தபடியாக வாக்குகள் பெற்றுள்ளனர்.

சுதந்திரக் கட்சியின் வெற்றி, கூறும் படிப்பினை வெளிப்படையானது. ''சுதந்திரம் பெற்றுப் பதினைந்து ஆண்டுகள் ஆகியும் இந்திய மக்கள் ஆழ்ந்த ஏமாற்ற உணர்ச்சியை அனுபவித்துவருகிறார்கள்'' என்று சுதந்திரக் கட்சியின் தேர்தல் அறிக்கை தொடங்குகிறது. இந்த வாசகத்தின் உண்மையைச் சுதந்திரக் கட்சியின் கணிசமான வெற்றி மட்டுமின்றிப் பல ராஜ்யங்களில் காங்கிரஸின் பெரும்பான்மை பலம் குறைந்திருப்பதும் நிரூபிக்கிறது. பிரதம மந்திரி சுதந்திரக் கட்சியின் தேர்தல் அறிக்கை பற்றி என்ன கருத்தை வெளியிட்ட போதிலும், அது அறிவுக்குப் பொருந்திய ஒரு விரிவான அறிக்கை, வாக்காளர்கள் ஒரு பெரும் பகுதியை ஈர்த்துள்ள ஓர் அறிக்கை என்று சுதந்திரக் கட்சியானது தற்போது முடிவு செய்யலாம். அக்கட்சியின் கொள்கைகள் சரியா தப்பா என்பது வேறு விஷயம். ஆனால் அவை திட்டவட்டமாகவும் மனப் பூர்வமாகவும் வெளியிடப்பட்டுள்ளன. ஆளும் கட்சி பின்பற்ற விரும்பும் கொள்கைகளிலிருந்து தெளிவாகப் பாகுபடுத்தப்பட்ட மாற்றுக் கொள்கைகள் அவை. எனவே சுதந்திரக் கட்சியானது காங்கிரஸை ஆட்சியிலிருந்து விலக்கி நாட்டு நிர்வாகத்தை ஏற்றுக் கொள்ளக் கூடிய சாத்தியக் கூறுகளை மனத்தில் கொண்டு பார்த்தால், அது பிரதான எதிர்க்கட்சியாக உருப்பெற்றிருப்பதை வரவேற்க வேண்டும். அதிகாரத்தைத்தான் கைவிடவேண்டிய நிலையே தோன்றாது என்ற எண்ணத்துடன் ஒரு கட்சியானது ஏகபோக அதிகாரம் ஒருபோதும் நாட்டு நலனுக்கு உகந்ததாகாது.

சுதந்திரக் கட்சி வேரூன்றி விட்டது என்பது பற்றிக் காங்கிரஸ் ஐயமே கொள்ள வேண்டியதில்லை. இதர எதிர்க் கட்சிகளில் பெரும்பாலானவை சோஷலிஸத்தையே ஏற்பதால், சுதந்திரக் கட்சி வெற்றி பெற்றுள்ள அளவுக்கு வாக்காளர்கள் காங்கிரஸ் மட்டுமின்றி சோஷலிஸ்ட், பிரஜா சோஷலிஸ்ட், கம்யூனிஸ்ட் முதலிய கட்சிகளுக்கும் எதிரிடையான கொள்கைகளை ஆதரித்திருக்கிறார்கள் என்று கருதலாம். தேர்தல்கள் கூறும் படிப்பினைகளைச் சுதந்திரக் கட்சித் தலைவர்கள் உணர்ந்து பயன் பெறுவார்கள் என்று நம்பலாம். அதை ஒட்டி அவர்கள் சுதந்திரக் கட்சிக் கொள்கைகளை ஏற்கும் சுயேச்சை அபேட்சகர்களையும் கட்சியில் சேர்த்துக் கொள்வார்கள் என்றும் எதிர்பார்க்கலாம்!

எந்தக் கொள்கைகளை ஆதரிக்கலாம் என்று தயங்குபவர்களைத் தம்வழிப் படுத்த அடுத்த ஐந்தாண்டுகளில் சுதந்திரக் கட்சியினருக்கு நிறைய அவகாசம் உள்ளது. அதற்குள் மற்றக் கட்சிகளும் தங்களுடைய பலவீனத்தையும், தாங்கள் தனித்து இயங்குவது வியர்த்தமே என்பதையும் உணர்ந்திருக்கும். இரு கட்சி அமைப்பு ஏற்பட்டால் தான் இன்று காணும் அடக்குமுறை விலகி நாட்டுக்கு நல்ல நிர்வாகம் கிடைக்கும். தன்னால் இத்தகைய இரு கட்சி அமைப்பு ஏற்பட வழி வகுக்க முடியும் என்ற நம்பிக்கையை அளித்துள்ளது சுதந்திரக் கட்சி. சுதந்திரக் கட்சியின் வெற்றியை வாக்காளர்களின் அரசியல் அறிவு பக்குவமாகி வருவதற்கு ஒரு புகழ் மாலை என்றே கருதலாம்.



# மணிபல்லவம்

நா. பார்த்தசாரதி

## 6. பிறந்த கதை

புத்த பீடிகை வணக்கமும், கோமுகிப் பொய்கைக் கரையில் தத்துவஞானிகளைச் சந்தித்துப் பேசுதலும், வைசாக பூர்ணிமையின் கோலாகலங்களில் கலந்து கொள்ளுதலுமாக அருட் செல்வ முனிவர் பிச்சை கொடுத்திருந்த அந்த ஒரு நாளும் மெல்லக் கழிந்து போய் விட்டது. அன்று பகலில் மணிபல்லவத்து வீதிகளில் விசாகையும் புத்ததத்தரும் உடன் வர வளநாடுடையாரும் ஒலியனும் அவன் மனைவி பதுமையும் சூழ்ந்து துணையாகக் கொண்டு சுற்றியபோது இளங்குமரன் பல வேறு நாடுகளிலிருந்து வந்திருந்த தத்துவ ஞானிகளையெல்லாம் சந்தித்தான். சிறிதும் பெரிதுமாக அலை எறியப் பெற்றும், அசையாமல் கலங்காமல் 'நான் நிற்பதுதான் எனக்கு நிலையான உறுதி' என்று நிற்கும் இந்தத் தீவைப்போல அறிவின் பலமே பலமாக எதையும் தாங்கி நின்று சிரிக்கும் அந்தத் தத்துவ ஞானிகளைப் பார்த்தபோது இளங்குமரனுக்குப் பெரிதும் ஆறுதலாக இருந்தது. மனிதனுடைய மனத்தில் ஏற்படும் நோய்களுக்கு மருந்து வேறெங்கோ இருப்பதாகத் தேடித் தவித்துக் கொண்டிருப்பது பேதைமை. தனக்குள்ளே ஏற்படும் திடமான சிந்தனைகளே தன் மனத்துக்குச் சுகம் என்பதைப் போலத் தங்கள் உள்ளத்தில் புதுமைகளைத் தேடி உலகத்துக்குத் தரும் அந்த ஞானிகளை எண்ணி எண்ணி வணங்கினான் இளங்குமரன். கடற்பரப்பின் மேலே நீலின் கீழ்க்கோடியில் நிலா எழுந்த போது, அந்த வேளை வருவதற்காகவே அதுவரை அவனருகில் காத்துக் கொண்டிருந்தவர்போல், "மணிநாக புரத்துக்குப் புறப்பட வேண்டிய நேரம் வந்து விட்டது தம்பி!" என்று நினைவூட்டினார் வளநாடுடையார். இளங்குமரன் புறப்படச் சம்மதம் என்பதற்கு அடையாளமாகத் தலையசைத்தான்.

'இதுதான் வாழ்க்கை! நாம் ஏதோ ஒரு திசையில் ஏதோ ஒரு நோக்கத்தோடு நின்று கொண்டிருக்கும் போது நம்முடைய நினைவில் அந்த விநாடிவரை தோன்றாத ஏதேனும் ஒரு புதிய திசையைக் காண்பித்து அந்த வழியில் நாம் புறப்பட வேண்டியிருப்பதன் அவசியத்தை யாராவது நமக்கு நினைவுபடுத்திக் கொண்டே வந்து சேருகிறார்கள்' என்று எண்ணியபடியே விசாகையிடமும் புத்ததத்தரிடமும் விடைபெற்றுக் கொண்டான் இளங்குமரன். அவர்களும் மகிழ்ச்சியோடு அவனுக்கு விடை கொடுத்தார்கள்.

"நானும் எங்கள் பௌத்த சங்கத்தைச் சேர்ந்தவர்களும் கூட விரைவில் இங்கிருந்து பூம்புகாருக்குத் திரும்பி விடுவோம். திரும்பும்போது நாங்கள் மணிநாகபுரத்தில் இறங்க மாட்டோம். ஆயினும் நான் பூம்புகாரில் உங்களைச் சந்திப்பேன்" என்றாள் விசாகை.

புத்த தத்தர் இளங்குமரனை வாழ்த்தினார். ஓவியன் மணிமார்பன் அங்கிருந்தே பாண்டி நாட்டுக்குப் புறப்படுவதாகச் சொன்னான்.

"ஐயா! இங்கிருந்தே பாண்டிநாட்டுத் துறைமுகப் பட்டினமாகிய கொற்கைக்குப் பல கப்பல்கள் புறப்படுகின்றன. மணிபல்லவத் தீவையும், வைசாக பூர்ணிமை விழாவையும் பார்க்க வேண்டும் என்ற ஆசையால் இந்திர விழாவுக்கு வந்திருந்த நானும் என் மனைவியும் பூம்புகாரிலிருந்து உங்களோடு இங்கே புறப்பட்டு வந்தோம். விரும்பியபடி இந்தச் சிறிய ஞானத் தீவையும் அறிவுத் திருவிழாவையும் கண்டு களித்தாயிற்று. இன்றோடு நாங்கள் மதுரையிலிருந்து புறப்பட்டு ஏறக்குறைய இரண்டு திங்கள் காலத்துக்கு மேல் கழிந்து விட்டது. என்னுடைய வயது முதிர்ந்த பெற்றோர்கள் நானும் என் மனைவியும் திரும்பி வருகிற நாளை எதிர்பார்த்து ஆவலோடு காத்துக் கொண்டிருப்பார்கள். கொற்கைத் துறைமுகப் பட்டினத்தில் இறங்கிப் போகிற போக்கில் அங்கு உள்ள சலாபத்தில் நடைபெறும் புகழ்பெற்ற முத்துக் குளிப்பு விழாவையும் பார்த்து விட்டு நாங்கள் மதுரை திரும்பி விடலாம் என்று எண்ணுகிறோம்....." என்றான் மணிமார்பன். அவன் குரலில் ஊர் திரும்பும் ஆவல் மிகுந்து தொனித்தது.

ஆனால் இளங்குமரனும் வளநாடுடையாரும் ஓவியனுக்கு விடை கொடுக்க மறுத்து விட்டார்கள். இளங்குமரன் ஓவியனை அன்போடு தழுவிக் கொண்டு அவனிடம் கூறினான்:

"நீ எங்களோடு மணிநாகபுரத்துக்கு வரவேண்டிய அவசியம் இருக்கிறது மணிமார்பா! எனக்கு மிகவும் வேண்டியவராகிய குலபதி என்னும் மணிநாகபுரத்து இரத்தின வாணிகனுடைய மாளிகையில் அற்புதமான ஓவிய மாடம் ஒன்றிருக்கிறது. அதை நீ காண வேண்டும். வேறு பல காரணங்களாலும் நீ இன்னும் சில நாட்களுக்கு என்னோடு உடனிருக்க வேண்டும்."

இளங்குமரனுடைய இந்த அன்பான வேண்டுகோளைப் புறக்கணிக்க முடியாமல் மணிமார்பனும் அவன் மனைவியும் அவர்களோடு மணிநாகபுரத்துக்குக் கப்பலேறினார்கள். அன்று மணிபல்லவத்தைச் சூழ்ந்துள்ள கடலில் நீர்ப் பரப்பே தெரிவதற்கு இடைவெளியின்றி எங்கு நோக்கினும் அலங்கரிக்கப் பெற்ற கப்பல்களும் மரக்கலங்களும் போய்க் கொண்டிருந்தன. நிலா ஒளியின் கீழ் அந்த அழகிய சூழ்நிலையில் அவர்கள் மணிநாகபுரத்துக்குப் புறப்பட்டிருந்தார்கள். பரபரப்பான சூழ்நிலையில் முதல் நாள் இரவு அருட்செல்வ முனிவரிடம் இந்த ஒரே ஒரு நாளைப் பிச்சை கேட்டுப் பெற்றுக் கொண்டு அவசரமாக இந்தத் தீவுக்குப் புறப்பட்டு வந்ததும் இந்த ஒரு நாள் கழிந்து போன வேகம் தெரியாமல் இப்படிக் கழிந்து போனதும், இப்போது மீண்டும் மணிநாகபுரத்துக்குத் திரும்பிப் போய்க் கொண்டிருப்பதுமாக ஒவ்வொன்றாகவும் விரைவாகவும் நடக்கும் தன்னுடைய வாழ்க்கையின் நிகழ்ச்சிகளை எண்ணிய போது இளங்குமரனுக்கு மிகவும் விந்தையாக இருந்தது.

'தாயின் கருவிலிருந்து புறப்பட்டு வந்து இந்த மண்ணில் குதித்த முதல் விநாடி தொடங்கி உயிர் வாழ்க்கையே ஒரு பெரிய யாத்திரைதான் போலிருக்கிறது! எங்கும் நடக்காமல் தங்கி விடும் போது மனத்தினாலும் எங்கும் தங்காமல் நடக்கும்போது கால்களாலும் மாறி மாறி எதை நோக்கியோ யாத்திரை செய்து கொண்டே இருக்கிறோம். கால்களால் முடியாதபோது எண்ணங்களாலும், எண்ணங்களால் முடியாதபோது கால்களாலும் எங்காவது சென்று கொண்டே இருக்கிறோம்' — என்று எண்ணியபடியே நிலாவையும் வானத்தையும் ஏக்கத்துடனே பார்த்தான் இளங்குமரன்.

அப்போது அவனைப் போலவே நிலவையும் கப்பல்கள் செல்லும் கடலையும் தீபாலங்காரங்களோடு நாற்புறமும் மின்னும் தீவுகளையும் பார்த்துக் கொண்டே அருகில் நின்ற மணிமார்பன் அதே ஏக்கத்தோடு தன் அனுபவம் ஒன்றை இளங்குமரனிடம் கூறினான்:

"இந்த உலகில் எத்தனையோ காட்சிகள் நம்முடைய பார்வைக்கும், நினைப்

புக்கும், அழகாகவும் நயமாகவும் தோன்றிப் படைப்புக்கு மட்டும் உயர்ந்தவையாகவும் அரியவையாகவும் போய் மேலே நின்று கொள்கின்றன. இப்போது இந்த வானமும், கடலும், தீவுப் பகுதிகளும் ஓவியத்துக்கு உரிய அழகுக் காட்சிகளாக எனக்குத் தோன்றுகின்றன. இவற்றை நான் நினைப்பிற்கொண்டு வந்து படைக்க முயலும்போது எப்படியோ?''

''எப்படியானாலும் அதுதான் இயற்கையின் வெற்றி மணிமார்பா! உன்னுடைய நிறங்களை நீ இயற்கையிலிருந்து கற்றாய். உன்னுடைய நிறங்களால் நீ வரையப் போவது எதுவோ அதையும் இயற்கையிலிருந்து காண்கிறாய். எல்லா விதத்திலும் உனக்கு ஆசிரியனாக இருக்கும் ஒரு பொருள் உன்னைவிட உயர்ந்து நிற்பது இயல்புதானே?'' என்றான் இளங்குமரன். இவ்வாறே மணிமார்பனும் இளங்குமரனும் பல செய்திகளைப் பற்றி உரையாடிக் கொண்டே சென்றார்கள். மணிமார்பனின் மனைவி தொலைவில் தெரியும் நிலாவொளி அழகோடு கூடிய தீவுகளைப் பார்த்துக் கொண்டிருந்தாள். வீரசோழிய வளநாடுடையார் மனத்தில் ஏதோ திட்டமிடும் ஆழ்ந்த சிந்தனைகளோடு தளத்தில் அமர்ந்திருந்தார். அன்றைய நிலா உச்சி வானத்தை அடைவதற்கு ஓரிரு நாழிகைகளுக்கு முன்பே அவர்கள் மணிநாகபுரத்தை அடைந்து விட்டார்கள். அவர்களை எதிர்கொண்டு அழைத்துப் போவதற்காகக் குலபதி சங்குவேலித் துறையில் வந்து காத்திருந்தான். துறையிலிருந்து அவர்கள் எல்லாரும் குலபதியின் மாளிகைக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அந்த மாளிகை ஒவ்வொரு கணமும் அவர்கள் வரவையே எதிர்பார்த்துக் கொண்டிருப்பது போல் பரபரப்பாயிருந்தது. மணிநாகபுரத்து மாளிகைக்குத் தன்னோடு உடன் வந்திருந்த எல்லாரையும் மாளிகையின் கீழ்ப் பகுதியில் முகற் கூடத்திலேயே தங்கியிருக்கச் செய்து விட்டு இளங்குமரன் தான் மட்டும் ஓவிய மாடத்துக்குச் செல்லும் படிகளில் ஏறினான். எதை உணர்வதற்காகச் சென்று கொண்டிருந்தானோ, அதற்காக மனம் விரைந்தாலும் அந்தப் படிகளில் ஏறும் போது அவனுடைய கால்கள் தயங்கித் துவண்டன. கடைசிப் படியில் போய் அவன் தலை நிமிர்ந்த போது அங்கு முன்பே வந்து நின்று கொண்டிருந்த அருட்செல்வ முனிவர் கைகளை நீட்டி அவனைத் தழுவிக்கொண்டார்.

''என்னிடம் சொல்லியபடியே திரும்பி வந்து விட்டாய்! இனி நான் சொல்லிய படி நீ செய்ய வேண்டும்'' என்று கூறிக் கொண்டே அவனை அந்த ஓவிய மாடத்தின் ஒரு கோடியிலிருந்த தம்முடைய அறைக்கு அழைத்துக்கொண்டு போனார் முனிவர். அந்த அறையில் நடு மேடையில் ஓர் அகல் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அருகே ஏட்டுச் சுவடியும் வைக்கப்பட்டிருந்தது. இளங்குமரனை அறைக்கு உள்ளே அழைத்துக் கொண்டு போன முனிவர் விளக்கின் அருகே மேடையில் அவனை அமரச் செய்தபின் அங்கே கிடந்த சுவடியை எடுத்து அவன் கைகளில் கொடுத்துத் 'தொடங்கலாம்' என்றார். அவர் அளித்த அந்த ஏடுகளைக் கையில் வைத்துக் கொண்டே சலனம் அடைந்த மனத்தோடு எதற்காகவோ சிறிது தயங்கினான் இளங்குமரன்.

''எதற்காகவும் தயங்காதே! இந்த ஏடுகளில் நீ தெரிந்துகொள்ள வேண்டிய குறிப்புக்களை இருநூறு வெண்பாக்களாகவும், உரைச் சுருக்கமாகவும் எழுதியிருக்கிறேன். அவற்றைப் படித்துப் பொருள் விளங்கிக் கொண்டு நீ தெளிவு பெறுவதற்கு நாளைக் காலை வரை ஆகலாம். அதோ நிலாவும் உச்சி வானத்துக்குப் போய் விட்டது. இனியும் தாமதம் செய்யாமல் இந்த ஏடுகளைப் படிக்கத் தொடங்கி விடு'' என்று கூறி விட்டு அந்த அறைக் கதவுகளை இழுத்து அடைத்து வெளியே தாழிட்டுக் கொண்டு போய் விட்டார் அவர். 'மனம் வெதும்பி வாட நேர்கிற துன்ப அநுபவங்களையும் தாங்கிக்கொண்டுதான் வளர வேண்டும் என்று தன் மனத்தை மீண்டும் உறுதி செய்து கொண்டவனாக அந்தச் சுவடியில் முதல் ஏட்டிலிருந்த முதல் பாட்டைப் படிக்கலானான் இளங்குமரன். அந்த முதல் ஏடானது மிகவும் அண்மையில் எழுத்தாணியால் கீறப்பட்டிருக்கலாம் என்று தோன்றியது.

'என் மனத்தில் சினம் கனல வேண்டும் என்ற உட்கருத்தோடு என்னை நோக்கிச் சொல்வது போலவே முனிவர் இந்த வெண்பாவை எழுதியிருக்கிறார்போலும்' என்று எண்ணியவாறே மறுபடியும் அதைப் படித்தான் இளங்குமரன்.

தாயைச் சிதைத்த தனிக்
கொடுமை யொன்றன்றி
நீயும் நினதரிய செல்வமுமே—
போயொழியத்
தீமை பலசெய்த சிரமிவை நீறுக்கத்
தீயென் றெழுக சினம்

அடுத்த ஏட்டைப் புரட்டினான் இளங்குமரன். கோவை செய்யப்பட்டிருந்த பட்டுச் சரட்டிலிருந்து ஒவ்வொரு ஏடாகக் கழன்ற போது அவன் மனத்தின் நீண்ட நாள் சந்தேகங்களும் ஒவ்வொன்றாகக் கழன்றன. கல்வியிலும் தத்துவ ஞானத்திலும் அவன் தனக்குள் சேர்த்திருந்த மெல்லிய

உணர்வுகள் நெருப்புக் காயக் காய வற்றிக் குறையும் நீர் போலக் குன்றின. அந்த ஏட்டுச் சுவடிப் பாடல்களிலிருந்து கால வெள்ளத்தின் அடி ஆழத்தில் மூழ்கிப் போயிருந்த பல சம்பவங்கள் அவனுக்குத் தெரிந்தன. தான் பிறந்த கதையும் தன் தாய் தந்தை இருவரும் இறந்த கதையும் ஒருங்கு தெரிந்தது. தான் பூம்புகாரில் அருட்செல்வ முனிவரின் தவச் சாலையில் நினைவு தெரியாச் சிறு பருவத்தினனாக வளர்ந்து கொண்டிருந்த போது தன்னைக் காண்பதற்காகவும் தனக்கு ஐம்படைத் தாலியும் பொன் அரைஞாணும் அணிவித்துப் பிறந்தநாள் மங்கலமும் வெள்ளணிவிழாவும் கொண்டாடி மணிநாகபுரத்துக்குத் தன்னை அழைத்துப் போவதற்காகவும், நாகநாட்டிலிருந்து பூம்புகாருக்குப் புறப்பட்டு வந்த தன் அருமைத் தாய் மாமனாகிய காலாந்தக தேவரைக் கொலைகாரப் பாவிகள் ஏமாற்றி அழைத்துப் போய் வன்னி மன்றத்து இருளில் கொலை செய்ததையும் அறிந்த போது துக்கமும் கொதிப்பும் ஒருங்கு அடைவதை இளங்குமரனால் தவிர்க்க முடிய வில்லை. அந்த ஏடுகளில் அப்போது படித்து அறிந்து கொண்டவற்றிலிருந்து அவன் தெரிந்து கொண்டவற்றை ஒன்றாகக் கூட்டி வரிசையாக எண்ணிய போது அவை நிகழ்ந்த காலத்தில் எப்படி நிகழ்ந்திருக்குமோ அப்படியே அவன் கண்முன் காட்சிகளாகத் தோன்றலாயின.

## 7. வெறுப்பு வளர்ந்தது

அவனுடைய அருமைத் தாய்க்கு இளங்குமரன் மகனாகப் பிறப்பதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பு அந்தக் குடும்பத்தில் நடந்த நிகழ்ச்சி இது. அந்தக் குடும்பம் பூம்புகாரின் பெரிய வாணிகர் ஒருவரைப் பகைத்துக் கொள்ள நேர்ந்ததும் அதன் காரணமாக ஆள்வலிமையும், செல்வாக்குமுள்ள அந்த வாணிகரின் மனத்தில் வெறுப்பும் குரோதமும் வளர்ந்ததும் மறக்க முடியாதவை. தொடர்ந்து கெட்ட கனவு காண்பது போன்ற வேதனையான அநுபவங்களை அந்தக் குடும்பத்துக்கு அளித்தவை. அந்த வேதனை தொடங்கிய நாளிலிருந்து அந்தக் குடும்பத்துக்கும் அதன் வழிமுறையினருக்கும் போதாத காலம் பிறந்தது. மனிதனுடைய வெறுப்புக்கு எவ்வளவு ஆற்றல் உண்டு என்பதைக் காட்டும் கதை அது.

முப்பது ஆண்டுகளுக்கு முன்பு ஒரு வைசாக பூர்ணிமைக்கு இரண்டு நாட்களிருக்கும்போது பூம்புகாரிலிருந்து அலங்காரமயமான பெரிய மரக்கலம் ஒன்று நாக நாட்டுப் பெருந் தீவுக்குப் புறப்பட்டிருந்தது. கடலில் மிதந்து கொண்டே நகரும் மாடமணி மாளிகை போன்ற அந்த மரக்கலத்தில் மூவர் பயணம் செய்தனர். பயணம் செய்தவர்களில் முதன்மையானவர் பட்டினப்பாக்கத்து எட்டிகுமரன் பெருநிதிச் செல்வர். அவருடைய நண்பராகவும் அமைச்சராகவும் சில சமயங்களில் ஊழியராகவும் சமயத்துக் கேற்றபடி அவருக்குப் பயன்படக் கூடிய ஒற்றைக் கண் மனிதர் ஒருவரும் மூன்றாவதாக ஏழைக் கவிஞன் ஒருவனும் அந்த மரக்கலத்தில் அவரோடு பயணம் செய்தார்கள். கப்பல் பயணத்தின்போது பெருஞ் செல்வரும் திருமணமாகாத இளைஞருமாகிய அந்தப் பெருநிதிச்செல்வருக்கு உற்சாகமூட்டும் படியான கவிதைகளைப் புனைந்து பாட வேண்டும் என்பது அந்தக் கவிஞனுக்கு இடப்பட்டிருந்த பணி. அரசர்களுக்கு அவைக் கவிஞர்களைப் போலப் பூம்புகாரின் வாணிக மன்னர்களும் இப்படித் தங்கள் மாளிகைகளில் எல்லாம் சிறந்த கவிகளை வைத்துப் பேணி வருவது வழக்கமாயிருந்தது. சொந்த மகிழ்ச்சிக்காகக் கிளியையும் புறாவையும் கூண்டில் அடைத்து வளர்ப்பதைப் போலக் கவிகளையும் வளர்த்தார்கள் இந்தச் செல்வர்கள்.

சோழர்கோநகரான பூம்புகாரின் மிகப் பெரிய வாணிகரும் திருமணமாகாத இளைஞருமாகிய எட்டிகுமரன் பெருநிதிச் செல்வரின் மாளிகையில் அவைக் கவிஞனாக வாய்த்திருந்த இளைஞன் தான் படைக்கும் கவிதைகளைப் போலவே வனப்பு வாய்ந்த கட்டழகிய தோற்றத்தை யுடையவன். அமுதசாகரன் என்று தோற்றத்திலன்றிப் பெயரிலும் இனிமையைப் பெற்றிருந்தான் அவன். கடலைப்போலப் பரந்த மனம். குழந்தையைப் போலக் கள்ளங் கபடறியாத வெள்ளைத்தனம். உலகத்து அழகுகள் எல்லாம் தன்னுடைய கவிதைக்கு மூலதனம் என்று உரிமையுடனே எண்ணும் வசீகரமான நினைவுகள். அந்த நினைவுகளோடு பரந்த அநுபவங்களைத் தேடி உலகத்தைப் பார்க்கும் வசீகரமான கண்கள். வசீகரமான முகம். இந்த உலகத்து அழகுகளையெல்லாம் எப்போதுமே ஒன்றுவிடாமல் அங்கீகரித்துக் கொள்வதுபோல வசீகரமான புன்னகை. இவை யெல்லாம் சேர்ந்துதான் அமுத சாகரன் என்னும் இளம் பருவத்துக் கவியா யிருந்தன.



பட்டினப்பாக்கத்து எட்டிகுமரன் பெருநிதிச் செல்வரே இந்த அழகிய கவிஞனின் தோற்றத்திலிருந்த வனப்பைத் தன்னுடைய குலப் பகைமையாக எண்ணும்படியான விளைவு அந்த முறை அவர்கள் நாகநாட்டுப் பெருந்திவுக்குக் கடற்பயணம் சென்ற போது ஏற்பட்டது. அந்த விளைவுக்குப் பின் கவியின் போதாத காலமும் எட்டிகுமரனுடைய குரோதமும் ஒன்றாகப் பிறந்து வளரத் தொடங்கி விட்டன.

கடல் கடந்த நாகநாட்டுப் பெருந்தீவிலுள்ள இரத்தின வாணிகர் குடும்பத்துப் பெண்ணொருத்தி இணையற்ற பேரழகி என்று கேள்விப்பட்டு அவளுடைய ஓவியத்தையும் இரகசியமாக வருவித்துப் பார்த்தபின் அவளைத் தான் மணம் புரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவலோடு எட்டிகுமரன் பயணம் புறப்பட்டிருந்தார். அந்தக் காலத்தில் சோழ அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களும், பெரு மன்னர்களும்கூட இந்த வகையில் நாகநாட்டுப் பெண்களின் அழகில் மயங்கிப் போய் இரகசியமாக நாக நங்கையர்களைக் கந்தர்வ விவாகம் செய்து கொண்டு திரும்புவது வழக்கமாயிருந்தது. அவரும் அந்த ஆவலினால்தான் புறப்பட்டிருந்தார்.

வைசாக பூர்ணிமையன்று நாக நாட்டு மணிநாகபுரத்தில்போய் இறங்கிய பின்பே கவி அமுதசாகரனுக்கு அவர்கள் பயணத்தின் நோக்கம் தெளிவாகப் புரிந்தது. எல்லாக் கடற்பயணத்தின்போதும் உடன் புறப்படுகிற வழக்கப்படிதான் இந்தப் பயணத்தின்போதும் அவன் புறப்பட்டிருந்தான். மணிநாகபுரத்தில் இறங்கிப் பொன்னும் மணியும், முத்துமாகப் பரிசுப் பொருள்களை ஊழியர்கள் பின்னால் சுமந்துவர அவர்கள் மணம் பேசப் புறப்பட்ட கோலத்தை உடன் சென்று கண்ட போதுதான் கவி எல்லாவற்றையும் தெரிந்து கொண்டான். அந்த நாக நங்கையின் பெயர் மருதி என்று சொன்னார்கள். அவள் தமையனாகிய காலாந்தக தேவரை எட்டிகுமரன் முதலில் சந்தித்து மணம் பேசினார். காலாந்தக தேவரும் பெரிய இரத்தின வாணிகர் என்று அமுதசாகரன் அந்த மாளிகையைப் பார்த்ததுமே அறிந்து கொண்டான். விலைமதிப்பற்ற பரிசுப் பொருள்களை எதிரே வரிசையாகக் குவித்துக் கொண்டு எட்டிகுமரனும் அவருடைய அமைச்சராகிய நகைவேழம்பர் என்னும் ஒற்றைக் கண் மனிதரும் மருதியின் தமையனாகிய காலாந்தக தேவரிடம் மணப் பேச்சுப் பேசிக் கொண்டிருக்கும் போது தானும் அங்கு அவர்களோடு உடன் அமர்ந்திருக்கக் கூசிய கவிஞன் அந்த மாளிகையையும், அதன் சுற்றுப் புறத்திலுள்ள பூம்பொழில்களையும் சுற்றிப் பார்க்கலாம் என்ற ஆசையில் அவர்களை விட்டுத் தனியாய்ப் பிரிந்து புறப்பட்டான். பார்த்த இடமெல்லாம் இரத்தினமயமான அந்த மாளிகையின் காட்சிகள் அவன் மனத்தில் உல்லாச நினைவுகளை மலரச் செய்தன. அந்தக் காட்சிகளாலும் நெடுந் தொலைவு பயணம் செய்து வந்து காணும் புதிய நகரத்தின் தோற்றப் பொலிவுகளாலும் அவன் மனத்தில் வசீகரமான எண்ணங்கள் பொங்கி ஏதாவது கவிதை வடிவில் அந்த எண்ணங்களை வெளியிட வேண்டும் என்றும் தவிப்புப் பிறந்தது. இப்படிப்பட்ட இவ்விதமான சௌந்தரியத் தவிப்போடு அந்த மாளிகைக்கும் அதை அடுத்தாற்போல் இருந்த நாக தெய்வக் கோட்டத்துக்கும் நடுவிலே உள்ளதொரு மலர்ப்பொழிலில் அமுதசாகரன் நுழைந்தபோது அங்கே ஓர் அற்புதமான காட்சியைக் கண்டான்.

அந்தப் பொழிலில் பூத்த மலர்களுக்கு நடுவே உயிருள்ள பெண் மலராய்க் கந்தர்வ உலகத்திலிருந்து மண்ணில் இறங்கி வந்தவளைப் போன்ற



தோற்றத்தை உடைய யுவதி ஒருத்தி தனக்குள் சிரித்துக் கொண்டும் பாடிக் கொண்டும் பந்தாடிய வண்ணம் இருந்தாள். அடர்ந்த பூங்கொடி ஒன்றின் பின் ஒதுங்கி நின்று இந்தக் காட்சியைச் சிறிது நேரம் பார்த்த அமுத சாகரன் தன்னை மறந்த நிலையில்

**சந்தநகை சிந்தியிதழ் கொஞ்சிவர**
**இந்துநுதல் நொந்துவியர் முந்திவரக்**
**கொந்தளக பந்திமிசை முல்லைமலர்**
**தந்தமணம் மண்டியெழ முந்திவரு**
**பந்துபயில் நங்கையிவள் கொண்ட எழில்**
**நெஞ்சிலலை பொங்கியெழ வந்தமதியோ?**

என்று தன் மனத்தில் தோன்றியதை மெல்லிய குரலில் பாடி விட்டு நிமிர்ந்த போது அந்தப் பெண்ணே பந்தாடுவதை நிறுத்தி விட்டு அவன் எதிரே வந்து நின்றாள். விநாடிக்கு விநாடி பார்வைக்குப் பார்வை புதிய ஆச்சரியங்களைச் சிருஷ்டித்துக் கொண்டு பார்ப்பதுபோல் அவனை நோக்கி அவள் மருண்டாள். மகிழ்ந்தாள். ஆவலடங்காத கண்களால் பார்த்துப் பார்த்து அந்தப் பார்வையில் அவன் கண்களும் தன்னோடு எதிர் கொண்டு கலந்தபோது அவள் நாணித் தலைகுனிந்தாள். தரையைப் பார்த்தாள். நிமிர்ந்தும் நிமிராமலும் நாணமும் ஆசையும் போராடக் கடைக்கண்ணால் அவனை நோக்கித் தேன் வெள்ளமாய் இனித்துப் பெருகும் குரலில் ஒரு கேள்வி கேட்டாள் அவள்.

''யாரைப் பற்றிய பாட்டோ இது? இதில் வருகிற வருணனைக்குப் பொருளாகி அமைந்தவள் பாக்கியசாலிதான்.''

''அந்தப் பாக்கியசாலி இப்போது என் எதிரேதான் நிற்கிறாள்'' என்றான் அமுதசாகரன்.

அவனிடமிருந்து இதைக் கேட்ட விநாடியில் தன் இரண்டு கண்களுமே சிருங்கார ரசத்தைப் பேசும் காவியங்களாக மாறினாற்போல மலர்ந்திட அவனை நிமிர்ந்து நோக்கினாள் அந்தப் பெண். அப்படியே சில விநாடி கண்களால் பேசினாள். பின்பு நாவினாலும் பேசுவதற்குத் தொடங்கியவளாக மாறிக் கூறினாள்:

''இந்தச் சொற்களுக்காக நான் என்னை அர்ப்பணம் செய்கிறேன். இவை அழகியவை. உயர்ந்தவை. இவற்றுக்கு என்னுடைய உணர்வுகளும் நானும் ஆட்படுகிறோம்.''

''மிக்க நன்றி, பெண்ணே!''

''இப்போதே உங்கள் நன்றியை நான் ஏற்றுக்கொள்வதற்கில்லை! ஏனென்றால் நீங்கள் என்னைப் பற்றி இன்னும் ஏதாவது பாட வேண்டும்.''

''நான் பாட வேண்டுமானால் நீயும் மறுபடி பந்தாடவேண்டும் பெண்ணே!''

அவன் இவ்வாறு கூறிய மறுகணமே அவள் கையில் பந்து சுழன்றது. இதழ்களில் சிரிப்பும் நெஞ்சில் பரவசமும் கண்களில் அநுராகமும், கைகளில் உற்சாகமும் சுழன்றன. மானைப் போல் விழித்துத் தேனைப் போல் பேசி இளமயிலைப் போல் ஆடும் அவள் கோலத்தைக் கண்டு அமுதசாகரன் மேலும் பாடினான்:

முத்துச் செம்பின்ஒளி
தத்தித் தவழ்ந்துவரச்
சித்தத் தலத்தின்மிசை
மெத்தக் குழைந்துமலர்
ஒத்துத் திகழ்ந்தவிழி
கற்றுத் தெரிந்தநயம்
சற்றுக் குறித்ததொனி
பெற்றுப் புரிந்துவர
மெல்லக் குழைந்தமொழி
வெல்லப் பாகுசெயச்
சொல்லில் உரைத்தகுறை
கண்ணில் நிறைந்துவரக்
கண்ணில் மறைந்தகுறை
சிரிப்பிற் பிறந்துவரப்
பெண்ணின் குலத்திலொரு
புதுமை நிறைக்கின்றாய்!

அமுதசாகரன் பாடி நிறுத்தியதும் அந்தப் பெண் பந்தாடுவதை நிறுத்தி விட்டு அவனருகில் வந்து நின்றாள். வார்த்தைக்கு வார்த்தை ஆச்சரியங்களைச் சிருஷ்டித்துக் கொண்டு மீண்டும் அவனை நோக்கிப் பேசினாள்:

''நவரசங்களில் சிங்காரத்தை மட்டும் உங்கள் சொற்களுக்காகவே படைத்திருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது.''

''எனக்கு அப்படித் தோன்றவில்லை, பெண்ணே! நவரசங்களுமே உன் கண்களிலிருந்துதான் பிறந்திருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது'' என்று அமுதசாகரன் சொல்லிக் கொண்டிருந்த போது அந்தப் பெண்ணின் தோழி ஓடி வந்து அவள் காதருகில் ஏதோ கூறி அவளை அவசரமாகக் கையைப் பற்றி அழைத்துக் கொண்டு மாளிகைக்குள்ளே போய் விட்டாள். அவள் போன திசையைப் பார்த்துக்கொண்டே நின்ற அமுதசாகரன், ''பாவம்! யாரோ நல்ல இரசிகையாக இருக்கிறாள்'' என்று எண்ணியபடியே மேலே நடந்தான். அவன் அந்தப் பூம்பொழிலைச் சுற்றிப் பார்த்து விட்டு மீண்டும் மாளிகைக்குள்ளே வந்த போது பட்டினப்பாக்கத்து எட்டிகுமரனும் மணிநாகபுரத்து இரத்தின வாணிகராகிய காலாந்தக தேவரும் மணப்பேச்சில் ஒரு முடிவுக்கு வந்திருந்தார்கள். மணப்பேச்சு நிகழ்ந்து கொண்டிருந்த கூடத்தின் ஒரு மூலையில் கவி அமுதசாகரனும் அடக்க ஒடுக்கமாகப் போய் நின்று கொண்டான். அங்கு நிகழ்வதைக் கவனிக்கலானான். ''அன்புக்கு உரிய எட்டிகுமரரே! நீங்களும் எனக்குச் சமமான ஒரு வணிகர். உங்களுக்கு மகட்கொடை நேர்வதில் எனக்கும் பெருமை உண்டு. என் தங்கையை நீங்கள் மணக்கக் கருதிப் பரிசுப் பொருள்களுடன் தேடி வந்திருக்கிறீர்கள். நாகநாட்டு வழக்கப்படி இப்போது என் தங்கை மருதியை அழைத்து உங்களுக்கு அடையாள மாலை சூட்டச் சொல்கிறேன்'' என்றார் காலாந்தகர்.

அமுதசாகரன் தன் தலைவராகிய பெரு வணிகருக்கு வாய்க்கப் போகும் மங்கல மனைவியைக் காண்பதற்கு ஆவல் கொண்டான். கையில் மாலையேந்திக் குனிந்த தலை நிமிராமல் தோழிகளோடு அந்தக் கூடத்துக்குள் நுழைந்த பெண்ணைப் பார்த்தபோது அமுதசாகரனுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. 'சற்று முன் பூம்பொழிலில் பந்தாடிக் கொண்டிருந்த இந்தப் பெண்தானா மருதி?' என்று மாலையை ஏந்திக் கொண்டு வரும் மற்றொரு பூமாலையாக அவள் வந்து கொண்டிருக்கும் கோலத்தை நோக்கி அமுதசாகரன் வியந்தான். அவன் வியப்பை அதிர்ச்சியாகவே மாற்றும் எதிர்பாராத காரியத்தைச் செய்தாள் அந்தப் பெண்.

அருகில் வந்ததும் தைரியமாக நிமிர்ந்து எல்லாரையும் ஏறிட்டுப் பார்த்த பின்பு அந்த ஏழைக் கவி அமுதசாகரனின் கழுத்தில் மாலையிட்டு விட்டுச் சிரித்துக் கொண்டே அவன் பக்கத்தில் நின்று விட்டாள் மருதி. மின்னல் வெட்டும் நேரத்தில் இது நடந்தபோது அந்தக் கூடத்திலே பிரளயமே வந்தது போல் சீற்றம் எழுந்தது. எட்டி குமரன் பெருநிதிச் செல்வரும் அவருடைய அமைச்சராகிய நகைவேழம்பரும் கண் பார்வையாலேயே பொசுக்கி நீறாக்கி விடுவது போலக் கவிஞனைப் பார்த்தார்கள். அவள் தமையனார் காலாந்தக தேவரும் சினம் கொண்டு கூறினார்: ''மருதி! இதென்ன காரியம் செய்தாய் அம்மா! இதோ அமர்ந்திருக்கும் இந்தப் பெருஞ் செல்வர் பொன்னும் இரத்தினமுமாகப்


நேர்த்தியான, புழக்கத்திற்குகந்த
கைத்தறி துணிகளில்
புடவைகள் சோளிகள்
ஃபிராக்குகள் புஷ் ஷர்ட்டுகள்
மற்றும் ஸ்லாக்குகள்
FDS/HH/4-TM

பரிசுப் பொருள்களுடன் உன்னை மணம் பேசி வந்திருக்கும்போது இவரோடு வந்திருக்கும் ஊழியனான கவிஞனுடைய கழுத்தில் நீ மாலை சூடி விட்டாயே?''

''நீங்கள் சொல்கிறவரிடம் இரத்தினங்கள் இருக்கலாம். ஆனால் இந்தக் கவியின் சொற்களே இவரிடமுள்ள இரத்தினங்களாக இருக்கின்றன. இவை விலை மதிப்பற்றவை. ஒவ்வொரு நாக நாட்டுப் பெண்ணுக்கும் தனக்கு வேண்டிய நாயகனைச் சுயமாக வரித்துக் கொள்ளுவதற்கு உரிமை உண்டு. நான் சிறிது நேரத்துக்கு முன்பு நமது பூம்பொழிலில் இவரைச் சந்தித்தபோதே இவருக்கு என் மனத்தைத் தோற்கக் கொடுத்து விட்டேன்'' என்று மருதி பேசிய சொற்களைக் கேட்ட போது எட்டி குமரன் பெருநிதிச் செல்வர் இரண்டு கண்களும் நெருப்பாகச் சிவந்து சினம் பொங்க அமுதசாகரனையும் அவன் அருகில் நின்ற மருதியையும் ஒரு பார்வை பார்த்தார். அவருடைய பார்வையைத் தாங்கிக் கொள்ளவே பயந்து கூசி நின்றான் அந்தக் கவி.

அந்தக் கணமே அடிபட்ட வேங்கை போல அவமானம் அடைந்து தலை குனிந்து வெளியேறிய பெருநிதிச்செல்வரும் அவருடைய அமைச்சரும் அந்த மாளிகையின் கடைசி வாயிற்படியில் இறங்கி வெளியேறு முன் செய்து விட்டுப் போன சூளுரை மிகவும் கொடுமையாக இருந்தது. காலாந்தக தேவர் அவர்களை ஆற்றுவிக்க முயன்றதும் வீணாயிற்று. கவி அமுதசாகரன் ஓடிப் போய்த் தன் தலைவரின் கால்களைப் பற்றிக் கொண்டு, ''ஐயா! நான் ஒரு பாவமும் அறியேன். என் மேல் சினம் கொள்ளாதீர்கள். இந்த மாளிகையைச் சுற்றிப் பார்க்கும்போது இவளைப் பொழிலில் பார்த்தேன். நிர்மலமான மனத்தோடு சில கவிதைகள் பாடினேன்'' என்று கதறினான். இப்படி அவன் அவர் கால்களில் வீழ்ந்த போது உடனிருந்த ஒற்றைக் கண்ணர் தன் இடை வாளை உருவிக்கொண்டு அவனைக் குத்தி விடுவது போலப் பாய்ந்தார். அப்போது இதைப் பார்த்துக் கொண்டிருந்த நாக நங்கை மருதி மிகப்பெரிய வீராங்கனையாக ஓடி வந்து அவர் கையிலிருந்த வாளைப் பறித்து எறிந்துவிட்டு, ''இவர் என் அன்புக்கு உரியவர். இவரை நான் எனக்குரியவராக வரித்துக் கொண்டேன். நீங்கள் போகலாம். இவருக்குக் கெடுதல் செய்ய முயன்றால் நீங்கள் இருவரும் இந்தத் தீவின் எல்லையிலிருந்து உயிரோடு பூம்புகாருக்குத் திரும்ப மாட்டீர்கள்'' என்று அறை கூவினாள்.

இதைக் கேட்டுப் பெருநிதிச் செல்வர் எரிமலையாகச் சீறினார்.

''யார் உயிரோடு வாழ முடியும், யார் உயிரோடு வாழ முடியாது என்பதைக் காலம் சொல்லும், பெண்ணே! என்னுடைய சூளுரையை ஞாபகம் வைத்துக் கொள். இந்த ஏழைக் கவிஞனுடைய உயிருக்கு நீ என்னிடமே வந்து மன்றாடிப் பிச்சை கேட்கிறபடி நான் செய்வேன் என்பதை மறந்துவிடாதே'' என்று கூறிவிட்டு நகைவேழம்பரையும் கைப்பற்றி இழுத்துக் கொண்டு சங்குவேலித் துறையில் வந்து பூம்புகாருக்குக் கப்பலேறி விட்டார் எட்டி குமரன் பெருநிதிச் செல்வர். அருமைத் தங்கையின் ஆசைக்கு மறுப்புக் கூற முடியாத நிலையில் காலாந்தகன் அந்தக் கவிக்கே அவளை மணம் செய்து கொடுத்துத் தன் மாளிகையோடு அவனைத் தங்கச் செய்து கொண்டான்.

அமுதசாகரன் எட்டுத் திங்கட்காலம் மணிநாகபுரத்தில் காவிய வாழ்வு வாழ்ந்தான். மருதி அவனைத் தன் அன்புவெள்ளத்தில் மூழ்கச் செய்தாள். அவனுடைய சொற்களுக்குத் தன் அழகை மூலதனமாக்கி எண்ணற்ற கவிதைகளைப் படைத்துக் கொண்டான். 'ஒன்பதாந் திங்களில் தான் பூம்புகாருக்குப் போய்த் திரும்ப வேண்டும்' என்று விரும்பினான் அமுதசாகரன்.

''பூம்புகாரில் யார் உங்களுக்கு ஆதரவாக இருக்கிறார்கள்? அந்தக் கொடிய செல்வரைத் தேடிப் போய் மீண்டும் அவரைச் சந்திக்கும் கருத்து உங்களுக்கு இருக்கலாகாது'' என்றாள் மருதி.

''எனக்கு வேண்டிய முனிவர்கள் பூம்புகாரின் சக்கரவாளத்துத் தவச் சாலையில் பலர் இருக்கிறார்கள். அருட்செல்வர் என்ற துறவியின் தவச் சாலையில் போய் நான் தங்கிக் கொள்வேன். ஒரு திங்கட்காலம் மட்டும் உன்னைப் பிரிந்து பூம்புகாருக்குப் போய்வர நீ எனக்கு விடைகொடு'' என்று கேட்டான் அமுதசாகரன். அந்தப் பேதையும் அவனுக்கு விடை கொடுத்தாள். தமையனான காலாந்தகனிடம் சொல்லி ஒரு தனிக் கப்பலில் அளவிடமுடியாத செல்வங்களை நிறைத்து அமுதசாகரனைப் பூம்புகாருக்கு அனுப்பினாள் மருதி. அவனுக்கு விடைகொடுக்கும் போது மருதி கருக்கொண்டிருந்தாள். கணவன் பூம்புகாரிலிருந்து திரும்பியதும் அவனிடம் அந்த மகிழ்ச்சிச் செய்தியைக் கூறி அவனைக் களிப்பு வெள்ளத்தில் ஆழ்த்த வேண்டும் என்று அவள் எண்ணியிருந்தாள். பேதைப் பெண்ணின் ஆசைக் கனவுகளுக்கு அளவு ஏது? பாவம்!

அமுதசாகரன் பூம்புகாரில் வந்து அருட்செல்வருடைய தவச்சாலையில் தங்கினான். மணிநாகபுரத்தில் தன் வாழ்வில் ஏற்பட்ட மாறுதல்களையும், பெருநிதிச் செல்வரின் சீற்றத்தையும் அவரிடம் கூறினான். பூம்புகாரில் உள்ள வாணிகக் குடும்பத்து நங்கை ஒருத்தியையே பெருநிதிச் செல்வர் மணம் புரிந்து கொண்டு விட்டார் என்ற செய்தியை முனிவர் அமுதசாகரனுக்குக் கூறினார்.

''திருமணமான பின்பு அவருடைய மனம் அமைதியடைந்திருக்கும். நான் அவரைப் பார்த்து வரலாமல்லவா?'' என்று முனிவரை வினவினான் அமுதசாகரன். அருட்செல்வர் அவன் கருத்தை அவ்வளவாக விரும்ப வில்லை.

''உன் விருப்பம்! ஆனால் அந்த வாணிகனும் அவனோடு திரியும் ஒற்றைக் கண்ணனும் மிகவும் கெட்டவர்கள். நீ சூதுவாதில்லாத அப்பாவியாதலால் உனக்கு அவர்களுடைய உள் வேடம் தெரியாது. அவர்களுடைய மிகப் பெரிய வாணிகம் கடல் கொள்ளையும் கொலையும்தான்'' என்றார் அவர்.

அமுதசாகரன் அதை ஒப்புக்கொள்ள வில்லை. முனிவருடைய அறிவுரையை மீறிக் கொண்டு பெருநிதிச் செல்வரைச் சந்திக்கப் புறப்பட்டான். அப்படிப் புறப்பட்டுப் போனவன் திரும்பவே இல்லை. எட்டுத் தினங்கள் வரை பொறுமையாக இருந்த அருட்செல்வர் ஒன்பதாவது நாள் காலையில் பொறுமை குலைந்து பட்டினப்பாக்கத்துக்குப் போய்ப் பெருநிதிச் செல்வரைச் சந்தித்துக் கேட்டார்:

''உங்களைத் தேடிக் கொண்டு எட்டு நாட்களுக்கு முன்பு இங்கே வந்த கவி அமுதசாகரன் இன்னும் திரும்ப வில்லையே?''

''திரும்பமாட்டான்! என்றும் திரும்ப முடியாத இடத்துக்கு அந்தத் துரோகியை அனுப்பியாயிற்று. நீங்களும் அந்த இடத்துக்குப் போக விரும்பினால் அங்கே உங்களையும் அனுப்பி வைக்கிறேன்'' என்று முனிவரை இழுத்துச் சென்று அந்த மாளிகையின் பாதாள அறையில் புலிக் கூண்டுகள் இருந்த இடத்துக்குக் கொண்டு போய்க் குரோதத்தோடு காண்பித்தார் பெருநிதிச் செல்வர். ''நீ நன்றாக இருப்பாயா, பாவி!'' என்று குமுறி அலறிய அருட்செல்வரின் சாபங்களை அவன் இலட்சியம் செய்ய வில்லை. இடி இடியென்று சிரித்தான். ''நான் நன்றாக இருக்க வேண்டும் என்று தேடி மணந்து கொள்ளச் சென்ற பெண்ணைத் தான் கவர்ந்த நன்றி கெட்டவனின் அழகிய உடம்பையும் அதில் ஓடிய பச்சைக் குருதியையும் இந்தப் புலிகளின் வயிற்றில் தேடிப் பாருங்கள் முனிவரே!'' என்று கொலை வெறியோடு கூவிக் கொண்டே அருட்செல்வ முனிவரைப் பிடரியில் கைக் கொடுத்துத் தள்ளியபடியே அந்த மாளிகையின் வாயிலில் கொண்டுவந்து வீழ்த்தினான் அவன். அன்று தவச் சாலைக்குத் திரும்பிய அருட்செல்வர் ஓராண்டுக் காலம் சக்கரவாளத்திலிருந்தே வெளியேறாமல் இந்தப் பாவத்தை எண்ணி எண்ணி வேதனைப் பட்டார். மோன விரதமிருந்தார். கடுமையான தவங்களில் ஈடுபட்டார். அவருடைய மனப் புண் எதனாலும் ஆறவில்லை.

இரண்டாவது ஆண்டின் தொடக்கத்தில் இந்திர விழாவின் முதல் நாள் அதிகாலையில் எழுந்து அவர் தம்முடைய தவச் சாலையின் வாயிலுக்கு வந்த போது அங்கே வைகறைப் பெண்ணான உஷையே எதிரில் வந்து நிற்பது போல் பேரழகு வாய்ந்த இளம் பெண்ணொருத்தி கையில் குழந்தையோடு நின்று கொண்டிருந்தாள்.

''நீ யார் அம்மா?''

''நான் மருதி! இந்தத் தவச் சாலையில் உங்களோடு தங்கியிருக்கும் கவி அமுதசாகரனைப் பார்க்க வேண்டும்.''

அவள் யாரென்று அருட்செல்வருக்குப் புரிந்தது. கண்களில் நீர் பெருகியது. பொற் சிலை போன்ற குழந்தையோடு சௌந்தரியவதியாக வந்து நிற்கும் அந்தப் பெண்ணிடம் நிகழ்ந்த கொடுமைகளை எப்படித் தொடங்கி எப்படிச் சொல்வது என்று அவருக்குத் தெரியவில்லை. அவருடைய நாவில் சொற்களே வரவில்லை. இருள் புலராத காலைப் போதாகையினால் தன்னுடைய கண்களில் நீர் அரும்புவதை அவள் பார்த்து விடாமல் மேலாடையால் துடைத்துக் கொண்டு வேறு புறமாக முகத்தைத் திருப்பியபடி, ''நீ இங்கே தங்கியிரு, அம்மா'' என்று சொல்லிவிட்டு நீராடச் சென்றார் முனிவர். அவர் நீராடி விட்டுத் திரும்பி வந்த போது அவளுடைய பிள்ளைக் குழந்தை அந்த ஆசிரமத்தின் முன்புறம் தளர் நடை நடந்து கொண்டிருந்தது. அவரைப் பார்த்ததும் வேற்று முகம் நினையாமல் குறுஞ்சிரிப்போடு ஓடி வந்து கால்களைக் கட்டிக் கொண்டது. தெய்வமே குழந்தையாகப் பிறந்து வந்தது போல அழகு வடிவாயிருந்த அமுதசாகரனின் பிள்ளை தன்னுடைய கால்களைக் கட்டிக் கொண்டபோது 'கோ'வென்று கதறியழ வேண்டும் போலிருந்தது அந்த முனிவருக்கு. அமுதசாகரன் தான் புறப்பட்டு வந்திருந்த கப்பல் திரும்பி மணிநாகபுரத்துக்குப் புறப்பட்டபோது அதன் தலைவனிடம்

பூம்புகார்த் துறையில் இறங்கியவுடனே மருதிக்கு ஓர் ஓலை எழுதிக் கொடுத்திருந்ததாக அருட்செல்வரிடம் சொல்லியிருந்தாள். மருதி அந்த ஓலையைத் தானாகவே அவரிடம் காண்பித்தாள்.

''ஐயா! இங்கு வந்து இறங்கியதும் பூம்புகார்த் துறையிலிருந்தே அவர் எனக்குக் கொடுத்தனுப்பிய ஓலை இது.''

அவள் அளித்த அந்த ஓலையை வாங்கிப் படித்த போது முனிவருக்கு மேலும் அழுகை பொங்கியது. 'நவரசங்கள் உன் கண்களிலிருந்து பிறந்தன.......' என்று தொடங்கி மீண்டும் அவளைச் சந்திக்கப் போகிற நாளை ஆவலுடன் எதிர்பார்த்து ஏங்கியிருப்பதாக அமுதசாகரன் பாலைத் திணைப் பொருளமைத்து மருதிக்காகப் பாடிய கவிச் சொற்கள் அந்த ஓலையில் இருந்தன.

''இப்போது அவன் வாழ்வது இந்தக் கவிதைகளில்மட்டும்தான் அம்மா!'' என்று அழுகை பொங்கச் சொன்னார் அவர்.

''ஐயா! நீங்கள் சொல்வது எனக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனால் என் மனம் இங்கு வந்து இறங்கிய வேளையிலிருந்து எதற்காகவோ காரணமின்றிப் பதறுகிறது. இடக் கண் துடிக்கிறது. துறைமுகத்தில் நான் வந்து இறங்கிய போது அந்தப் பெருநிதிச் செல்வரும் அவருடைய அரைக்குருட்டு அமைச்சரும் என்னைத் தற்செயலாகச் சந்தித்து விட்டார்கள். அவர்கள் என் அருகில் வந்து இந்தக் குழந்தையையும் உற்றுப் பார்த்து விட்டு ஏளனமாகச் சிரித்தார்கள். எனக்குப் பயமாக இருந்தது. துறைமுகத்திலிருந்து மீண்டும் அவர்கள் பார்வையிலே படாமல் தப்பி உங்களுடைய தவச் சாலைக்கு வழி கேட்டுக் கொண்டு இங்கு வந்து சேர்ந்து விட்டேன். என் கணவர் மணிநாகபுரத்திலிருந்து புறப்படும் போது உங்கள் தவச்சாலையில் வந்து தங்கப் போவதாகத்தான் என்னிடம் கூறினார். உங்களையன்றி நான் வேறு யாரிடம் போய் அவரைப் பற்றிக் கேட்பேன்?''

''யாரிடம் கேட்டும் பயனில்லை, பெண்ணே! உன் மனத்தைத் திடமாக்கிக் கொள். பின்பு நான் சொல்வதைக் கேள். உன்னுடைய காதல் உனக்குக் கொடுத்த சௌபாக்கியம் இந்தக் குழந்தையோடு முடிந்து விட்டது. இந்த உலகத்தில் நல்லவை நீடிப்பதில்லை'' என்று தொடங்கிச் சொல்லிவிட வேண்டும் என்று மனத்துக்குள் தவித்துக் கொண்டிருந்த உண்மையை மெல்ல மெல்ல அவளிடம் சொல்லி முடித்தார். அதைக் கேட்ட போது இடி விழுந்த மரம் போலச் சில நாழிகை முகம் பட்டுப் போய் ஆடாமல் அசையாமல் சிலையாக வீற்றிருந்தாள் மருதி. அப்போது அவள் சிறுவன் பசித்து அழுதான். எந்த நிலையிலும் கலங்காத கர்மயோகியைப் போல் குழந்தையை இடையில் எடுத்துக் கொண்டு அவள் பாலூட்டினாள். நெடு நேரம் குழந்தை அவள் இடுப்பிலேயே இருந்தது. முனிவர் எரியோம்புவதற்காக வேள்விச் சாலைக்குள்ளே சென்றிருந்தார்.

வேள்வி வழிபாடுகளை முடித்துக் கொண்டு இரண்டு நாழிகைப் போது கழித்து அவர் திரும்பி வந்து பார்த்த போது மருதியின் குழந்தை தரையில் தூங்கிக் கொண்டிருந்தது. மருதியைக் காணவில்லை. குழந்தையின் அருகே ஓர் ஏடு கிடந்தது. பரபரப்போடு சென்று முனிவர் அதை எடுத்துப் பார்த்தார்.

''நான் எந்தக் காரியத்துக்காகப் போகிறேனோ அது என்னால் நிறைவேறவில்லையானால் என் மகனை வளர்த்து ஆளாக்கி அவனால் அதை நிறைவேற்றுங்கள். உங்கள் தவச் சாலையின் வேள்வி காரியங்களுக்காக இந்தனமும் சமித்தும் வெட்டுவதற்கு நீங்கள் பயன்படுத்தும் கோடரியை நான் என்னோடு எடுத்துச் செல்வதற்காக என்னைப் பொறுத்தருள்க. இந்த அவசரத்தில் வேறு ஆயுதங்கள் எவையும் எனக்குக் கிடைக்கவில்லை'' என்று எழுதியிருந்தாள் மருதி.

'ஐயோ! இந்தப் பெண்ணும் அந்தப் பாவியிடம் தேடிப் போய் அழிந்து விடப்போகிறாளே' என்று தவித்தார் முனிவர். அப்போது குழந்தை அழுதது. ஓடிப் போய் அந்தப் பெண்ணைத் திரும்பி அழைத்து வர எண்ணினார். குழந்தையை அந்தக் காட்டில் யாரிடம் விட்டுப் போவதெனத் தயங்க நேர்ந்தது. 'தெய்வ சித்தப்படி நடக்கட்டும்' என்று மனத்தை உறுதிப்படுத்திக் கொண்டு தவச் சாலையிலேயே குழந்தைக்குப் பாதுகாப்பாக அவர் இருந்து விட்டார்.

**ம**று நாள் காலை சக்கரவாளத்துக் காவலர் தலைவரான வீரசோழிய வளநாடுடையார் மூலம் அந்தச் செய்தி அவருக்குத் தெரிந்தது.

'யாரோ முரட்டு நாகநங்கை ஒருத்தி பட்டினப்பாக்கத்து எட்டிகுமரனைக் கோடரியால் காலில் ஓங்கி அடித்து விட்டுத் தானும் அங்கேயே வீழ்ந்து மாண்டு போனாளாம்' என்று வளநாடுடையார் வந்து தெரிவித்த போது அருட்செல்வர் அமைதியாக அதைக் கேட்டுக் கொண்டார். அந்தப் பெண்ணின் மரணத்துக்காக அவர் மனம் மட்டுமே அழுதது. அதற்குப் பின் அந்த ஆண்டு இந்

திர விழாவின் கடைசி நாளன்று பூம்புகார்த் துறையில் பெருநிதிச் செல்வரைத் தற்செயலாகச் சந்திக்க நேர்ந்த வேளையில் அவர் நேரே நடக்க முடியாமல் ஒரு காலைச் சாய்த்துச் சாய்த்து நடப்பதையும் அருட்செல்வர் தாமே கவனித்தார். அப்போது அருட்செல்வரை அவரும் கவனித்துவிட்டார். மிக அருகில் நெருங்கி வந்து அருட்செல்வரின் காதருகே குனிந்து, ''அமுதசாகரனின் குழந்தை உங்களிடம் தான் வளர்கிறான் போல் இருக்கிறது'' என்று குரோதம் தொனிக்கச் சொல்லிவிட்டுப் போனான் அந்தப் பாவி. அதுவே பயங்கரமான எச்சரிக்கையாகத் தோன்றியது முனிவருக்கு. 'மருதியின் மகன் தன்னிடம் பூம்புகாரில் வளர்வது கவலைக்குரியது' என்று அஞ்சிய முனிவர் அன்றே மணிநாகபுரத்துக்குப் பயணம் புறப்பட்டிருந்த துறவி ஒருவரிடம் நிகழ்ந்தவற்றையெல்லாம் கூறியனுப்பிக் காலாந்தகனை உடனே புறப்பட்டு வந்து தன் மருமகனும் மருதியின் குழந்தையுமாகிய உயிர்ச் செல்வத்தை மணிநாகபுரத்துக்கு அழைத்துப் போய்விடுமாறு வேண்டிக் கொண்டிருந்தார். இரண்டு திங்கள் காலத்துக்குப் பின் மனம் நிறைந்த துக்கத்துடனும் மருகனுக்குக் காப்பணிவதற்காக நவரத்தினங்கள் பதித்துப் பொன்னில் செய்த ஐம்படைத் தாலியுடனும் காலாந்தகன் பூம்புகாருக்குப் புறப்பட்டு வந்தான். அவன் வந்த கப்பல் கிருஷ்ணபட்சத்து அமாவாசை முன்னிரவில் பூம்புகார்த் துறையை அடைந்திருந்தது. அதே நேரத்துக்குத் துறையில் வேறு காரியமாக வந்து நின்றிருந்த பெருநிதிச் செல்வரும், நகைவேழம்பரும் காலாந்தகன் அங்கு வந்திருப்பதைக் கண்டுகொண்டார்கள். காலாந்தகன் துறையில் இறங்கிச் சக்கரவாளக் கோட்டத்தில் அருட்செல்வ முனிவரின் தவச்சாலைக்கு வழி கேட்டுக் கொண்டிருந்தான். தனக்கு மிகவும் வேண்டியவனாகிய காபாலிகையான வைரவியை அனுப்பிக் காலாந்தகனுக்கு வழி காட்டுவது போல அவனை அழைத்துச் சென்று வன்னிமன்றத்துக்குப் பின்புறம் கொண்டுபோய் நிறுத்துமாறு ஏற்பாடு செய்த நகைவேழம்பர் பெருநிதிச் செல்வரோடு பின்தொடர்ந்து போய்க் காலாந்தகனைக் கைப்பற்றினர். வஞ்சகமாகக் காலாந்தகன் அன்றிரவில் அவர்களால் கொல்லப்பட்டான். அவனிடமிருந்த செல்வங்களும், நவரத்தின ஐம்படைத் தாலியும் கொள்ளையடிக்கப்பட்டன. நான்கு நாட்களுக்குப் பின்னர் இதை மறைந்து பார்த்துக் கொண்டிருந்த வேறொரு காபாலிகன் மூலம் இந்தப் பயங்கர இரகசியம் அருட்செல்வருக்குத் தெரிந்தபோது, 'இவ்வளவு கொடுமைகளுக்குப் பின்பும் இந்தக் குழந்தையை எப்படி வளர்த்து, ஆளாக்கப் போகிறேனோ?' என்று பெருங் கலக்கம் கொண்டார். காலாந்தகனின் மனைவிக்கும் மகள் குலபதிக்கும் முனிவரால் அவனது சாவு தெரிவிக்கப்பட்ட பின் அதே வேதனையில் நோய்ப் படுக்கையாகக் கிடந்து மாண்டாள் குலபதியின் தாய். தன்னிடம் வளர்ந்துவந்த மருதியின் பிள்ளைக்கு இளங்குமரன் என்று பெயர் சூட்டினார் முனிவர். நாளுக்கு நாள் அந்தப் பிள்ளையைப் பெருநிதிச் செல்வரும் அவருடைய துன்மந்திரியும் கழுகுகளாக வட்டமிடுவதைக் கண்டு அஞ்சிய முனிவர் வயது வந்ததும் அவனுக்குப் பாதுகாப்பாக இருக்கட்டும் என்று கருதி நீலநாகமறவருடைய படைக்கலச்சாலையில் அந்தப் பிள்ளையைச் சேர்த்து விட்டார். பின்பு நாளடைவில் மணிநாகபுரத்து வாணிகக் கப்பல்களை எல்லாம் பெருநிதிச் செல்வரின் ஏவலர்கள் நடுக் கடலில் கடற் கொள்ளைக்காரர்களான கடம்பர்கள் துணையோடு சூறையாடுவதாகப் பல முறை கேள்விப்பட்டார் அருட்செல்வ முனிவர். இரண்டு பெண்களுக்குத் தந்தையான பின்பும் இந்த வெறுப்பை மறக்க முடியாத மனம் எட்டி குமரனுக்கு இருப்பதைக் கண்டு அஞ்சினார் அவர்.

'மருதியின் மகனை இளங்குமரன் வளர்ந்து பெரியவனானபின் இதற்கெல்லாம் சேர்த்துப் பழி வாங்கச் செய்யலாம்' என்று தோன்றியது அவருக்கு. அந்தக் குடும்பத்தின் புதிய தலைமுறைக்குத் தன்னைப் பாதுகாவலராகப் பாவித்துக் கொண்டு குலபதி, இளங்குமரன் இரண்டு பிள்ளைகளின் வளர்ச்சிக்காகவும் இடைவிடாமல் மனத்தினாலும் செயல்களாலும் தவம் செய்து கொண்டு வந்தார் அவர்.

அவ்வப்போது குலபதிக்குத் தக்கவர்கள் மூலம் செய்தி சொல்லியனுப்பிக் கொண்டிருந்தார் முனிவர். உதிர் சருகுகள் போல் ஆண்டுகள் பல கழிந்து கொண்டிருந்தன. அந்த முனிவர் மூத்துத் தளர்ந்தாலும் அவருடைய இலட்சியமும் உட்கருத்தும் தளரவில்லை.''

படித்தவற்றிலிருந்து இவற்றை எல்லாம் உணர்ந்துகொண்டு இளங்குமரன் தலை நிமிர்ந்தபோது பொழுது புலர்ந்து மாடங்களின் வழியே ஒளிக் கதிர்கள் பாய்ந்து கொண்டிருந்தன. வெளியே தாழிட்டிருந்த கதவுகளும் அதே வேளையில் திறந்தன. திறந்த கதவுகளுக்கு அப்பால் அவன் ஒரு புதிய காட்சியைக் கண்டான்.

(தொடரும்

# தமிழ்நாடும் தேர்தல்களும்

வி. ராமமூர்த்தி

நமது நாட்டின் சட்டசபைத் தொகுதிகளில் தேர்தல் முடிவுகள் யாவும் வெளியிடப் பட்டுவிட்டன. இத்தேர்தலில் முக்கியமாக, காங்கிரஸ், திராவிட முன்னேற்றக்கழகம், சுதந்திரக் கட்சி, பார்வர்டுபிளாக் கட்சி, சோஷலிஸ்டு கம்யூனிஸ்டு முதலிய கட்சிகளும் சில சுயேச்சையாளர்களும் போட்டியிட்டுள்ளனர்.

இவற்றுள் காங்கிரஸ் 138 ஸ்தானங்களில் வெற்றி பெற்றுப் பெரும்பான்மை பலத்துடன் விளங்குகிறது. இதற்கு முக்கிய காரணங்கள் பல உண்டு. சுதந்திரம் பெறுவதற்காகக் காங்கிரஸ் முன்னோடிகளில் செய்த தியாகங்களை மக்கள் இன்னும் மறக்கவில்லை. மேலும் காங்கிரஸ் பல ஆண்டுகளாகத் தொடர்ந்து ஆட்சி பீடத்தில் இருந்து வருகிறது. அதை எதிர்த்தால் ஏதாவது தீமை நேருமோ என்று மக்களுக்கு ஒரு பீதி. இது போன்ற காரணங்களே இப்போதுள்ள காங்கிரஸைப் பொது மக்கள் ஆதரிக்கச் செய்திருக்கின்றன.

சென்ற தேர்தலைக் காட்டிலும் இந்தத் தேர்தலில் காங்கிரஸ் குறைவான ஸ்தானங்களையே தமிழ் நாட்டில் பெற்றுள்ளது. இதிலிருந்து மக்களின் மனத்தில் அதன் மதிப்பு மங்கி வருவது நன்கு வெளியாகிறது. மேலும் அதன் எதேச்சாதிகாரப் போக்கையும், ஊதாரித் திட்டங்களையும் பொதுமக்கள் வெறுக்கத் தொடங்கி விட்டனர் என்பதும் தெளிவாகிறது.

தலைவர் ஸ்ரீ ராஜாஜி கூறியது போல ஆறு மாதங்களுக்கு முன்பே இக்கட்சி தங்கள் அரசாங்கப்பதவிகளை ராஜிநாமாச் செய்துவிட்டுத் தேர்தலுக்கு நின்றிருந்தால் இத்தேர்தலில் அக்கட்சிக்கு இவ்வளவு 'மெஜாரிட்டி' கிடைத்திருக்குமா என்பது சந்தேகமே. பதிவான மொத்த வாக்குகளில் 46 சதவிகிதமே காங்கிரஸ் பெற்றிருக்கிறது. அதை எதிர்த்த கட்சிகள் 54 சதவிகிதம் பெற்றுள்ளன என்பதும் கவனிக்கத்தக்கதாகும்.

அடுத்தபடியாக, தி. மு. கழகம் சென்ற தேர்தலைவிட மும்மடங்குக்கும் அதிகமான 50 ஸ்தானங்களைப் பெற்று இத்தேர்தலில் வெற்றிபெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். தலைவர் ஸ்ரீ ராஜாஜியின் தேர்தல் கூட்டு முயற்சி கைக் கூடியிருந்தால் இத்தேர்தலில் தி. மு. கழகம் குறைந்தது பத்து ஸ்தானங்களையாவது அதிகமாகக் கைப்பற்றி யிருக்க முடியும்.

தி. மு. கழகம் பல ஆண்டுகளாகவே இன வேற்றுமை, ஜாதித் துவேஷம், நாஸ்திக வாதம் போன்ற பிற்போக்கு மனப்பான்மைகளை நீக்கி இயன்றவரைச் சம நோக்குடன் பொதுமக்களுடன் பழகிப் பணியாற்றி வருகிறது. இது இந்த வெற்றிக்கு ஒரு முக்கிய காரணமாகும்.

இரண்டாவதாக ஸ்ரீ ராஜாஜி முயன்ற தேர்தல் கூட்டு முறிவடைந்த போதிலும், ''சுதந்திரக் கட்சி அபேட்சகர்கள் நிற்காத தொகுதிகளில் தயக்கமின்றிப் பொதுமக்கள் தி. மு. கழக அபேட்சகர்களையே ஆதரிக்க வேண்டும்'' என்று தலைவர் ஸ்ரீ ராஜாஜி தக்க தருணத்தில் விடுத்த வேண்டுகோளும் இதற்கு ஒரு காரணமாகும். ''யாருக்கு வோட் செய்வது?'' என்ற தடுமாற்ற நிலையில் இருந்த பலருக்கு ஸ்ரீ ராஜாஜியின் இவ்வேண்டுகோள் சஞ்சீவி போல் உதவியது.

தி. மு. கழகத் தலைவர் வெற்றி பெறவில்லை என்பது வருந்த தக்கதாகும். ஆயினும் சில குறிப்பிட்ட தொகுதிகளில் தேர்தல்களை ஒரே தேதியில் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்குமேயானால் காஞ்சித் தேர்தலின் முடிவு வேறுவிதமாக முடிந்திருக்கக் கூடும் என்று சிலர் கணிக்கின்றனர். எவ்விதத்திலும் இந்தத் தேர்தலில் திராவிட முன்னேற்றக் கழகத்தின் வெற்றி போற்றத்தக்க பெரிய சாதனை என்பதில் ஐயமில்லை.

அடுத்தபடியாக, சுதந்திரக் கட்சி இத்தேர்தலில் போட்டியிட்டது. 94 ஸ்தானங்களில் அபேட்சகர்களை நிறுத்தியிருந்தும் ஆறே ஸ்தானங்களில் அது வெற்றியடைந்துள்ளது. இதற்கும் தகுந்த காரணங்கள் இல்லாமல் இல்லை. முக்கியமாக இக்கட்சியின் அபேட்சகர்களில் பலருடைய குண விசேஷங்களும், அரசியல் திறமையும், மற்ற அம்சங்களும் பொதுமக்களின் மனத்தைக் கவரும் அளவுக்குப் பிரசாரமாகவில்லை. கட்சி ஆரம்பித்துச் சுமார் இரண்டரை வருடங்களே ஆவதால் அவ்வாறு விரிவான பிரசாரம் செய்வதற்கும் போதிய அவகாசம் கிடைக்கவில்லை. ஏழைக் கட்சியாகிய இதற்கு மற்றக் கட்சிகளைப் போல் தேர்தலில் வாரி இறைக்கப் போதிய பண வசதியும் இருக்கவில்லை. எனினும், மாபெரும் பலமும், வசதியும் படைத்த காங்கிரஸைப் பகிரங்கமாக எதிர்த்து வெற்றி தோல்விகளைப் பொருட்படுத்தாமல் அபேட்சகர்களை நிறுத்திய சுதந்திரக் கட்சியின் தைரியம் வியக்கத் தக்கதேயாகும்.

அடுத்த தேர்தலுக்குள் கட்டுப்பாடான முறையில், கிராமந்தோறும் சென்று ஒவ்வொரு வாக்காளர் மத்தியிலும் சுதந்திர நட்சத்திரம் பதிந்து யாவரையும் கவரும் வண்ணம் தக்க முயற்சி செய்ய நம் தலைவர் ஸ்ரீ ராஜாஜி தகுந்த ஏற்பாடுகளைச் செய்தே தீருவார் என்பதில் சந்தேகமேயில்லை. ஆகவே சுதந்திரக் கட்சி சிறிய அளவில் வெற்றி பெற்றிருந்தாலும் இந்தத் தேர்தலில் அதன் சாதனை மகத்தானதாகும்.

அடுத்தபடியாகத் தேர்தலில் போட்டியிட்டது கம்யூனிஸ்டுக் கட்சியாகும். வெளி நாட்டின் ஆதரவையும் ஆணைகளையுமே பெரிதும் நம்பி நம் நாட்டு நலனில் போலி நடிப்புடன் இயங்கும் இந்தக் கட்சிக்கு மக்களின் ஆதரவு பொதுவாக இல்லை என்பது வெளிப்படை. ஆயினும் இரண்டொருவர் தேர்தலில் வெற்றி பெற்றுள்ளனர். இதற்கு மக்களுக்கு அக்கட்சியிடமுள்ள ஆதரவு முக்கிய காரணமல்ல. வெற்றி பெற்ற அபேட்சகரின் தனிப்பட்ட செல்வாக்கும், உழைப்பும், ஆற்றலுமே ஓரளவு காரணமாகும்.

இந்தத் தேர்தலிலும் சில சுயேட்சை அபேட்சகர்கள் தங்கள் சலியாத உழைப்பினால் மக்கள் ஆதரவைப் பெற்று வெற்றியடைந்துள்ளனர். அவர்களின் முயற்சியும் மெச்சற்பாலதேயாகும்.

10

# பவழத் தீவு

கதை வாண்டுமாமா

சித்திரம் ரமணி

சூலபாணியின் எச்சரிக்கைகளினால் எரிச்சலடைந்த மந்திரிவர் மார் எப்படியும் மன்னர் மஹிபாலனைச் சிறை மீட்டு விடுவதென்று முழுமூச்சுடன் அதில் முனையலானார். கந்தன் விருப்பப்படி படகு தயாராயிற்று. பிரயாணமும் தொடங்கிற்று.










அடர்ந்த கானகத்தின் கிளைகளால் இருள் சூழ்ந்த நதியில் படகு முன்னேறுகிறது..






இந்த வேளையில் மரங்களின் உச்சி யில் இருந்த கந்தன்
என் நண்பர் களை நதி அரக் கர்கள் சூழ்ந்து கொண்டிருக்கின் றன.




கந்தா, சரி யான சமயத் துக்கு வந்தாய். ஜாக்கிரதை.




கந்தன் முதலைகளோடு போராடி விரட்டி அடிக்கிறன்.


நந்திவர்மரே! இதோ கந்தன். ஒரு கை கொடுங் கள்.


படகை மிக வேகமாகச் செலுத் திக் கொண்டு செல் லுங்கள்.


கந்தா, உன்னைப் போன்ற தைரியசாலியை நான் கண்டதே இல்லை. எங்களை எத்தனை பெரிய ஆபத்திலிருந்து காப்பாற்றினாய்?
உங்களுக்கு உதவ முடிந்ததற்கு மகிழ்ச்சியடைகிறேன்.


இரவை இங்கு கழிக்கலாமென்று எண்ணுகிறேன். என்ன கந்தா?


என் தோழர்கள் என்னோடு நெருங்கி உட்காருவதைப் பார்த்தால் இந்தப் பகுதியில் கொடிய மிருகங்களின் நடமாட்டம் இருக்குமென்று தெரிகிறது.


கவலையே படாதே கந்தா. இந்தக் கனப்பு காட்டு விலங்குகளிடமிருந்து நம்மைக் காப்பாற்றும்.


எல்லோரும் அயர்ந்து தூங்கி விட்டார்கள். கந்தனுக்குத் தூக்கம் வரவில்லை.
அது என்ன நீரில் சலசலக்கும் சப்தம், இந்த வேளையில்?


ஓசையின்றி ஊர்ந்தபடி நதிக்கரையைக் கந்தன் அடைந்த போது.
ஆஹா! நான் சந்தேகப்பட்டது சரியாகி விட்டது. படகைக் காணோம்.

தொடரும்.




## நறுமணமுள்ள நயமான தயாரிப்பு "ஹேஸலின்" டால்க்

### மழமழப்பான வெல்வெட்போன்ற பவுடர்!

இலேசான, இன்பநறுமணமுள்ள, மிருதுவான 'ஹேஸலின்' டால்கம் பவுடர் ஈரத்தன்மையை இலேசாக நீக்கி, சருமத்தை நாள் பூராவும் புதுமணம் கமழச்செய்கிறது. நீலம், வெள்ளை மற்றும் பொன்னிறமான, எடுப்பான டப்பாவில் எங்கும் கிடைக்கிறது 'ஹேஸலின்' டால்கம் பவுடர்.

**'ஹேஸலின்'** டால்கம் பவுடர் — ஒரு பர்ரோஸ் வெல்கம் தயாரிப்பு.

# திருமூலர் தவமொழி

ராஜாஜி தொகுப்பு

## 48

இறைவன் இந்த மனித உடம்பி லேயே நம் உள்ளத்தில் மறைந்து நிற் கிறான். இந்த உண்மையை உணர்ந்து, உள்ளத்தில் நிற்கும் இறைவனைத் தரிசிப்பதே சித்தி என்று நம்முடைய சித்தர்கள் கண்டார்கள். இந்தச் சித்தியையே மகத்தான இலட்சியமாக மக்களுக்கு உபதேசித்தார்கள்.

திருமூலர் சித்தர்களில் எல்லாம் பெரிய சித்தர். அவர் பாடுகிறார் :

மாயனை நாடி
மனநெடுந் தேர்ஏறி

[மாயனை—பாலுக்குள் மறைந்து நிற்கும் நெய்போலக் காணாமல் நம்முள் நிற்கும் இறைவனை. நாடி—காண வேண்டும் என்று எண்ணி. மனநெடுந் தேர் ஏறி—மனமாகிய விமானத்தில் ஏறிக்கொண்டு. நெடுந்தேர்—நெடுந் தூரம் செல்லுகிற விமானம்.]

போயின நாடுஅறி
யாதே புலம்புவர்

[போயின நாடு—செல்லும் வழி. அறியாதே—தெரியாமல். புலம்புவர்—காணவேண்டியதைக் காணவில்லையே என்று கதறுவார்கள்.]

இறைவன் எங்கோ தூரத்தில் இருக் கிறான் என்று நினைத்து, அவனைக் கண்டுபிடிக்கச் சென்று, திசை தெரி யாமல் அங்கும் இங்கும் எண்ணங் களைச் செலுத்தித் தேடுவார்கள் என்று மக்களின் அறியாமையையும் பயனற்ற முயற்சியையும் சொல்லு கிறார். இனித் தமது நல்லனுபவத்தைக் கூறுகிறார்.

தேயமும் நாடும்
திரிந்துஎங்கள் செல்வனைக்

காயம்இந் நாட்டிடைக்
கண்டுகொண் டேனே

[எங்கள் செல்வனை—பெறுவதற்கு அரிய செல்வமாகிய இறைவனை. தேய மும் நாடும் திரிந்து—புற உலகிலே எங்கெங்கோ பகிர்முகமாக எண்ணங் களைச் செலுத்தித் தேடித் திரிந்து விட்டு. காயம் இந் நாட்டிடை— இந்தக் காயமாகிய நாட்டில், அதா வது, இந்த உடம்பினுள்ளே. கண்டு கொண்டேனே—உள்நோக்கிப் பார்த் துக் கண்டுகொண்டேன்.]

எம்பெருமான் எங்கோ இருக்கிறான் என நினைத்து, எண்ணங்களை அவனைத் தேடும்படி எங்கெங்கோ செலுத்தி னேன். கடைசியில் இந்த உடம்புக் குள்ளேயே அவன் ஒளிந்திருப்பதைக் கண்டு கொண்டு விட்டேன் என்கிறார் முனிவர்.

மாயனை நாடி
மனநெடுந் தேரேறிப்
போயின நாடறி
யாதே புலம்புவர்
தேயமும் நாடும்
திரிந்தெங்கள் செல்வனைக்
காயமிந் நாட்டிடைக்
கண்டுகொண் டேனே!

இறைவன் பக்தர்களுடைய உள்ளத் துக்குள்ளே புகுந்து நிற்கிறான் என்ற

உண்மையை மேலும் பாடுகிறார் முனிவர்.

**புகுந்துநின் றான்எங்கள்**
**புண்ணிய மூர்த்தி**
**புகுந்துநின் றான்எங்கள்**
**போதறி வாளன்**

[எங்கள் புண்ணியமூர்த்தி—புண்ணியத்தின் பயனும் புண்ணியத்தின் சொரூபமாகிய எம்பெருமான். புகுந்து நின்றான்—ஒளிந்து கொண்டு நிற்கிறான். போதம்-ஞானம், ஞானமாகிய முற்றறிவு. போதறிவாளன்—முற்றறிவாளனாகிய ஞானமூர்த்தி.]

**புகுந்துநின் றான்அடி**
**யார்தங்கள் நெஞ்சம்**

[அடியார் தங்கள் நெஞ்சம்—தன்னிடத்தில் பக்தி செலுத்துகிற அடியார்களுடைய உள்ளத்தில். புகுந்து நின்றான்—நுழைந்து நிற்கிறான்.]

அதாவது அவன் நிற்பதைக் காணத் தகுந்த பக்தி தோன்றியவுடன் அவன் நிற்பதைக் காண்கிறார்கள். முன்பு காணமுடியாமல் நின்றதையே, இப்பொழுது பக்தி மேலிட்டவுடன் காண்பதால், 'புகுந்து நின்றான்' என்றார்.

**புகுந்துநின் றானையே**
**போற்றுகின் றேனே**

[போற்றுகின்றேன் — துதி பாடுகிறேன்.]

அப்படிப் புகுந்து கொண்டு நிற்கிற அந்த இறைவனையே நான் ஆனந்த பரவசமாகித் துதிக்கிறேன்.

**புகுந்துநின் றான்எங்கள்**
**புண்ணிய மூர்த்தி**
**புகுந்துநின் றான்எங்கள்**
**போதறி வாளன்**
**புகுந்துநின் றான்அடி**
**யார்தங்கள் நெஞ்சம்**
**புகுந்துநின் றானையே**
**போற்றுகின் றேனே!**

# மனம்போனபடி



**வடவெங்கடவன்**

## வடை விஷயம்!

ஏதோ பண்டிகை நாள். உள்ளே அடுக்களையில் வடை, பாயசம் யாவும் தயாராகிக் கொண்டிருந்தன. இடையிடையில் எண்ணெய்ச் சட்டியில் ஏதோ விழுந்து வெந்து கொந்தளிக்கிற சத்தம் வந்தது. வைதேகி எதையோ பற்றித் திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருந்தாள். அவளுக்குப் பதில் கிடைத்தால்தானே வாயை மூடுவாள்? அவள் மீண்டும் மீண்டும் கேட்டவண்ணமே இருந்தாள்.

''இந்தாடி நீ! சும்மா இருக்கப் போகிறதில்லை? நச்சு நச்சென்று பிராணனை வாங்கிக் கொண்டு எப்போது பார்த்தாலும் ஏதோ பெரிய கேள்வி!'' வைதேகியின் தாயார் எரிந்து விழுந்ததும், பொரிந்து கொட்டியும் வாயை மூடவில்லை.

''அப்பாவைப் போய்க் கேட்கட்டுமா?''

''நல்லாப் போய்க் கேளு'' என்று அடுப்பங்கரைத் தெய்வம் ஏவி விட்டது. வைதேகி என்ன கேள்வியிட்டு மாட்டப் போகிறாளோ என்று எண்ணினேன்.

வந்தாள் பெண்ணரசி.

''அப்பா! தோசை, இட்டிலிக்கெல்லாம் இல்லாத நடுத் துவாரம் வடைக்கு மட்டும் ஏன் இடுகிறார்கள்?''

நான் வாயைத் திறக்கவில்லை. பதில் சொல்லாவிட்டால், துளைத்தெடுத்து விடுவாள். யோசிக்கலானேன், காரணம் என்னவாக இருக்கலாம் என்று.

''உனக்கும் தெரியாதா, அப்பா?''

பதில் சொன்னேன்—''போன வாரம் ஆஞ்சநேயர் கோயிலுக்குப் போயிருந்தோமே, நினைவிருக்கிறதா?''

''ஆமாம்.''

''அப்பொழுது நமக்கெல்லாம் பிரசாதம் கிடைத்தது அல்லவா?''

''ஆமாம்! வடை மாலை சாத்தியிருந்தார்கள் யாரோ?''

''நீயே பதில் சொல்லி விட்டாயே உன் கேள்விக்கு?''

அவள் புரிந்து கொள்ளவில்லை.

''நீயே சொல்லு, நடுவில் துளை இல்லாவிட்டால், எப்படி வடையைக் கோத்து மாலையாக அனுமாருக்குப் போட முடியும்?''

ஓடி விட்டாள் வைதேகி, பதில் கிட்டிய மகிழ்ச்சியுடன். தப்பினேனும் ஒரு தினுசாக என்று நானும் மகிழ்ந்து கொண்டிருக்கும்போது அடுப்பங்கரையிலிருந்து இல்லத்தரசி வந்தாள்.

''உங்கள் பதிலைக் கேட்டுக் கொண்டு தான் இருந்தேன். சகிக்கவில்லை உங்கள் காரணம்.''

''பின்னே? நீதான் சொல்லேன், சரியான காரணத்தை. சமையற்கலையில் விற்பன்னனா நான்?''

''நடுவிலும் ஒரு துவாரம் இட்டு வைத்தால், பண்டம் நன்றாகவும் சீக்கிரமாகவும் வேகும். நடுவோடும் கொதிக்கிற எண்ணெய் புகுந்து வடையைப் பதமாக ஆக்கும். புரிந்ததா?''

## பண வேல்!

என் நண்பர் ஒருவர் பெயர் தனவேல் என்பதாகும். தங்கவேல் என்ற பெயர் உண்டு. வஜ்ரவேல், வைரவேல்... இந்தப் பெயர்களையும் கேட்டிருக்கிறோம். ஆனால் இவற்றைவிட அழகான, பொருள் பொதிந்த தெய்வீகப் பெயர்கள் வேறு வேல்களாகத்தான் இருக்க முடியும். மாணிக்கவேலும் மரகத வேலும் வேங்கடரத்தினம் போலத்தான்!



சக்தி வேல், வெற்றி வேல், வீர வேல், ஞான வேல். இத்தகைய பெயர்

களை விட்டுவிட்டு நாம் வர வரப் பணம் காசில் ஊறித் திளைக்கிறவர்களாக மாறி வருவதை மறைமுகமாக ஒப்புக் கொள்கிறாற் போல், தங்கம், வைரம் வெள்ளி என்று வேலுக்கு அடைமொழி தரத் தலைப்பட்டுள்ளோம். தனவேல் என்பது சற்று 'நாசூக்'காகத் தொனிக்கிறது. பண வேல் என்று பச்சையாகச் சொல்லாத மட்டில் நம் பற்றுமேல் தான்!



## இதுதான் வழியா ?

மேனாட்டுப் பிரபல ஆங்கிலச் சஞ்சிகை ஒன்றைப் படித்துக் கொண்டிருக்கிறேன். அண்மையில் வரும் கிறிஸ்துமஸ் பண்டிகையை ஒட்டி, ஒரு சிறப்புக் கட்டுரை நான் படிப்பது. கிறிஸ்துமஸ் கடைத்தெருவின் தனிக் கோலாகலம் வர்ணிக்கப்படுகிறது. பண்டிகைக்கு முந்திய நாட்களில் நிகழும் மோட்டார் விபத்துக்கள் வீடுகளை அலங்கரிக்கும் மரபுகள்—இப்படிப் பற்பல செய்திகள்!

கிறிஸ்து பெருமான் பிறந்த நாள் கொண்டாட்டத்தையொட்டி நியூயார்க் நகரத்தில் மட்டுமே, 'கேக்' செய்வதற்காக எத்தனை லட்சம் கோழி முட்டைகள் செலவாகின்றன என்ற விவரத்தைப் படித்தவுடன் தலை சுற்றுகிறது. இதை ஒரு பெரிய அரும் பெரும் தகவலாகத் தர வேண்டிய அளவுக்குப் பெருமைப்பட வேண்டிய செய்தியா இது? கிறிஸ்து மகான் அன்பு வழியைக் காட்டிய அருள் வல்லாளர். அவர் பிறந்த நாள் கொண்டாட்டத்துக்கு இவ்வளவு கோழிகள் தலை கிள்ளி எறியப்படுகின்றன என்பது போன்றதொரு செய்தி திகைக்க வைக்க வில்லையா ?

மகா புருஷர்களுக்கும் மக்களுக்கும் இடையில் உள்ள தூரம் எல்லா மதங்களிலுமே நிறையத்தான் இருக்கும் என்ற பேருண்மையைத்தான் எடுத்துக் கொள்ள வேண்டும் படிப்பினையாக.

அந்த நாட்களில் நான் திருச்சியில் இருந்தேன். வைகுண்ட ஏகாதசி வந்தது. குறிப்பாக, அடுத்துள்ள ஸ்ரீரங்கத்திலே அது தான் தலைசிறந்த திருநாள். அந்த ஆண்டு,




தெரு எங்கும் சுவரில் இப்படி ஒரு விளம்பரம்!

'வைகுண்ட ஏகாதசியை முன்னிட்டு வரும்......-ம் தேதி இரவுப் பத்தரை மணிக்குத் திருவாரூர் சகோதரிகள் லதா, பாமினி, ராணியின் கண் கவர் நடனங்கள். காணத் தவறாதீர்கள்!'

என் வேற்று மத நண்பன் ஒருவன் வினவினான் — ''வைகுண்ட ஏகாதசி இரவிலே நல்ல நடனங்கள் காண வேண்டும் என்று உங்கள் சாஸ்திரத்தில் ஏதும் இருக்கிறதா?''

நான் அன்று பதில் கூற வில்லை. அவமானத்தில் குன்றிப் போனேன். உபவாசம் இருந்து, உறக்கம் ஒழித்து இரவெல்லாம் விழித்திருந்து தவம் காக்க வேண்டும் என்பது பெரியோர் இட்ட கட்டளை. முடியாதவர்கள் வயிறு புடைக்கத் தின்று, தூங்கிக் கிடக்கலாம். கண் கவர் நடனங்கள் பார்த்தாவது கண் விழித்து நிற்க எந்த மதமும் உத்தரவிடாது. இவ்வுண்மை சொல்லித் தெரிய வேண்டியதே அல்ல.

நம் எல்லா மதங்களுமே, பாவம், இப்படித்தான் போய் விட்டன. ஈழத்திலே பகவான் புத்தரது பல் ஆலயம் கொண்டிருக்கும் கண்டித் தலத்திலே, கோயிலை அடுத்து வெளியே காணக் கிடைக்கும் காட்சி பற்றிப் படித்தபோதும், வருத்தம்தான் தோன்றியது.

## மூட்டைப்பூச்சி புராணம்

நண்பனும் நானும் ஒரு மகாநாட்டுக்குச் சென்றிருந்தோம்.

இரவு வந்தது. படுக்கைகளை விரித்துப் படுத்தோம்.

ஒருகணம் கூடத் துயில் இல்லை. காரணம் மூட்டைப் பூச்சிதான். (சரியான சொல் முகட்டுப் பூச்சி என்று நினைக்கிறேன். வீட்டில் மூலை முடுக்குகள் மேட்டிலிருந்தெல்லாம் அது வருவதால் அதற்கு அப்பெயர் என்பர். இப்போது மூட்டைப் பூச்சி என்ற திருநாமம் தவறானாலும் வழக்கில் வந்து விட்டது எனலாம். எனவே அவ்வாறு குறிப்பிடுகிறேன். நாட்டுப் பெண்

என்ற மிகவும் சரியாகச் சொல்வது போல் நினைத்துக் கொண்டு, சொல்லிச் சொல்லி அந்தப் பெயரே குடி புகுந்த பெண்ணுக்கு நிலைத்துவிட வில்லையா? மாற்றுப்பெண் என்று சரியாகச் சொல்பவர் எவ்வளவு பேர் உள்ளனர்? அது போல் மூட்டைப் பூச்சி என்றே சொல்வோமாக!)

படுக்கையிலே, முதுகிலே, முகத்திலே, காலிலே, கன்னத்திலே, வயிற்றிலே வாயுதட்டிலே சரசரவென்று மூட்டைப் பூச்சிகள் ஊர்ந்தவாறு இருந்தன. என் நண்பர் ஒரு வழி கண்டார். திடீரென விளக்கைப் போட்டு மாட்டிக் கொள்ளும் பூச்சிகளையெல்லாம் தீர்த்து விடுவது என்பதுதான் அவருடைய யோசனை. ஆகையால் சிறிது நேரம் படுத்திருந்த மனிதர் திடுதிப்பென்று எழுந்து, சுவரில் இருந்த பித்தானை அழுத்தினார். வெளிச்சத்தைக் கண்டதும் பரமசாது போலப் பதுங்கிக் கொள்ள வெகு வேகமாக மூட்டைப் பூச்சிகள் நகர்ந்து கொண்டிருந்தன.

அப்பப்பா! என்ன வேகம்! என்ன சுறுசுறுப்பு!

"என்ன வேகம் பார்த்தீர்களா? பிடித்து நசுக்குவோம் என்றால், பாதிக்கு மேல் எல்லாம் அதற்குள் ஓடி ஒளிந்து கொண்டு விட்டனவே?" என்றார்.



நான் எங்கோ கேள்விப்பட்டதை உடனே சொன்னேன். "நசுக்கிவிடக் கூடாது. உமக்குத் தெரியாதா சமாசாரம்? மூட்டைப் பூச்சியை நசுக்கினால் அந்த இரத்தத்திலிருந்து இன்னும் பூச்சிகள் உற்பத்தி ஆகுமாம். கேட்டதில்லையா நீங்கள்?"

கலகல வென்ற சிரிப்புடன், புதுக் குரல் ஒன்று பேசியது. எங்களுக்குப் பக்கத்தில் படுத்திருந்த யாரோ ஒருவர் எங்களைப் போல மகாநாட்டுக்கு வந்து மாட்டிக் கொண்ட பிரதிநிதி, அழகாகச் சொன்னார்.

"என்ன வேகம், என்ன சாமர்த்தியம் என்று புகழ்ந்தீர்களே! அதற்கெல்லாம் மேலே தங்களைப் பற்றி இப்படி வதந்தியைக் கிளப்பி விட்டுக் கொண்டிருக்கின்றன பார்த்தீர்களா? இவற்றின் புத்தி கூர்மையை என்னவென்பது? பூச்சி ஏதும் வந்தால் உடனே யாரும் அதைப் பட்டென்று அடித்துச் சட்டினி செய்வதுதான் வழக்கம். அப்படிச் செய்து விடாதபடி, நசுக்கினால் தங்கள் இரத்தத்திலிருந்து புதுப் பூச்சிகள் ஆயிரக் கணக்கில் கிளம்பி விடும் என்று ஒரு வதந்தியைக் கிளப்பி விட்டுப் பிழைத்து வரும் இந்த ஜன்மங்களை எப்படிப் பாராட்டுவது?"

அவர் சொல்லியது சரியான பேச்சு. மூட்டைப் பூச்சியை நசுக்கிக் கொல்லக் கூடாது. மண்ணெண்ணெயில் போட வேண்டும், அல்லது நல்லெண்ணெயில் போட வேண்டும் என்ற தத்துவங்கள் பேருண்மைகளெல்லாம் எங்களுக்குத் தலைகீழ்ப் பாடம். ஏதோ மகாநாட்டுக்கு வந்த இடத்தில் மண்ணெண்ணெயா கொண்டு வருவோம் நாங்கள்? பேசாமல், கைக்குக் கிட்டிய மூட்டைப் பூச்சிகளுக்கும் உயிர்ப்பிச்சை கொடுத்தோம்.

## பாம்பரைத் தொழில்-புதிய ரகம்

இந்த நாட்டிலே வர்ணாசிரம தர்மம் என்பதாக ஒன்று இருந்ததாம். தொழில்கள் பரம்பரையாக அப்பனிடமிருந்து பிள்ளைக்கு என்று வழி வழிவந்து கொண்டிருந்த அம்முறை ஒழிய வேண்டும் என்று சொல்வது இன்றைய உலகில் ஏறக்குறைய ஒரு 'நாகரிகம்' போல ஆகி விட்டது.

ஆனால் நடப்பது என்ன? சமீபத்தில் அஞ்சல் இலாக்கா ஊழியர்களில் ஒரு பகுதியினர் மகாநாடு கூட்டித் தீர்மானம் செய்திருக்கிறார்கள். என்ன, தெரியுமா? அவர்களின் மக்களுக்கு இலாக்காவில் சலுகை காட்டி வேலை வழங்க வேண்டுமாம். பாவம், அவர்களைச் சொல்லுவானேன்? அரிய பெரிய டாக்டர்களின் குமாரர்களுக்கு வைத்தியத் துறைக் கல்லூரிகளில் பயில இட வசதி அளித்திருக்கிறார்கள் — பச்சையாக அல்ல; சுற்றி வளைத்து. தந்தை ஈட்டிய தொழில்('பிராக்டிஸ்') வளமும், வைத்திய சாலையும் அதன் பொருள்களும் ('எக்விப்மெண்ட்') வீணாவானேன்? இப்படி மறைமுகச் சப்பைக்கட்டுக் கட்டிப் பேசப்படும்.

நல்ல வேலை வசதி உள்ள தந்தையர் யாவருக்குமே ஒரு நைப்பாசைதான், தம் மக்களும் தம்மைப் போல வாழட்டுமே என்று. இயற்கையான மன்னிக்கத் தக்க மனித புத்திதான் இது; பிரமாதத் தவறு ஒன்றும் இல்லை. ஆனால் தோட்டி வேலை செய்பவர்கள் இத்தகைய தீர்மானம் செய்வார்களா? தம் குழந்தை குட்டிகளாவது தம்மைப் போல் அல்லாது நன்றாக வாழட்டும் என்றுதானே எண்ணுவார்கள்.




ஸரோஜா ராமமூர்த்தி

**வி**ண்ணெங்கும் வெள்ளிமலர்கள் பூத்திருந்தன. தெளிந்த வானம்தான். ஒரே கருநீலம். எங்கோ பிறந்து தவழ்ந்து வந்துகொண்டிருந்த ஆறு ஒன்று அங்கே அமைதியாக நடை பயின்று கொண்டிருந்தது.

'சலசல' வென்று இனிய நாதம் கேட்கிறதே. அதுவும் ஆற்றின் ஒலிதான். உய்ய்... ய்ய்..... என்று காற்று நதியின் மேற்பரப்பில் வீசிப் பக்கத்தில் வளர்ந்திருந்த நாணற் புதர்களை உரசிச் சென்றவண்ணமாக இருந்தது. கண்ணுக்கெட்டிய தூரம் ஒரே பசுமை. ஆற்றின் இக்கரையில் பெரிய மஞ்சள் நிறக் கட்டடம் காணப்பட்டது. அக்கரையிலோ...

சிறியதும் பெரியதுமாக நெடுகிலும் காணப்பட்ட சமாதிகள்......?

வாழ்வு என்கிற தத்துவத்தின் முன்பு முரண்பட்ட இரண்டு கருத்துக்களுக்கு உவமையாக அமைந்திருந்தன.

நோயிலிருந்து மீண்டு வாழத் துடிக்கும் பல உயிர்களைத் தன்னுள்ளே வைத்துப் பாதுகாத்து வரும் ஆஸ்பத்திரிக் கட்டடம் அமைதியே உருவாக அந்த நட்ட நடுநிசியில் கம்பீரமாக நின்றிருந்தது.

வாழ்வு என்பது அநித்தியம் என்பதைப் பறைசாற்றுவதைப் போல் அக்கரைச் சமாதிக் கட்டடங்கள் மௌனமாக நின்றன.

பாஸ்கரன் வராந்தாக் கட்டிலில் சாய்ந்து உட்கார்ந்தவாறு ஆற்றங்கரைச் சமாதிகளைப் பார்த்துக் கொண்டிருந்தான். அமைதியும் நல்ல காற்றும் நோயாளிகளைக் குணப்படுத்தி விடும் என்கிற நம்பிக்கையில் அங்கே ஆஸ்பத்திரியைக் கட்டியிருந்தார்கள். ஆனால் ஒவ்வொரு நோயாளியும் ஆற்றின் அக்கரையைப் பார்த்துப் பெருமூச்சு விடுவது ஏனோ அவர்களுக்குப் புரியவில்லை.

மாலை மயங்கி மஞ்சள் வெயில் காயும்போது மட்டும் பாஸ்கரன் அந்தச் சமாதிக் கட்டடங்களை விட்டுத் தன் பார்வையை மறுபுறம் திருப்பினால் அங்கே அவன் நண்பன் ராஜு கையில் சாருவைப் பிடித்தவாறு நிற்பான்.

சுருள் சுருளாக நெற்றியில் தவழ்ந்து விளையாடும் கேசமும் கருவண்டு விழிகளும், குவிந்த உதடுகளுமாக அந்தக் குழந்தையின் ரோஜாக் கன்னங்களை அப்படியே வெறித்துப் பார்ப்பான் பாஸ்கரன்.

''மாமா! மாமா! நீ எப்படி இருக்கே?'' என்று ஆற்றின் ஒலி போலக் குரலை எழுப்பிச் சாரு விசாரிப்பாள்.

''எப்படி யிருக்கிறாய் பாஸ்கர்? குழந்தை கேட்கிறாள் பார்!'' என்று ராஜு நண்பனின் கவனத்தைத் தன்பால் ஈர்ப்பான்.

''இருக்கிறேன் என்னவோ?'' மறுபடியும் அவன் பார்வை அந்த வராந்தா, கட்டில், ஆற்றங்கரை எல்லாவற்றையும் தாண்டித் தொலைவில் சென்று நிலைத்துவிடும்.

பாஸ்கரனுக்கு உற்றார் உறவு என்று அதிகமாகச் சொல்லிக் கொள்ள யாரும் இல்லை. அப்படி இருந்தவர்களும் எங்கோ இருந்தார்கள். சிறு வயதில் மாமாவின் வீட்டில் வளர்ந்த காலத்தில் அவன் இளம் மனத்தில் உலகத்தில் காணும் நிறைவுகளை விடக் குறைவுகளைத்தான் அதிகமாகப் பதிய வைத்துக் கொண்டிருந்தான். 'மாமா பணக்காரர். ஏதோ புண்ணியத்துக்குக் கட்டுப்பட்டுத் தன்னைக் காப்பாற்றுகிறார்' என்று நினைத்து அவரிடமும் அவர் குடும்பத்தாரிடமும் ஒட்டவிடாமல் பிரிந்தே யிருந்தான் பாஸ்கரன். அவர் போன பிறகு அந்தக் குடும்பத்துடன் அவனுக்கு உறவு சுத்திரித்து விட்டது.

மாமா பெண் சீதாவை இவனே ஒருவேளை மணந்திருக்கலாம். 'அடேயப்பா! சீதுவா என்னை மணந்து கொள்கிறவள்? அவளும் அவள் ஸ்டைலும்' என்று தன்னையே குறைப்படுத்திக் கொண்டான். கடைசியாக யாரிடமும் சொல்லாமல் கொள்ளாமல் ஊரைவிட்டு வந்தவனுக்கு எப்படியோ ராஜு நண்பனாக வந்து வாய்த்தான்.

தனியாக வாழ ஆரம்பித்த பிறகுதான் குடும்பம், நாலு பேர்களுடன் ஒட்டுறவு இவை பற்றிய அவசியம் தெரிய ஆரம்பித்தது.

காலையில் ஹோட்டலில் காப்பி, பகலில் அங்கேயே உணவு, மாலை சிற்றுண்டியும் அங்குதான். இரவு மட்டும் என்ன வாழ்ந்தது? அந்த ஹோட்டலின் சாப்பாட்டு அறையில் ஒரு மூலையில் அமர்ந்து துளிக்கூடப் பசியோ,

அன்போ இல்லாமல் எவளோ காசுக்காக விசிய சாப்பாட்டைச் சாப்பிட்டு வந்தான்.

உறவு என்பது இளமையிலிருந்து ஒட்டி வாழ வேண்டிய ஒன்றல்லவா? திடீரென்று மாமாவையும் மாமியையும் உறவு கொண்டாடிக் கொண்டு அவன் போக விரும்பவில்லை. இந்த நிலையில் ராஜு அவனுக்கு வேலையும் தேடித் தந்து விட்டான்.

ஹோட்டல் சாப்பாட்டினுலோ அல்லது தனிமையினுலோ உடல் நிலை கெட்டுவிட்டது. நண்பன்தான் ஆஸ்பத்திரியில் சேர்த்து விட்டுத் தினமும் மாலைவேளையில் பார்த்து விட்டுப் போவான்.

"என்ன பாஸ்கர்! குழந்தை கேட்டதற்கு நீ ஒன்றுமே பதில் கூறவில்லையே....?"

வாழ்வு என்கிற சொல்லுக்கு இலக்கணமாகச் சாரு - அந்தக் குழந்தை-அவன் எதிரே நின்றிருந்தாள். அவள் மட்டும்தானு? அவள் இடுப்பிலே அணைத்துப் பிடித்திருந்த அந்தப் பொம்மைகூட உயிர்த் துடிப்புடன் காணப்பட்டது.

குழந்தை சாரு அதைச் சாய்க்கும் போது அது கண் உறங்கியும், நிமிர்த்த போது கண் விழித்தும் இந்த உலகத்துடன் வாழ்ந்து விளையாடிக் கொண்டிருந்தது.

அவனுக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது. 'சீ! என்ன வேண்டியிருக்கிறது இதெல்லாம்? தினம் தினம் பார்க்கையில் இந்த ஆற்றங்கரையில் கண்ணுக்கெட்டிய தூரம் மறைந்தவர்களின் நினைவுச் சின்னங்கள் முளைத்து எழுந்து கொண்டே யிருக்கும்போது?

எல்லாமே பொய் என்கிற வேதனையுடன் சாருவை அவன் திரும்பிப் பார்த்தான். சாருவுக்கு மாமாவின் கண்களில் தெறித்த வேதனை அருவை எதுவும் புரியாவிட்டாலும், மாமாவுக்குத் தன்னைப் பிடிக்கவில்லை என்பது மட்டும் நன்ருகப் புரிந்தது.

"வாப்பா போகலாம்...." தந்தையின் கையைப் பற்றி இழுத்தாள் குழந்தை.

"பாஸ்கர்!" என்று அழைத்தவாறு ராஜு கட்டிலின் மீது உட்கார்ந்தான்.

"இங்கே பார், பாஸ்கர்! உடல் நலம் சரியில்லாதவர்கள் மனத்தை மிகவும் உற்சாகமாக வைத்துக் கொள்ள வேண்டும். நீ எப்பொழுதும் அந்தக் கல்லறைகளையே பார்த்துப் பொழுதைப் போக்குவது எனக்குப் பிடிக்கவில்லை. வேண்டுமானுல் நர்ஸிடம் சொல்லி உனக்கு இடத்தை மாற்றச் சொல்லட்டுமா...?"

ஆயாசத்துடன் தலையசைத்து விட்டான் பாஸ்கரன். நண்பனிடம் விடைபெற்றுக் கொண்ட ராஜு சாருவுடன் தொலைவில் செல்வதைப் பாஸ்கரனுல் நன்ருகக் காண முடிந்தது. இடுப்பில் சாய்த்து அணைத்த குழந்தைப் பொம்மையுடன் அந்தக் குழந்தை தந்தையின் கரம் பற்றித் துள்ளித் துள்ளி வேகமாக ஓடினுள்.

'நடக்கவே தெரியாதோ. இந்தக் குழந்தைகளுக்கு? எதற்கும் ஓட்டம்தான். வாழ்ந்து முன்னேற வேண்டும் என்கிற உயிர்த் துடிப்பு அவைகளுக்கு!'

பாஸ்கரன் மறுபடியும் ஆற்றங்கரையைப் பார்த்தபோது சோக மௌனத்துடன் மெதுவாக நடந்து செல்லும் சிறு கூட்டம் ஒன்றைப் பார்த்தான்.

அதோ அவர்கள் கல்லறைத் தோட்டத்துக்குள் நுழைகிருர்கள். இன்னும் என்ன என்னவோ செய்கிருர்கள். கண்ணீர் சிந்துவதினுல்தான் முகத்தைத் துடைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. திரும்பிப் போகிருர்கள். மனத்துக்கு இனியவராக, உற்றவராக — இருந்த ஓர் உறவை இழந்து ஏதும் செய்ய முடியாமல் கலங்கியவாறு போகிருர்கள்.

"ஹூம்...ராஜுவுக்குப் பைத்தியம். எதன் மீதும் பற்ருே பாசமோ வைக்காதே என்று அவனிடம் சொல்லிவிட வேண்டும்..." என்று பாஸ்கரன் தனக்குள் முணுமுணுத்துக் கொண்டான்.

இதற்குள் மாலை மயங்கி இருள் சூழத் தொடங்கிவிட்டது. தெரு விளக்குகளெல்லாம் குபீரென்று எரிய ஆரம்பித்தன. ஆஸ்பத்திரி விளக்குகளும் கூடத்தான். படுக்கையில் கிடந்த நோயாளிகள் அந்த ஒளிப்பிழம்பைக் கைகுவித்து வணங்கினர்கள்.



மாலை டியூட்டி நர்ஸ் வந்து விட்டாள்.

''மிஸ்டர் பாஸ்கரன்! சற்று முன் வந்து விட்டுப் போனாரே உங்கள் நண்பர் அவர் உங்களை இந்த இடத்தை விட்டு மாற்றி வேறு படுக்கைக்கு அனுப்பச் சொன்னார். ஏன் அப்படி...?''

இளமையின் செழிப்பும், வனப்புமாக அந்த நர்ஸ் அவனைக் கேட்டவாறு முறுவலித்தாள். வெள்ளை வெளேர் என்கிற உடையும், முகத்தில் இலேசாக ஒற்றிய பௌடரின் நறுமணமும் அவனைச் சற்று அவள்வசம் ஈர்த்தன.

அந்த விற்புருவங்களை ஏற்றியும் இறக்கியும் அவன் முகத்தைச் சாய்த்து அவனைப் பார்த்தாள். ஒரே சீராகத் தீட்டிய செயற்கைப் புருவங்கள்தாம். இருந்தாலும் அந்தப் பெண் கலை உள்ளம் படைத்தவள் என்பதை அவள் ஒப்பனை நன்கு எடுத்துக் காட்டியது.

''என்ன மிஸ்டர்! நீங்கள் பேச மாட்டேன் என்கிறீர்கள்?''



நர்ஸ் சிரித்துக் கொண்டே படுக்கை விரிப்புக்களின் மடிப்புக்களைப் பிரித்துச் சீர் செய்தவாறு அடுத்த கட்டிலை நோக்கி நடந்தாள்.

முத்துச் சரங்களைப் போல் வரிசையாக அமைந்த அப்பத்களின் ஒளியில் அவன் மறுபடியும் தன்னை இழந்தான்.

திரும்பவும் அவன் எதிரே ஆற்றின் மெல்லிய உருவம் மங்கலாகத் தெரிந்தது. விஷமக்காரக் குழந்தை மணற்பரப்பில் கிறி விட்ட வளைந்த கோட்டைப் போல அது வளைந்தும் நெளிந்தும் சென்றது. அதற்கும் அப்பால் சமாதிகள்.

சமாதிக் கட்டடங்கள் மீது மரமல்லிகை மரங்கள் குடை போல் கவிந்து நின்றன. காற்றில் ஆடும் போது மலர்களைத் தூவின. பாஸ்கரனுக்குச் சற்று முன் பார்த்த நர்ஸின் மோகன உருவத்தில் அலுப்பேற்பட்டது.

நிலையற்ற இந்த உலகத்தில் வாழும் உயிர்களுக்கு நிலையான எத்தனை எத்தனை ஆசைகள்! ராஜூவுக்கு அவன் மகள் மீது நிலையான அன்பு. நர்ஸுக்கு அவள் ஆடை, அலங்காரத்தின் மீது ஆசை. எல்லாமே நிலையானவை என்னும் மயக்கத்தில் இவர்கள் ஆழ்ந்திருக்கிறார்கள்.

இந்த மயக்கம் தெளிந்து விட்டால்! இது வரை உலக மக்களில் பெரும்பாலோரில்—யாருக்குத் தெளிந்திருக்கிறது? தெளியாமல் இருப்பதினால்தான் உலகம் வாழ்ந்து கொண்டிருக்கிறது.

பாஸ்கரன் எப்பொழுது தூங்கினானோ தெரியாது. காலை வந்தது தான் தெரியும்.

''இரவு நன்றாகத் தூங்கினீர்கள், மிஸ்டர். உடல் நிலையும் கொஞ்சம் தேவலை. இன்னும் நாலைந்து தினங்களில் உங்களை 'டிஸ்சார்ஜ்' செய்து விடுவோம்—'' மற்றொரு நர்ஸ் இவ்விதம் கூறி விட்டுப் புன்னகை பூத்தாள்.

பாஸ்கரன் மௌனமாக இருந்தான். ஒருத்தி மாற்றி ஒருத்தி இப்படித்தான் சிரித்துச் சிரித்துப் பேசுகிறார்கள். சிரிப்பதைத்தவிர இவர்களுக்குவேறெதுவும் தெரியாதுபோலும்!

திரும்பவும் ஆற்றங்கரையைப் பார்க்க ஆரம்பித்தான். காலையின் சுறுசுறுப்போ, களிப்போ எதுவும் அங்கு தென்படவில்லை. உலகமே ஒரு மாயை என்கிற தத்துவத்தின் விளக்கம் போல் சமாதிகள் நின்றன. அவற்றின் மீது முத்தெனப் பனித்துளிகள். மரமல்லிகை மரங்கள் பூவாகச் சொரிந்து உலகத்தின் நிலையாமைத் தத்துவத்தின் சின்னங்களுக்கு மரியாதை செய்தன. எங்கும் அமைதி. அதை அடுத்து வாழும் உலகத்தைத் துச்சமாகப் பார்க்கும் பார்வை போலச் சமாதிகள் கதிரவன் ஒளியில் உலகை வெறுத்துப் பார்த்தன.

பாஸ்கரன் இதயம் கனக்க, வேதனை பொங்கும் உள்ளத்துடன் அவைகளைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

மணிப்படி எல்லாம் நடந்தன. மருந்துகள், உணவு. எப்படியோ நடுப்பகலில் அவனைத் தூக்கம் ஆட்கொண்டது. விழித்துப் பார்த்த போது துணுக்குற்று எழுந்து உட்கார்ந்தான் பாஸ்கரன்.

ஆற்றங்கரை ஓரமாகப் பூப்பல்லக்கில் சின்னஞ்சிறு பூ உடலை ஏந்திக் கொண்டு பலர்

விரைந்து கொண்டிருந்தார்கள். அந்தச் சின்னஞ்சிறு தளிர் இருக்கவா உலக வனத்தில் இடமில்லாமல் போய் விட்டது? விளங்காத, விடை தெரியாத இந்த வினாவை எழுப்பித் தனக்குள் வெந்தான் பாஸ்கரன்.

என்ன உடம்போ? ஆணோ, பெண்ணோ? பெற்றவள் பத்து மாதம் சுமந்து, ஐந்தாறு வருடங்கள் வளர்த்த கடனுடன் — எப்படி நீராகக் குமைகிறளோ? மலரைக் காட்டி— மறைத்த மாதிரி இருக்கிறதே இறைவனின் திருவிளையாடல்.

இதெல்லாம் திருவிளையாடல் என்று கூற முடியும்? 'பிறத்தல், காத்தல், அழித்தல்' செய்யும் இறைவன் இது எதிலும் ஒட்டாதவனும். அவனை எதுவுமே அண்டுவதில்லை. எல்லாவற்றையும் கடந்து நிற்பவன்.

**மா**லை மயங்கிக்கொண்டே வந்தது. கால தேவனின் தாளத்தில் ஒரு மாத்திரைகூடப் பிசகில்லாமல் பொழுதுகள் பிறந்து, வளர்ந்து தேய்ந்து வந்தன. அதில் இந்த மாலைப் பொழுது ஒன்று.

ராஜு வருவான் என்று எதிர்பார்த்தான் பாஸ்கரன். அவன் வரவில்லை. அவனுடன் அவன் மகளையும் எதிர் நோக்கியிருந்தவனுக்குப் பெருத்த ஏமாற்றம் தான்.

சின்னஞ்சிறிய உருவமாக இருந்தாலும், அன்பில் பெரிதாக இருந்தது அந்தக்குழந்தை.

ஏனோ இன்று அவனுக்கு அந்தக் குழந்தையைப் பார்த்தால் ஆறுதல் ஏற்படும் போல் இருந்தது. படுக்கையில் அந்தப்புறம் சாய்ந்து வராந்தா வழியாக மக்கள் கூட்டம் வழிந்தோடும் நெடுஞ்சாலையைப் பார்த்தான் பாஸ்கரன். எண்ணற்ற கார்கள், வண்டிகள், சினிமா விளம்பரங்கள், சாரி சாரியாக ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் ஏதோ நம்பிக்கையின் பேரில் விரைந்து சென்று கொண்டிருந்தார்கள்.

ராஜுவையும், குழந்தையையும் மட்டும் காணோம். ஆஸ்பத்திரி விளக்குகள் எரிந்தன. வழக்கம் போல மருந்து, விசாரணை, உணவு, அன்றையப் பொழுது தேய்ந்து விட்டது.

பாஸ்கரன் எப்படியோ தூங்கி விட்டான். நடு இரவில், அவன் விழித்த போது தற்செயலாக அவன் பார்வை ஆற்றின் பக்கம் சென்றது.

புதிய மண் மேட்டின் அடியில் யார் பெற்ற செல்வமோ மீளாத் தூக்கத்தில் துயின்று கொண்டிருப்பதைப் பார்த்தான். நேற்று வரை பெற்றவர்களுக்குச் செல்வமாக இருந்தது இன்று மண்ணுடன் இரண்டறக் கலந்து உலகம் பொய் என்பதற்குச் சான்று கூறியது.

'ராஜு ஏன் வரவில்லை? ஒரு தினமாவது தவற மாட்டானே!' விடை தெரியவில்லை.

காலை வந்ததையும், பகல் வளர்ந்ததையும், மாலை வரப் போவதையும் கடிகாரம் தவறாமல் காட்டிக் கொண்டு வந்தது. அன்றும் ராஜு வரவில்லை.

'ராஜு இன்னும் ஏன் வரவில்லை? வராமல் இருக்க மாட்டானே!'' அன்றும் பொழுது போய் விட்டது.

'இன்று கண்டிப்பாக ராஜு வருவான்.' நம்பிக்கை ஒளி வீசப் பாஸ்கரன் மாலைப் பொழுதை எதிர்நோக்கி யிருந்தான்.

ஆனால், அன்று ராஜு பகலிலேயே வந்தான்; வெறுங் கையோடு, அவன் கையைப் பிடித்து வந்து மழலை மிழற்றும் அந்தச் செல்வம் எங்கே? ராஜுவின் முகத்தில் வழக்கமாகக் காணப்படும் மலர்ச்சி, தெம்பு எதுவும் இல்லை.

கண்களில் வடிந்த துயரமும் முகமெங்கும் தாடியும் மீசையுமாக ராஜு ஒரு நாளும் அப்படி யிருந்ததில்லை. நடை உடை பாவனைகளில் 'டிரிம்' ஆக இருக்க விரும்புகிறவன்.

''என்ன பாஸ்கர்! எப்படி யிருக்கிறாய்?'' குரல் உடைந்து கரகரப்பாக வெளிவந்தது.

''என்னவோ இருக்கிறேன். நீ ஏன் இரண்டு நாட்களாக வரவில்லை ராஜு? குழந்தை எங்கே?''

சவுக்கின் நுனியால் குரூரமாகச் சொடுக்கி விட்டாற் போல் 'குழந்தை எங்கே?' என்கிற வினா ராஜுவின் உள்ளத்தில் சுரீர் என்று வேதனையை எழுப்பி, ''பாஸ்கர்! பாஸ்கர்! குழந்தை எங்கே? நீதான் சொல்லேன்! என் கண்மணி சாரு எங்கே? தெரியவில்லை பாஸ்கர்... அவள் போய் விட்டாள் பாஸ்கர்...'' என்று குமுறிக் கதறினான் ராஜு, கட்டில் விளிம்பைப் பார்த்துக் கொண்டு.

சற்றுத் தள்ளியிருந்த நோயாளிகள்கூட 'த்சொ' த்சொ' என்று அனுதாபக் குரல் எழுப்பினர்.

பாஸ்கரன் அடித்து வைத்த சிலையானான்.


அவர்களுக்கு
நீபா மிட்டாய்கள் வழங்குங்கள்
அவைகள் ருசி மிக்கவை

சிந்தும் சிரிப்புடன் பொம்மையை அணைத்துப் பிடித்த சாரு அவனைப் பார்த்து, 'மாமா நீ எப்படி இருக்கே?' என்று கேட்பது போல் இருந்தது.

ராஜு ஒரு நிதானத்துக்கு வரச் சில நிமிஷங்கள் ஆயின.

பிறகு வக்கீலையாகக் கூறினன். சாருவும் அவனும் ஆபீசுக்கும் பள்ளிக்கும் ஒன்ருகத் தான் கிளம்பினர். குழந்தை பின்னுடிதான் வருகிருளே என்று அசட்டையாக முன்னே போய்க் கொண்டிருந்தான்.

எதிரும் புதிருமாக இரண்டு லாரிகள் வந்தன. மோதிக் கொண்டன. பின்னல்?

திரும்பிப் பார்த்த ராஜுவின் செவிகளில் 'பிரேக்'கின் கிரீச்சிட்ட ஒலிகளும் பல குரல்களின் கத்தலும் ஒரே சமயத்தில் வந்து மோதின.

மலர்ந்த மலராய்ச் சற்று முன் காற்றிலே அசைந்த அந்தப் புது மலர் ஒரு நொடியில் நடுத் தெருவில் ரத்த வெள்ளத்தில் மிதந்து கிடந்தது.

பாஸ்கரனுக்கு மூன்று நாட்களுக்கு முன்னல் ஆற்றங் கரையில் கண்ட நிகழ்ச்சிகள் நினைவுக்கு வந்தன.

நண்பர்கள் ஒருவரை யொருவர் ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டார்கள். ராஜு தன்னை நன்ருகச் சமாளித்துக் கொண்டு குரல் அடைக்கப் பேசினன்.

"பாஸ்கர்! வீட்டிலே எனக்கு இருப்புக் கொள்ள வில்லை. எங்கு போனலும் எதைப் பார்த்தாலும் சாருவின் நினைவு என்னை நிலை கொள்ளாமல் அடித்துக் கொண்டே இருந்தது. திடீரென்று உன் நினைவு வந்தது. நீ எப்படி இருக்கிருயோ என்று பார்த்துப் போக வந்தேன்...."

கையை விட்டு மறைந்த பொருளின் நினைவு மனத்தை அழுத்தினலும் கண்ணெதிரே காணும் பொருளின் வாழ்வைக் கவனித்துப் போக வந்திருக்கும் ராஜுவை நன்றியுடன் பார்த்தான் பாஸ்கரன்.

ஆற்றங்கரையும் அந்தச் சமாதிகளும், அவன் மனத்தில் அருவருப்பை ஏற்படுத்தின.

தோன்றுதலும், மறைதலும் காலத்தின் செயல்களாகப் பரிணமித்தாலும் உலகம் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறது. அந்த உலகம் நன்ருக வாழ வேண்டும்.

ராஜுவுக்கு உலக வாழ்க்கை மீது ஆசை பிறந்ததற்கு அடையாளமாக அவன் அங்கு வந்த நர்ஸை அழைத்தான்.

"மிஸ்....எனக்கு வேறு இடத்தில் படுக்கை கொடுக்க முடியுமா?" என்று கேட்டான்.

"அதற்கு அவசியமில்லை மிஸ்டர். நாளைக் காலையில் உங்களை 'டிஸ்சார்ஜ்' செய்யும்படி டாக்டர் பணித்திருக்கிருர். உங்களுக்கு உடம்பு நன்ருகக் குணமாகி விட்டது."

நர்ஸ் புன்சிரிப்புடன் உயிர்த் துடிப்புடன் நடந்து கொண்டிருந்தாள்.

# படித்துப் பாருங்கள்!

## ஆத்திச்சூடிக் கதைகள்

தமிழ்ச் செய்யுள் என்றதுமே குழந்தைகளின் முகம் விளக்கெண்ணெயைக் கண்டது போலச் சுருங்கும். பதவுரை பொழிப்புரைக்குப் பிறகு தானே அதன் பொருளை உணர முடியும். அந்தக் கஷ்டங்களுக் கெல்லாம் உள்ளாக்காமல் ஆத்திச்சூடியின் ஒவ்வொரு செய்யுளுக்கும் ஒவ்வொரு கதையாகச் சொல்லி அதன் பொருளை விளக்கி யிருக்கிருர் ஆசிரியர். காட்டில் நடக்கும் பள்ளிக்கூடத்தில் குரங்கு வாத்தியார் கதை சொல்லுகிருர் என்ருல் குழந்தைகளின் ஆர்வத்துக்குக் கேட்பானேன்?

ஆசிரியர்: எஸ். ரங்கநாயகி; வெளியீடு: அருணேதயம், ராயப்பேட்டை, சென்னை-14. விலை: ரூபாய் ஒன்று.

## மிருகங்கள் நடத்தும் சர்க்கஸ்

புத்தகத்தின் தலைப்பைப் படித்ததுமே நீங்கள் கதையை ஓரளவு ஊகித்துக் கொண்டிருப்பீர்கள். மிருகங்களாவது ஒரு சர்க்கஸ் நடத்துவதாவது என்ற ஐயமும் உங்களுக்கு ஏற்பட்டிருக்கும். கோமன் மாஸ்டரின் சர்க்கஸையும் அதில் இருந்த மிருகங்களிடம் அவர் கொண்டிருந்த அன்பையும் படிக்கும்போது இந்த ஐயம் பறந்து விடும். கோமன் வளர்த்த கேனன் தன் எஜமானரை வஞ்சித்துச் சர்க்கஸைத் தன்னுடைய தாக்கிக் கொண்டு, அவரை விரட்டியபோது மிருகங்களெல்லாம் அவருடனேயே சென்றதையும், அவர் உயிர் பிரியும்போது அத்தனை மிருகங்களும் அவரைச் சூழ்ந்து உட்கார்ந்துகொண்டு கண்ணீர் வடித்ததையும் படிக்கும்போது நம் கண்களிலும் நீர் திரண்டு விடுகிறது.

கேனனிடம் வேலை செய்ய விரும்பாத மிருகங்கள் தாங்களே ஒரு சர்க்கஸ் கம்பெனியை ஆரம்பிக்கின்றன. ஆவி ரூபத்தில் கோமன் மாஸ்டர் சிம்பனியின் உடலில் புகுந்து விதம்விதமான புதிய விளையாட்டுக்களைக் கற்றுத் தருகிருர். மிருகங்கள் நடத்தும் சர்க்கஸுக்கு எங்கு சென்ருலும் வரவேற்பு. அதற்குக் குழந்தைகள் மட்டும்தான் வரலாம். பெரியவர்களை அனுமதிப்பதில்லை. இப்படிக் கதை சுவாரசியமாகப் போகிறது. அது மட்டுமா? கோமன் மாஸ்டரின் காணுமல் போன மகன் ராமு, அவனைக் கொடுமைப் படுத்தும் சாப்பன், ஒற்றுமையாக இருந்த மிருகங்களுக்குள் ஒரு துரோகி ஏற்பட்டுப் பிளவு உண்டாவது இப்படிக் கதைக்கு விறுவிறுப் பூட்டும் பல அம்சங்களும் இருக்கின்றன. படிக்க ஆரம்பித்தால் முடிக்காமல் மூட முடியாது. அதுவும் குழந்தைகளுக்குக் கன ஜோரான கதை. புத்தகம் முழுதும் படங்கள் கதையின் ஓட்டத்துக்கு உதவுகின்றன.

மலையாள ஆசிரியர்: மாலி; தமிழாக்கம்: எம். பி. சுப்பிரமணியம், வெளியீடு: மீனட்சி புத்தக நிலையம், 60, மேலக் கோபுரத் தெரு, மதுரை-1. விலை ரூ. 1-50.



இந்திய அரசாங்கத்தின் அழைப்பின்பேரில் பாரதத்தில் சுற்றுப் பிரயாணம் செய்த இலங்கைப் பத்திரிகையாளர் கோஷ்டியினருக்குத் தமிழ் நாடு பத்திரிகை நிருபர் சங்கத்தினர் வரவேற்பளித்துக் கௌரவித்தனர்.

மட்டக்களப்பு தமிழ் எழுத்தாளர் சங்கம் நடத்திய கவியரங்கில் பல கவிஞர்களும் அறிஞர்களும் கலந்து கொண்டனர். சென்னையிலிருந்து இவ்வைபவத்துக்கு வந்திருந்த திரு அழ. வள்ளியப்பா உரையாற்றுவதைப் படத்தில் காணலாம்.



காற்றிலேறி விண்ணையும் சாட முடியும் என்பதை நிரூபித்துக் காட்டியவர் அமெரிக்க விண்வெளி வீரர் கர்னல் ஜான் கிளென். அவர் வெற்றிகரமாக வானத்தில் பயணம் செய்து உலகையும் சுற்றிவந்திருக்கிறார். விண்வெளிப் பயணத்துக்கான உடைகளை யணிந்து கிளென் காட்சி யளிப்பதைக் காணலாம்.





இலங்கை எழுத்தாளர் திரு பாலசுப்பிரமணியம் சௌபாக்கியவதி ரஞ்சிதத்தை மணம் புரிந்து கொண்டார்.

சென்னை ரெவின்யூ போர்ட் உதவிக் காரியதரிசி திரு எம். கே. சுப்பிரமணியம் அவர்களின் புதல்வி சௌ. நீலா திரு அருணாசலத்தை மணம் புரிந்து கொண்டார்.

இலங்கை சிறுகதை எழுத்தாளர் திரு ஆ. பொன்னுத்துரைக்கும் சௌ. நவமணிக்கும் திருமணம் விமரிசையாக நடைபெற்றது.






## 10. முனிகுமாரன்

சிங்கம்புத்தூர் மாளிகையின் ஏகாந்தமான மாடி - அறையிலே உட்கார்ந்தவாறு கனவு காணத் தொடங்கினான் வில்வநாதன்!

செண்பகநாயகி கோவிலில் உள்ள சித்திரங்களைப் புதுப்பிக்கத் தொடங்குவதற்கு முன்பு, அந்தச் சித்திரங்களைப் போன்ற பல உருவங்களைத் தனது குறிப்புப் புத்தகத்திலே வரைந்து பார்க்க ஆரம்பித்தான். அடிக்கடி செண்பக வனத்துக்குச் சென்று, அந்த அற்புதமான சுவரோவியங்களைப் பார்த்து, அவற்றைப் போன்ற மாதிரி - உருவங்களைக் காகிதத்திலே தோராயமாக வரைந்து எடுத்துக் கொண்டு வந்தான். அவற்றை ஆராய்ந்து பார்த்தான். குகை ஓவியங்கள் கூறுகிற பழம் பெரும் கதைகளையெல்லாம் மீண்டும் மீண்டும் சிந்தனை செய்தான். சுவரிலுள்ள சுண்ணாம்பும் இறகிலே தோய்த்த வர்ணங்களும் ஒன்றாக இணைந்து, அந்தக் கலவையிலிருந்து என்னென்ன புதிய வர்ணச் சாயல்கள் எல்லாம் தோன்றுகின்றன என்பதைச் சோதனைகள் செய்தான்! இரவும் பகலும் நூறு நூறு ஓவியங்கள் வரைந்து பார்ப்பதும், அந்தச் சித்திரங்களுக்கான கதைகளையும் காவிய நூல்களையும் படிப்பதுமாக இருந்தான் வில்வநாதன்!

தாமரைச் செல்வியோ என்றால், புதிதாகத் தனது உள்ளத்திலே தோன்றி வளரும் ஓவிய ஆசைக்கு உருவங்கள் கொடுக்கத் தொடங்கினாள். காகிதங்களிலே சித்திரக் கோடுகள் வரைவாள். வில்வநாத ஆசிரியரிடம் திருத்தக் கொடுப்பாள்! திருத்தி எடுத்துக் கொள்ளுவாள். பிறகு புதிய முயற்சிகள் தொடங்குவாள். இப்படியாக இறகும் கையுமாக அந்த மாளிகையிலே ஒரு புதிய வர்ண வாழ்க்கையை வாழத் தொடங்கினாள் தாமரைச் செல்வி!

ஜமீந்தார் அனவரத புவனபதியோ, தம்முடைய அருமை மகள் தமது முன்னோர்களின் கலைக் கனவுகளையெல்லாம் நனவாக்கப் போகிறாள் என்று கனவு கண்டு, அந்த எல்லையற்ற ஆசையிலே மகளின் சித்திர முயற்சிகளுக்கு ஊக்கமும் ஆக்கமும் ஊட்டி வந்தார்!

ஜமீந்தாரிணியோ என்றால், பொன்னுத்துரையின் குதிரைப் படையெடுப்புக்கள் குறைந்து, அந்த மாளிகையிலே இப்பொழுது சித்திரங்கள் மலர ஆரம்பித்தது கண்டு, அந்த அமைதியான சூழ்நிலையில் தனது உடல் நோயின் வேதனைகளையெல்லாம் மறந்திருந்தாள்!

வல்லாள வேலருடைய காரியங்களோ விசித்திரமாகவே நடந்து வந்தன! வண்ணார்பேட்டையில் வக்கீல் அவர்களின் வீட்டுக்குப் போயிருந்த சமயம், அங்கேயும் அவரை விடாமல் பின்தொடர்ந்து, தேடிப் பிடித்துக் கொண்டு வந்ததல்லவா ஒரு கடிதம்? அந்த வேணுலிங்கத்தின் கடிதத்தைப் படித்துப் பார்த்த வினாடியிலிருந்து, அடிக்கடி ஏலமலைக்குப் போவதும், ஏதோ இரகசியமாக யார் யாரோ மனிதர்களையெல்லாம் கண்டு பேசுவதும், கட்சி திரட்டுவதும், கூடிக் கூடிப் பேசுவதுமாக மிக மிகச் சுருசுருப்போடு நடமாடி வந்தார்! வேணுலிங்கத்தின் கடிதத்தில் அப்படி என்னதான் எழுதியிருந்ததோ!

சுப்பையா என்ன செய்தான்? வில்வநாதனுடைய சௌகரியங்களைக் கவனித்துக் கொள்ள வேண்டும் என்றல்லவா அவனுக்கு ஜமீந்தாரின் உத்தரவு? அந்த உத்தரவுப்படியே நடந்து வந்ததுடன்

வல்லாள வேலரின் நடவடிக்கைகளையும் ஒரு கண்ணால் பார்த்துக் கொண்டான்! அதோடு, ஜமீந்தாருக்கும் ஜமீந்தாரிணிக்கும் மத்தியில் நடந்து வந்த ஆலோசனைகளையும் புரிந்து கொள்ள முயன்றான். அந்தச் சிங்கம்புத்தூர் மாளிகையிலே தனது கண்களையும் காதுகளையும் கூர்மையாக வைத்துக் கொண்டு மிகவும் கவனமாகவே இருந்து வந்தான் சுப்பையா!

வக்கீல் திவான்பகதூர் செந்தில்நாயகம் அவர்கள், அடிக்கடி மாளிகைக்கு வந்து போவார்! சுப்பையாவில் ஆரம்பித்து, ஜமீந்தார் அனவரத புவனபதி வரை அந்த மாளிகையிலுள்ள நிற்பன, நடப்பன ஆகிய சகல ஜீவராசிகளையும் அன்போடு சென்று விசாரிப்பார்! அங்கங்கே குறள்களையும் உதிர்ப்பார்! வல்லாள வேலரிடம் வந்து வேணுலிங்கத்தையும் கடலையாண்டியையும் பற்றிப் பக்குவமாக ஞாபகப்படுத்துவார்! சென்று விடுவார்! செல்லும் போதே இடம், பொருள், ஏவல் அனைத்தையும் சீர்தூக்கிப் பார்த்து முடித்து விடுவார்!

மாளிகையிலிருந்த மற்றச் சிப்பந்திகளோ? அவர்களுக்கு அன்றாட வேலையே சரியாக இருந்தது. என்றாலும் அவர்கள் யாருக்கும் ஒரே ஒரு சமாசாரம் மட்டும் சரியாகப் புரியவில்லை. வில்வநாதன் என்ற அந்தச் சித்திரக்கார இளைஞன் வந்த நாளிலிருந்து, பொன்னுத்துரை சிங்கம்புத்தூருக்கு வருவதே அபூர்வமான ஒரு நிகழ்ச்சியாகப் போய் விட்டது! அப்படியே எப்பொழுதாவது வந்தாலும் ஜமீந்தாரிடம் இரண்டொரு வார்த்தைகள் பேசி விட்டு, மாளிகைக்குள்ளே போகாமல் அலுவல் அறையிலிருந்தவாறே புறப்பட்டுப்போய் விடுவார் பொன்னுத்துரை! இத்தனைக்கும் ஜமீந்தார் இதுவரை பொன்னுத்துரையைக் கடிந்து பேசியதில்லை. இருவருக்கும் எந்தவிதமான தர்க்கமோ— அல்லது மனத் தாங்கலோ நிகழ்ந்ததில்லை! ஆனாலும் இந்த மாறுதல், இந்த விபரீதமான மாறுதல், எப்படி ஏற்பட்டது, எதனால் ஏற்பட்டது என்று, அந்த மாளிகையிலே இருந்த அத்தனை சிப்பந்திகளும் குழம்பினார்கள். குழம்பிக் கொண்டே தங்கள் தங்கள் வேலைகளை இயந்திரம் போலச்செய்து வந்தார்கள்!

மாளிகையில் இருந்த பெண்டுகள் மட்டும் ஏதேதோ 'கச முச' என்று பேசிக்கொள்வார்கள். ஜமீந்தார்களின் குலமுறைப் பழக்கப்படி, ஏலமலையிலிருந்து தாமரைச் செல்வியைப் பெண் கேட்டுச் சிங்கம்புத்தூர் மாளிகைக்குச் சம்பந்தி வீட்டார் வந்தார்கள் என்றும், ஜமீந்தாரிணி அவர்களிடம் சரியாக முகம் கொடுத்துப் பேசாமல் இழுத்தாற் போலப் பேசி அனுப்பி விட்டார் என்றும், அதிலிருந்து இரண்டு ஜமீன் குடும்பங்களுக்கும் ஒரு மனத்தாங்கல் உண்டாகி விட்டது என்றும், தாதிப் பெண்கள் தங்களுக்குள் சொல்லிக் கொண்டார்கள்!

ஃ ஃ ஃ

ஜமீன் மாளிகைக்கு உள்ளேயும், மாளிகையின் வெளியேயும் இப்படி ஏதேதோ எண்ணங்களும், பேச்சுக்களும், நிகழ்ச்சிகளும் புகைந்துகொண்டு இருந்த போதிலும், மாடியிலே இருந்த அந்த ஓவிய அறையிலே மட்டும் சித்திரத் தவம் தடையின்றி நடந்து கொண்டு தான் இருந்தது! சென்னை மாநகரின் ஆட்ட பாட்டங்களுக்கு மத்தியில், ஒதுக்கமான ஒரு சூழலில், தனது தந்தையின் அரவணைப்பிலேயே இதுவரை இருந்து வந்தான் வில்வநாதன். இப்பொழுது முற்றிலும் புதிய ஓர் இடம். முற்றிலும் புதிய ஒரு சூழ்நிலை. முற்றிலும் புதிய ஜமீன் வட்டாரம். இங்கே தன்னந் தனியாக வந்து வாழ்கிறான்! இந்த நூதன அனுபவத்தின் புதுமையினால் உள்ளத்திலே கலக்கம் ஏற்பட்டு விடாதபடி, அவனுக்கு ஓர் இனிய தோழமை, ஓர் இனிக்கும் நட்பு, அவனுடைய இலட்சியக் கனவுகளுக்கு உகந்த ஒரு கலைக் கூட்டுறவாக விளங்கினாள், தாமரைச் செல்வி! அவளுடைய சித்திர ஆர்வமும், கலையைக் கற்றுக் கொள்வதிலே அவளுக்கு இருந்த திறமையும், வேகமும், அவனைப் பரவசப் படுத்தின. அந்தப் பரவசத்தில் ஒருநாள் அவன் செல்வியிடம் சொன்னான்:

"செல்வி! ஒரு கலையை நன்றாகக் கற்றுக் கொள்வதற்கு ஒரே வழி என்னவென்றால், அந்தக் கலையை இன்னொருவருக்குச் சொல்லிக் கொடுப்பதுதான் என்று எங்கள் அப்பா அடிக்கடி சொல்லுவார்கள். அந்த வார்த்தையை நாள்தோறும் நீ நிரூபிக்கிறாய்!"



தாமரைச் செல்விக்கு இந்த வார்த்தைகள் திகைப்பைக் கொடுத்தன. அவள் கேட்டாள்:

"என்ன சொல்லுகிறீர்கள் நீங்கள்? கலையைக் கற்றுக் கொள்ளுவது நானல்லவா? நீங்களில்லையே! ஏன் இப்படிச் சொல்லுகிறீர்கள்

இப்படிச் செல்வி கேட்டதும் வில்வ நாதன் சொன்னான்:

''இல்லை. கற்றுக் கொள்ளுவது நானுந்தான்! எப்படியென்றால் கற்றுக் கொள்வதற்கு நல்ல வழி, கற்றுக் கொடுப்பதுதான்! நீ கேட்கும் நூறு நூறு சந்தேகங்களுக்கு விளக்கம் சொல்லும் போதெல்லாம், என்னுடைய சந்தேகங்கள் எனக்குத் தெளிவாகின்றன. உன் கேள்விகளுக்குப் பதில் சொல்லும் போதெல்லாம் என்னுடைய கேள்விகளுக்கு நான் பதில் சொல்லிக் கொள்ளுகிறேன். எனது உள்ளம் தெளிவடைகிறது. எந்த வர்ணத்தை எப்படிக் குழைத்தால் எத்தகைய சாயல்களை எழுதிக் காட்டலாம் என்பதையெல்லாம், நாள்தோறும் நான் புதிது புதிதாகக் கற்றுக் கொள்ளுகிறேன். உனக்கு எடுத்துக் காட்டி நானே படித்துக் கொள்ளுகிறேன்! இந்தப் பயிற்சி இப்படியே இன்னும் சில வாரங்கள் நடந்தால், எனக்கே ஒரு தெளிவு, ஒரு உறுதி ஏற்பட்டு விடும்! என்னுடைய தயக்கங்கள் எல்லாம் பறந்து விடும். அந்தச் சுவர் ஓவியங்களைப் புதுப்பிக்கும் பணிக்கு வேண்டிய கை நிச்சயம் எனக்கு வந்து விடும் என்று தோன்றுகிறது!''

இப்படி ஒரே உற்சாகத்தோடு பேசினான் வில்வநாதன்! இது ஒரு நாள்!

இன்னொரு நாள், மங்கிப் போன சுவர் ஓவியம் ஒன்றின் மாதிரிச் சித்திரம் ஒன்றைக் காகிதத்திலே வரைந்து பார்த்துக் கொண்டிருந்தான் வில்வநாதன்! பகீரதன் செய்த தவத்தைச் சித்திர வர்ணங்களிலே படம் பிடித்துக் காட்டுகிற ஓவியம் அது! அப்போது அந்தச் சித்திரத்தின் நேர்த்தியிலே மனம் ஈடுபட்டவளாகத் தாமரைச் செல்வி கூறினாள்:

''வில்வநாதன்! தவநிலை என்ற அந்த மோன யோக நிலையை எத்தனை தத்ரூபமாக எழுதி விட்டீர்கள்! இப்படியெல்லாம் சித்திரம் எழுதக் கூடிய திறமை எனக்கு என்றாவது வருமா? வரும் என்று தோன்றவில்லை. இதுவரை நான் எனக்குத் தோன்றிய உருவங்களையெல்லாம் எப்படி எப்படியோ என் மனம் போனபடியெல்லாம் வரைந்து வருகிறேன். அதெல்லாம் சரி. நம்முடைய செண்பகநாயகி கோவிலிலே உள்ள சித்திரங்களைப் போல, அதே மாதிரி, அதே அச்சு அடையாளத்தில் அப்படியே வரைவது எப்படி? வேறு எந்தச் சித்திரங்களை நான் எப்படி வரைந்தாலும், வேறு எந்தச் சித்திரங்களை நான் பெயர்த்து எழுதி விட முடிந்தாலும், தவ நிலை என்பதை எப்படி எழுதுகோலிலே கொண்டு வர முடியும்?—மோனத்தவம் என்றும், புனித வேள்வி என்றும் பல ஓவியங்கள் அந்தச் செண்பகநாயகி கோவிலின் சுவர்களிலே இருக்கின்றனவே! அந்தச் சித்திரங்களில் உள்ள பரிசுத்தமான தவ முனிவர்களின் உருவங்களையும், அந்தத் தீவிரமான தவ நிலைகளையும், என்னால் வரைய முடியுமென்று எனக்கு நம்பிக்கையில்லை. அப்படிப்பட்ட வேள்விகளையும், தவங்களையும் நீங்கள்தான் வரைவீர்கள்! நான் அதைப் பார்த்துக் கொண்டே இருப்பேன். அவ்வளவுதான்! மற்றப்படி நான் அம்மாதிரியான சித்திரங்கள் வரைவேன் என்ற நம்பிக்கை எனக்கு இல்லவே இல்லை....!''

இப்படிச் சொன்னாள் தாமரைச்செல்வி அப்போது வில்வநாதன் கூறினான்:

''செல்வி! அப்படியெல்லாம் தன்னம்பிக்கை இழந்து பேசாதே! எத்தகைய கடினமான நிலைகளையும் உன்னால் சித்திரிக்க முடியும். அத்தகைய கலைமாட்சி உனக்குக் கைவரும் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை. 'சித்திரமும் கைப்பழக்கம்' என்று சொன்னது யார் தெரியுமா? உன்னைப் போன்ற ஒரு பெண். ஆம்! சித்திரமும் கைப்பழக்கம் என்று பாடியது அவ்வை!''

இப்படி வில்வநாதன் சொன்னதும் 'பளிச்'சென்று பதில் கூறினாள் செல்வி.

''ஆம். அவ்வையார்தான் அப்படிப் பாடினார். நானும் அவ்வையாருடைய வயது ஆகும்போது அப்படிப்பட்ட சித்திரங்களை வரைய முயற்சி செய்யலாம்!''

இப்படிச் சொல்லிவிட்டு, இளமையின் குறும்புப் புன்னகை முகத்திலே தவழ்ந்து விளையாடியவண்ணம் வில்வநாதனைப் பார்த்தாள் செல்வி. அந்த முனிகுமாரன் சொன்னான்:

''வேடிக்கை இல்லை செல்வி! உண்மையாகவே சொல்கிறேன்! தவம் என்பது ஒரு மன நிலை. அதற்கும் வயதுக்கும் சம்பந்தம் இல்லை! வயது என்பது உடம்பின் நிலை. ஆனால் தவம் என்பது மனத்தின் நிலை! அதற்கு ஏது வயது? வயதானவர்களுக்குத்தான் தவம் வருமா? அப்படியானால் வயதானவர்கள் எல்லாரும் தவசிகளாக ஆக முடிகிறதா? இளைஞர்களிலே தவசிலர்கள் இல்லையா? எத்தனைபேர் இருந்திருக்கிறார்கள்! செண்பக நாயகி குகையிலே பாரதத்திலிருந்து ஓர் உப கதையை வரைந்திருக்கிறார்களே, நினைவிருக்கிறதா? அந்தச் சித்திரம் மிகவும் மங்கிப் போயிருக்கிறது. ஆனாலும் நீ நிச்சயம் கவனித்திருப்பாய். ரிஷிய சிருங்கரின் சித்திரம் அது! பார்த்த ஞாபகமிருக்கிறதா? குகையில் எத்

இது சுருங்காது...தேய்ந்து போகாது...மங்காது. காரணம்
இதைத் தயாரிக்க உபயோகிக்கப்பட்ட துணி

**பினிக்ஸ் பாப்ளின் !**

பினிக்ஸ், உறுதியான, சுருங்காத, வர்ணமயமான, ஸான்போரைஸ்ட் பாப்ளின்களைத் தயாரிக்கிறது. பிரகாசமான, விந்தையான விதவித வர்ணங்கள்...கவர்ச்சியான அமைப்புக்கள்...அலாதியான, பிரிண்டுகள் ... ரூ. 1-12 லிருந்து ரூ. 2-25 விலையில் கிடைக்கும் இவை சிக்கனமானவை, நீடித்துழைப்பவை. பலதிறப் பட்டவை. குடும்பத்திலுள்ள மாதருக்கான பினிக்ஸ் வாயில்களும் உண்டு.



அளவுக்கு மீறி
**கீதா வளர்ச்சி**
**அடைந்தால்தான்**
**இந்த உடையை**
**உதறி எறியலாம்.**

# பினிக்ஸ் மில்ஸ்

ஒரு ரூயா ஸ்தாபனம்

மதுரை, சென்னை, பெங்களூர்
லக்னௌ, பூனா, கான்பூர், பம்பாய்
செகந்திராபாத், நாகபுரி
கோல்ஹாபூர் ஆகிய இடங்களில்
ரூயா கடைகள் உள்ளன

RPY-1-TAM

தனேயோ தவமுனிவர்களின் சித்திரங்கள் இருந்த போதிலும், இந்த ஓர் ஓவியத்தில் ஒளிர்கிற தவக்கனல் ஒப்பற்றது! அந்த முனி குமாரனுடைய முகத்தில் உள்ள ஒளியானது மங்கிய சித்திரத்திலும் மங்காமல் நின்று பிரகாசிக்கிறது, பார்த்தாயா?''

இப்படிப் பேசிக் கொண்டே போனான் வில்வநாதன்! சட்டென்று செல்வியின் உள்ளத்தில் மின்னலைப் போல் ஒரு யோசனை துவண்டது. அவள் கேட்டாள்:

''ஆசிரியரே! எனக்கு இப்பொழுது ஒரு யோசனை தோன்றுகிறது. நீங்கள் சிரிக்காமல் கேட்பதாயிருந்தால் அதைச் சொல்லுகிறேன்!''

இப்படி அவள் சொன்னதும், வில்வநாதனுக்கு ஆவல் பொங்கியது.

''என்ன யோசனை அது! நான் சிரிக்காமல் கேட்கிறேன். சொல்லுகிறாயா?'' என்றான் வில்வநாதன்.

தாமரைச் செல்விக்கு முகம் மலர்ந்தது. தன்னுடைய கருத்தை மனத்துக்குள் நன்றாகத் திட்டம் செய்து கொள்பவள் போலச் சற்று நேரம் யோசனையில் இருந்தாள். பிறகு சொன்னாள்:

''வில்வநாதா! உங்களுக்குத்தான் இந்த வீட்டில் உள்ள பழைய நூல்களைப் பற்றித் தெரியுமே. வியாச பாரதத்தின் அழகான மொழிபெயர்ப்பு ஒன்று இருக்கிறது. நான் அந்தப் புத்தகத்திலுள்ள ரிஷியசிருங்கர் கதையை ஆழ்ந்து படிக்கப்போகிறேன். அப்படிப் படித்து விட்டுப் பிறகு நன்றாகக் கற்பனை செய்து பார்த்துக் கொண்டு, அந்த முனிகுமாரனுடைய கதையைச் சித்திரமாக வரைவேன்! நீங்கள் அதைப் பார்வையிட்டுத் திருத்தம் செய்து கொடுப்பீர்களா?''

இவ்வாறு கேட்டாள் செல்வி.

''அடேயப்பா! இதற்குத்தானா இத்தனை தயக்கம்! நீ வரைந்து காட்டுகிற சித்திரங்களில் ஏதாவது திருத்தம் செய்ய வேண்டிய அவசியம் இருந்தால், நான் தயங்குவதே இல்லையே! இதைக் கேட்பதற்கு நீ ஏன் இவ்வளவு தயங்க வேண்டும்? இதைச் சொல்லுவதற்காக ஏன் நீ இத்தனை தூரம் தீவிரமாக யோசிக்க வேண்டும்!''

''அப்படியானால் என்னுடைய யோசனையை நீங்கள் ஒப்புக் கொள்ளுகிறீர்களா?''



''அருமையான யோசனை. அப்படியே செய்வோம்!'' என்றான் வில்வநாதன்.

''ஆனால் ஒரு நிபந்தனை. ஒரே ஒரு நிபந்தனை!'' முகத்தில் ஒரு கொஞ்சலான கண்டிப்பை வரவழைத்துக் கொண்டு சொன்னாள் செல்வி.

''என்ன நிபந்தனை அப்படி! மிகவும் கண்டிப்பாக இருக்கிறதே அது!''

''ஆமாம். மிகவும் கண்டிப்பான நிபந்தனைதான் அது! அதாவது சித்திரம் முடிகிற வரை என்னிடம் அதைப்பற்றி நீங்கள் பேச்சே எடுக்கக் கூடாது!''

''என்ன, என்ன, அப்படி என்ன அதில் ஆச்சரியம் வழங்கப் போகிறாய்?''

''ஆமாம். இது கண்டிப்பான நிபந்தனை! பாரதத்திலிருந்து அந்தக்

கதையை ஊன்றிப் படித்து, அந்தச் சிந்தனைகளிலேயே நன்றாக மனம் ஊறி, அதன் பிறகு அந்தச் சித்திரத்தை நான் எழுத ஆரம்பிப்பேன். சித்திரம் முடிகிறவரை, முழுதும் எழுதி முடிகிறவரை, உங்களிடம் காண்பிக்க மாட்டேன். முடிந்ததும் அப்படியே அதை உங்களிடம் எடுத்துக்கொண்டு வருவேன். அதில் ஏதாவது பிழை இருந்தால் நீங்கள்பொறுமையோடு அதைத் திருத்தம் செய்ய வேண்டும்! சரி தானா?''

''முற்றிலும் சரி!''

இவ்வாறு ஆமோதித்து விட்டு வில்வநாதன்மேலும் தொடர்ந்து சொல்வான்:

''செல்வி, நீ சொன்ன



யோசனை முதல்தரமான யோசனை! சித்திரம் முழுதும் முடிப்பதற்கு முன்பு நான் பார்க்கவே கூடாது. அரை குறையாக இருக்கும்போது நான் திருத்தம் செய்ய ஆரம்பித்தால், பிறகு உனது சிந்தனை தடைப்பட்டு நிற்கும். ஆகையால் பூர்த்தியான பிறகே நான் பார்க்கிறேன்!''

இப்படி உற்சாகத்தோடு சொன்னான் வில்வநாதன். செல்வி கேட்டாள்;

''எனக்கு மூன்று நாட்கள் தவணை கொடுங்கள். அதற்குள் நான் முடித்து விடுவேன்!''

''மூன்று நாட்களா? அத்தனை விரைவாகவா? வேண்டாம். ஒரு வாரம் தவணை தருகிறேன். அந்த ஒரு வாரமும் நீ வேறு சிந்தனையே இல்லாமல் அந்த முயற்சியிலேயே முழு மனதாக ஈடுபட வேண்டும். உன்னுடைய ஒதுக்குப்புறமான அறையில் தனியாக இருந்து ஒரே தவமாக முயன்று அந்தச் சித்திரத்தை எழுதி முடிக்க வேண்டும் நீ! அதுவரை அந்த அறையை விட்டு நீ வெளியே வருவது கூடத் தவறு! சரிதானா?''

இந்த ஏற்பாட்டுக்கு ஒப்புக் கொண்டாள் தாமரைச் செல்வி.

ஒரு வாரம் தனிமையும் தானும் தனது கற்பனைகளுமாக இருந்தான் வில்வநாதன். வாழ்க்கை என்பது ஒரு வனம் என்றார் அல்லவா அவனுடைய தந்தை? அந்த வனத்திலே இதுவரை காலில் முள் தைக்காமல் நடந்து வந்த ஒரு முனிகுமாரன் அவன்! எனவே அவனுடைய கற்பனைகளில் ஒரு தவசியின் தீவிரமும், ஒருமைப்பாடும் சுடர் வீசின. அத்தனை தவத்தையும் இந்த ஒரு வாரமும் சுவர் ஓவியங்களைப் பற்றிய தியானத்திலேயே ஈடுபடுத்தினான் அவன். சுவர்களிலுள்ள சித்திரங்களை எந்த வரிசைக் கிரமத்தில் எப்படிப் புதுப்பிக்கலாம் என்று ஒரு வரையறை செய்து கொண்டான். அடுத்த ஆண்டுத் திருவிழாவுக்குள் சுவர் ஓவியங்கள் முழுவதையும் புதுப்பித்து விட வேண்டும் என்பதல்லவா ஜமீந்தாரின் திட்டம். இப்பொழுது வர்ணங்களின் வகைகளையும் செப்பம் செய்து விட்டான். இன்னும் இரண்டொரு வாரங்களில் அந்தக் கோவில் திருப்பணியைத் தொடங்கி விடலாம் என்று தோன்றிற்று வில்வநாதனுக்கு! அதற்கு மத்தியில் இப்பொழுது தனது மாணவிக்கு இப்படி ஒரு பரீட்சையும் நடக்கப் போகிறது! அவளாகவே சொன்ன யோசனை எவ்வளவு நல்லதாகப் போயிற்று! அருமை மகள் சித்திரமும் பயின்று, பரீட்சையிலும் தேறி விட்டாள் என்ற நல்ல முடிவை ஜமீந்தாரிடம் அறிவித்து விட்டு, அந்த மகிழ்ச்சியான சூழ்நிலையிலேயே செண்பகவனத்துக்குப் புறப்பட்டுச் சென்று, அங்கே தொடர்ச்சியாகச் சில வாரங்கள் தங்கியிருந்து, ஓவியப் பணியை முடித்துக் கொடுத்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்! தன்னுடைய தந்தையின் கட்டளையை நிறைவேற்றுவதோடு, இத்தனை பெருமுயற்சி எடுத்துக் கொண்ட ஜமீந்தாருடைய அன்புக்கும் நன்றி செலுத்தியதாகும்! இவ்வாறு எண்ணினான் வில்வநாதன்! ஆனால் நடந்தது என்ன?......

தாமரைச் செல்வி தனது ஆசிரியரிடம் சொல்லியதுபோலவே, ஒரு வாரமும் வேறு எந்த வேலையிலும் ஈடுபடாமல் தனது அறையில் இருந்தவாறே, ரிஷியசிருங்கரைச் சித்திர பூமிக்குக் கொண்டு வருகிற வர்ண முயற்சியில் ஈடுபட்டாள்! மகா பாரத நூலில் இருந்த அந்த முனிகுமாரனுடைய கதையை, வண்ணக் கலவையிலே மொழிபெயர்க்க ஆரம்பித்தாள்!

பிரும்மாவுக்கு நிகரான தவ ஒளி சுடர் விடுகிற விபாண்டகர் என்ற முனிவர்! அவருடைய குமாரன் ரிஷியசிருங்கர்! தன்னுடைய தந்தை ஒருவரைத் தவிர வேறு எந்த மனிதர்களையுமே, யாரையுமே, பார்த்தறியாதவன்! காட்டிலே தந்தையின் ஆசிரமமாகிய தவச் சிறையில் வளர்கிறான் புதல்வன்; பெண்களையே கண்ணால் பார்த்தறியாத அந்தப் பிரும்மச்சாரி! அப்போது, ஒரு விசித்திர நிகழ்ச்சியை இயற்கையானது செய்விக்கிறது! அங்க தேசத்தில் பல்லாண்டுகள் மழை இல்லாமல் நாடெல்லாம் வறண்டு போய், பயிர் பச்சையெல்லாம் தீய்ந்து போய், மிகவும் கடுமையான பஞ்சம் ஏற்படுகிறது! அரசன் மனம் கலங்குகிறான். பெரியோர்களைக் கூப்பிட்டு யோசனை கேட்கிறான். ஞானமும், தெய்வ அருளும் நிரம்பிய புண்ணிய சீலர்கள் அரசனுக்கு ஒரு யோசனை கூறுகிறார்கள். ''பெண்களையே பார்த்தறியாத தவசியான ஒரு பிரும்மச்சாரி இந்த நாட்டு மண்ணிலே, இந்த வறண்ட நிலத்திலே, அடியெடுத்து வைத்தால் போதும். அந்த விநாடியே மழை பொழியும். நாடு செழிக்கும். பஞ்சமும் பரிதாபமும் நீங்கும்'' என்கிறார்கள். அரசன் என்ன செய்கிறான்? யோசித்து யோசித்துப் பார்த்துக் கடைசியில் ஒரு தந்திரம் புரிகிறான். பேரழகு வாய்ந்த கணிகையர்களை அழைத்து, அவர்களுடைய தலைவி


மிருதுவாக மணமுடன் இருக்கச் செய்து புத்துணர்ச்சியளிக்கிறது..
Binaca
TALC
குளித்த பின்னர் 'பிஞகா டால்கம்' பயன் படுத்துவதால் ஒருவித இன்பமும், புத்துணர்ச் சியும் கொள்ளச் செய்து பட்டுபோன்ற மேனியை உண்டாக்கும்.
நாள் முழுதும் வியர்வை நாற்றத்தைக் கட்டுப் படுத்தவல்ல 'பிஞகாவின்' மென்மையான மணம் எப்பொழுதும் சூழ, சூழ்ந்து, சூழ்ந்து சுகந்தரும்.
CIBA
பிஞகா
டால்க் டியுடோரன்ட் சேர்ந்துள்ளது

யைக் கொண்டு தனது கோரிக்கையைச் சாதித்துக் கொள்ள முனைகிறான். ஒப்பற்ற எழில் மங்கையான அந்தக் கணிகையானவள் விபாண்டகர் வாழும் வனத்துக்குச் சென்று, முனிகுமாரனைக் கவர்ந்து, தனது மோக வலையிலே பிடித்துக் கொண்டு வரும்படியாக ஏற்பாடு செய்கிறான்! அந்தச் சுந்தர மோகினி காட்டுக்குச் சென்று, தந்தை யில்லாத சமயத்தில் முனிகுமாரனை மயக்குகிறாள்!

இப்படிச் செல்கிறது கதை! சித்திரத்திலே தீட்ட வேண்டிய முக்கியமான காட்சி, முனிகுமாரனை மோகினி சந்திக்கிற நிகழ்ச்சி! அன்னிய மனிதர்கள் யாரையுமே கண்டறியாத ரிஷியசிருங்கர், அந்த அழகுமோகினியைத் தன்னைப் போன்ற ரிஷிகுமாரன் எனவே நினைத்து, வரவேற்று, ஆசிரமத்துக்குள் அழைத்து வந்து உபசாரங்கள் எல்லாம் செய்கிறார். அவளோ இந்த உபசாரங்களுக்குப் பதிலுபசாரங்கள் செய்கிறாள். தான் கொண்டு வந்திருந்த விதம் விதமான மோதகங்களையும், தித்திப்புத் தின்பண்டங்களையும் முனிகுமாரனுடைய வாயில் ஊட்டி, அவனுக்கு மாலைகள் எல்லாம் அணிவித்து, இங்கிதம் புரிந்து, அவனை மயக்குகிறாள்!

இந்தக் காட்சிகளையெல்லாம் சித்திரமாக வரைய முயன்றாள் தாமரைச் செல்வி! எழுதினாள். கிழித்தாள். எழுதி எழுதிக் கிழித்தாள். மீண்டும் எழுதினாள். கிழித்தாள். அழித்தாள். எறிந்தாள்! சரியாக வரவில்லை. தனக்குத் திருப்தியாக உருவாகவில்லை! கடைசியில் அந்தக் கதையின் மற்றக் காட்சிகளையெல்லாம் விட்டு விட்டு, முக்கியமான அந்த ஒரு காட்சியை மட்டும் திரும்பத் திரும்ப வரைந்தாள்! முனிகுமாரனுக்கு மோகினி உபசாரங்கள் செய்கிற அந்த ஒரு காட்சி! அதையே மீண்டும் மீண்டும் வரைந்து பார்த்தாள் தாமரைச்செல்வி! ஒவ்வொரு முறை வரையும்போதும் ஒவ்வொரு ஏமாற்றம்! புதிது புதிதாக வரைவாள். புதிது புதிதாக ஏமாற்றம்! மறுபடியும் மறுபடியும் குழப்பம்! காகிதத்தைக் கிழித்து எறிந்து விடுவாள்! எத்தனை முயன்றாலும் அந்தச் சித்திரத்தை அவளால் எழுத முடியவில்லை!

ஃ ஃ ஃ

ஒரு வாரத் தவணை கழிந்து விட்டது. தாமரைச் செல்வி தனது ஆசிரியரின் அறைக்குள்ளே நுழைந்தாள்.

''என்ன செல்வி? சித்திரங்கள் எங்கே?'' என்று வியப்புடன் கேட்டான் வில்வநாதன்.

''அத்தனை காகிதங்களையும் கிழித்து எறிந்து விட்டேன்!'' என்றாள் செல்வி, வருத்தத்தோடும் ஏமாற்றத்தோடும்!

வில்வநாதனுக்கு அதைக் கேட்கவே துயரமாக இருந்தது.

''ஏன் செல்வி? ஏன் அப்படி?'' என்று ஆவலோடும் கவலையோடும் கேட்டான் வில்வநாதன்.

''முனிகுமாரனை எளிதாக வரைந்து விட்டேன். ஆனால் அந்த மோகினியை வரைவதுதான் கஷ்டமாக இருக்கிறது!'' என்றாள் செல்வி!

''என்ன இது! செல்வி, நீ சொல்வது வேடிக்கையாக இருக்கிறதே! தவ முனிவர்களையும், தவ நிலைகளையும் வரைவதுதான் கஷ்டம் என்று சொல்லிக் கொண்டிருந்தாய். இப்போது....''

''நான் அப்படித்தான் நினைத்தேன். ஆனால் சித்திரத்தில் வரைய ஆரம்பித்த பிறகு, எனக்கு ரிஷியசிருங்கரை வரைவது கஷ்டமாகவே இல்லை. என் கண் முன்னால் அவரை, முனிகுமாரனை, நிறுத்திக் கொண்டு அப்படியே வரைந்து விட்டேன். ஆனால் மோகினியை வரைய ஆரம்பிக்கும் போது, மனம் குழம்புகிறது. உள்ளத்தில் ஒரு வகையான அச்சம் உண்டாகிறது. எனக்கே என்னைப் பற்றி வெட்கமாக இருக்கிறது!''

இப்படிச் சொல்லும் போது செல்வியின் முகம் வெளிறியது. அவளுடைய உடம்பெல்லாம் ஆடியது. வில்வநாதன் குழப்பம் அடைந்தான்!

''செல்வி! என்ன சொல்லுகிறாய் நீ? மோகினியை வரையும் போது ஏன் உன் மனம் குழம்ப வேண்டும்? இப்பொழுது ஏன் உன் உடம்பெல்லாம் இப்படிப் பதறுகிறது? செல்வி, ஏன் உன் முகம் எல்லாம் இப்படித் தாபம் படர்கிறது? என்ன இது? எனக்கு ஒன்றுமே புரியவில்லையே! செல்வி, செல்வி!''

''ஆசிரியரே, என்னை மன்னித்து விடுங்கள். என்னால் ஒன்றுமே பேச முடியவில்லை. உங்களுக்கு என்னுடைய குழப்பங்களைப் புரிந்து கொள்ள முடியாது. நீங்கள், நீங்கள் ஒரு முனிகுமாரர்! நீங்கள், நீங்கள் ரிஷியசிருங்கர்!''

இந்த வார்த்தைகளைச் சொல்லி முடித்த மறு விநாடி, தாமரைச் செல்வியின் முகத்தில் ஓராயிரம் மின்னல்கள் துவண்டன! அவளுடைய கண்களில் இருந்து 'பொல பொல' என்று கண்ணீர்த் திவலைகள் உதிர்ந்தன. அப்படியே முகத்தை முந்தானையில் மூடிக்கொண்டு மறுபக்கம் திரும்பி, மடமடவென்று மாடியிலிருந்து கீழே இறங்கி வேகமாக மறைந்தாள் செல்வி! (தொடரும்)

# சலிக்காமல் உழைப்பவர்கள் உபயோகிப்பது

# நிவியா

பலவிதப் பயனுள்ள, இயற்கையழகைப் பாது காக்கும் இந்த கிரீம் சருமத்தை மிருதுவாக்கி, போஷிக்கிறது. மற்ற கிரீம்களாலாகாத காரி யத்தைச் சாதிக்கிறது நிவியா—ஆம், களைப்புற்ற சருமத்துக்குத் தெம்பூட்டுகிறது. அதுமட்டுமா? உங்கள் சருமம் இளமைமாறு ஆரோக்கியத் துடனும், மிருதுவாகவும் இருக்க உதவுகிறது. குடும்பத்திலுள்ள ஆண், பெண், குழந்தைகள் யாவருக்குமே அதன் அரவணைப்பு மேன்மை தருகிறது.




**சருமத்திற்கு நிச்சயமாக வேண்டுவது நிவியா.**

# சிறப்பு மிக்க சான்றோர்கள்

## ராவ்சாகிப் திரு ராமசாமி ஐயங்கார்

சென்னை மயிலாப்பூரில் எழுபது ஆண்டுகளுக்கு முன்னால் நடந்த சம்பவம் இது.

அந்நாளிலே வி. ராமசாமி, கே. எஸ். ராமசாமி என்ற பெயருடைய கல்லூரி மாணவர்கள் இருவர் உண்டு. இவர்களுடன் இன்னும்சிலஇளைஞர்களும் நண்பர்களாக இருந்து வந்தனர். இந்தநண்பர்களின் கோஷ்டிக்கு வி. ராமசாமி தான் தலைவர். தலைவர் கூறுவதை கே. எஸ். ராமசாமியும் மற்றவர்களும் நிறைவேற்றி வைப்பார்கள்.

தலைவர் ராமசாமி கிழக்கு மாடவீதியில் தேரடிக்கு எதிரிலுள்ள ஒரு வீட்டின் மாடிப் பகுதியை மாதம் ஐந்து ரூபாய் வாடகை கொடுத்து அமர்த்தியிருந்தார். இங்கு இவர்களுடைய வீடுகளிலிருந்து பெஞ்சு, நாற்காலி இவற்றைக் கொண்டுவந்து போட்டிருந்தனர். இங்கிருந்தபடி தலைவர் ராமசாமி தம் நண்பர்களுக்குக் கட்டளைபிறப்பிப்பார். அதன்படி, கே. எஸ். ராமசாமியும், மற்ற நண்பர்களும் மயிலாப்பூர் தெருக்களில் கையில் வாழைப்பழம், 'பெப்பர்மிண்டு' இவற்றுடன் சுற்றி வருவார்கள். தெருக்களில் கவனிப்பார் இல்லாமல் அலைந்து கொண்டிருக்கும் பிற்பட்ட வகுப்புப் பிள்ளைகளைப் பார்த்தால், அவர்களிடம் நயந்து பேசித் தின்பண்டங்களைக் கொடுப்பார்கள். அந்தப்பிள்ளை



அவற்றைத் தின்று முடிந்ததும் 'லபக்' என்று அவர்களைக் கைப்பிடியாகப் பிடித்துக் கொண்டு தரதரவென்று, மாட வீதி மாடிக்குக் கொண்டு வந்து அங்கு தயாராகக் காத்திருக்கும் மாணவர் தலைவர் ராமசாமியின் முன் நிறுத்திவிட்டு, மறுபடியும் வேட்டைக்குப் புறப்படுவார்கள்.

மாடிக்குக் கொண்டு வரப்பட்ட பிள்ளைகளைத் தலைவர் ராமசாமி அதட்டி மிரட்டிப் பெஞ்சியில் உட்காரச் சொல்லி மீண்டும் ஒரு முறை தின்பண்டங்களைக் கொடுப்பார். கையில் சிலேட்டுப் பலப்பம் இவற்றைக் கொடுப்பார். நல்ல சட்டை துணிமணிகளையும் கொடுப்பார். பிறகு பாடம் சொல்லிக்கொடுத்துக் கையில் ஓரணாக் காசும் கொடுத்து அனுப்பி வைப்பார். தினம் ஓரணாக் காசும், தின்பண்டங்களும் கிடைக்கிறதென்ற காரணத்தால் பல பிள்ளைகள் ஒழுங்காக வருவார்கள். ஒருமுறை பள்ளிக்கு வந்த பிள்ளைகள் மறுநாள் வராமல் ஓடிவிட முடியாது. அப்படி ஓடினால் கே. எஸ். ராமசாமியும் மற்றவர்களும் அவர்களை எப்படியோ வலை போட்டுக் கண்டுபிடித்து, தர தரவென்று இழுத்து வந்து விடுவார்கள். இழுத்து வந்து மாடியில் உட்கார்ந்து கொண்டிருக்கும் வி. ராமசாமியின் முன்னால் நிறுத்தி விடுவார்கள்.

அப்படி மயிலாப்பூர் வாடகை வீட்டில் ஏழை, எளிய குழந்தைகளுக்கு, வலுக் கட்டாயமாக வாழ்வளிக்க முயன்ற திரு வி. ராமசாமி அவர்களின் தளராத முயற்சியில் வளம் பெற்றதுதான்சென்னை ராமகிருஷ்ண மிஷன் வித்தியாலயம்!

திரு வி. ராமசாமி சென்னை ராஜதானிக் கல்லூரியில் மாணவராக விளங்கும்போது தான் ஒழிந்த நேரத்தில் இந்த மாடிப் பள்ளிக்கூடம் நடத்தி வந்தார். அப்போது

அவருக்கு உதவியாக இருந்து தெருக்களில் அலையும் சிறுவர்களைத் துரத்திப் பிடித்து வருவதில் ஒத்துழைத்த கல்லூரி மாணவர் திரு கே. எஸ். ராமசாமி வேறு யாருமில்லை. இப்போது பொது வாழ்வில் பிரபலமாக விளங்கிப் பணியாற்றி வரும் திரு கே. எஸ். ராமசாமி சாஸ்திரியார் அவர்களேதான்.

காலஞ் சென்ற ராவ்சாகிப் திரு ஸி. ராமசாமி அய்யங்கார் அவர்களின் உருவச் சிலையை மயிலை ராமகிருஷ்ண மிஷன் வித்தியாலயத்தின் வாயிலில் நிறுவியிருக்கிறார்கள். சிலை உருவில் அவர் நின்று கொண்டிருக்கும் தோற்றம் ஏழை எளிய குழந்தைகள் உதவி தேடி வருமானால் எந்த நேரத்திலும் அவர்களை வரவேற்கக் காத்திருப்பது போல் காட்சியளிக்கிறது.

திரு ராமசாமி அய்யங்காரின் சொந்த ஊர் செங்கற்பட்டு ஜில்லாவில் கொளத்தூர் என்ற கிராமமாகும். சென்னையில் மாமன் வீட்டில் வளர்ந்து கல்வி பயின்று வந்தார். கல்லூரியில் படித்து வரும்போது சென்னைக்கு விவேகானந்தர் விஜயம் செய்து பல சொற்பொழிவுகள் நடத்தினார். அவற்றைத் தவறாமல் கேட்டதால், ''துன்பப்படுவோருக்குச் சேவை செய்தால் அதுவே கடவுளுக்குச் சேவை செய்ததாகும்'' என்ற உண்மையை உணர்ந்தார். அது முதல் ஏழை எளியவர்களின் மீது அவருடைய நினைவு திரும்பியது. அதன் பயனாகவே முன்சொன்ன அநாதைப் பிள்ளைகளுக்கான பள்ளிக்கூடமும் ஏற்பட்டது. கல்லூரியில் தாமும் படித்துக் கொண்டே, அந்த இலவசப் பள்ளியை எப்படியோ நண்பர்களின் உதவியுடன் நடத்தத் தலைப்பட்டார். மெல்ல மெல்ல அதில் மாணவர்கள் நாற்பது பேர்கள் வரை சேர்ந்தார்கள். சம்பளம் கொடுத்து ஓர் உபாத்தியாயரையும் அதற்கு நியமித்தார். பிள்ளைகளுக்கும் தினம் காசு கொடுக்கத் தவறவில்லை. இதை நடத்துவதில் அவர் பட்ட கஷ்டங்களும் துன்பங்களும் கொஞ்ச நஞ்சமல்ல. கல்லூரிப் படிப்பு முடிந்ததும் அவருக்கு ரயில்வே இலாக்காவில் உத்தியோகம் கிடைத்தது. சிறிது காலம் வரை தமது சம்பளம் முழுவதையும் அந்த மாடிப் பள்ளியை நடத்துவதற்கே அளித்து, உற்றார் உறவினர்களின் கோபத்துக்கும் ஆளானார். அந்தப் பள்ளிக்கூடத்தை ஏழு ஆண்டுகளுக்குப் பின் சரியான இடம் கிடைக்காத காரணத்தால் மூட வேண்டியதாயிற்று. ஆனால் அந்தப் பள்ளிக்கூடத்தை நடத்தும்போது அவருக்கு ஏற்பட்டிருந்த உள்ளுணர்ச்சி மட்டிலும் மறையவில்லை. சென்னைக்கு அப்போது சுவாமி விவேகானந்தர் வந்திருந்து அற முழக்கம் செய்தருளினார்கள். அவருடைய பிரசங்கத்தைக் கேட்டதிலிருந்து திரு ராமசாமியின் சேவா உணர்ச்சி இன்னும் பன்மடங்காக வளர்ந்தது. சுவாமி விவேகானந்தர் வந்து சென்றபின், வங்கத்திலிருந்து ராமகிருஷ்ண அறநிலையத்தின் தூதுவராகச் சுவாமி ராமகிருஷ்ணானந்தா என்ற அடிகளார் சென்னைக்கு வந்து, இங்கு ராமகிருஷ்ண நிலையத்தின் கிளை ஒன்று அமைக்க விரும்பினார்கள்.

அடிகளார் சென்னைக்கு வந்து சொற்பொழிவுகள் நடத்தி வந்தபோது அவரிடம் திரு ராமசாமி தமது மனத்தைப் பறி கொடுத்தார்கள். அவருக்குப் பரம சீடனாகவே மாறிவிட்டார். சென்னைக்கு வந்த அடிகளார் 1905-ல் ராமகிருஷ்ண அறநிலையத்தின் சேவைகள் நாடறிந்ததாகும். வெள்ளம், புயல் முதலியவற்றால் பாதிக்கப்படும் மக்களுக்குத் தொண்டாற்றுவது உள்பட இலவச வைத்தியசாலை நடத்துவது, ஏழை அநாதைச் சிறுவர்களுக்கு இல்லம் நடத்துவது போன்ற முக்கியமான தொண்டுகளில் ராமகிருஷ்ண அற நிலையத்தார் சேவை புரிந்து வருகிறார்கள்.

சென்னைக் கிளைக்குத் திரு ராமசாமி, காரியதரிசிப் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். ரயில்வே துறையில் பதவி வகித்தவாறே இந்தப் பொறுப்பையும் அவர் வகித்துக் கிடைத்த சிறு நேரத்தையும் வீணாக்காமல் இதன் வளர்ச்சிக்குப் பாடுபடலானார். வீடு வீடாக யாசகம் வாங்கியதோடு அல்லாமல், தெருவில் பிச்சை எடுத்தும்கூட இதற்குப் பொருள் கொண்டு வந்து சேர்த்தார். தமது உத்தியோக வருமானம் முழுவதையும் இதற்கே அளித்தார்; இங்கேயே ஆசிரமக் குழந்தைகளுடன் எளிய உணவு புசித்து, எளிய வாழ்க்கை மேற்கொண்டார். அதன் பயனாகவே ராமகிருஷ்ண மிஷன் கல்விக் கூடங்கள் தழைத்துத் தியாகராயநகரிலும் கிளைவிட்டு வளர்ந்திருக்கின்றன. புகழுடன் விளங்கும் விவேகானந்தா கல்லூரியாகவும், ராமகிருஷ்ண தொழிற் பள்ளிக்கூடங்களாகவும் அவை மலர்வு பெற்றிருக்கின்றன.

திரு ராமசாமி அவர்கள் தமது அறுபதாவது வயதில் 17-6-32ல் மறைந்து விட்டார்கள். அவர் மறைவு பற்றி அப்போது சென்னை கவர்னராக இருந்த எர்ஸ்கின் பிரபு ''திரு ஸி. ராமசாமி அய்யங்காரின் மறைவு சென்னைக்கு மட்டுமல்ல, இந்நாட்டுக்கே பெருத்த நஷ்டமாகும்'' என்று கூறினார். இதற்கு மேலாகத் திரு ராமசாமி அய்யங்கார் அவர்களின் தியாக உள்ளத்தையும் சேவையையும் அளந்து கூற வார்த்தைகள் என்ன இருக்க முடியும்? —கதிர்

# பலே கணக்கு!

குறும்பன்

**பு**கழும் பொருளும் பெற்ற நாவலாசிரியரான எச். ஜி. வெல்ஸுக்கு வருமான வரி இலாக்காவிலிருந்து ஒரு கடிதம் வந்தது. 'குறிப்பிட்ட நேரத்துக்குத் தங்கள் பாங்கு பாஸ் புத்தகம் முதலியவைகளுடன் அலுவலகத்துக்கு வரவும்' என்று அதில் கண்டிருந்தது.

'இதேதடா இது பெருந் தொல்லையாய்ப் போச்சு! இந்த வருமான வரி காரியாலயத்துக்குக் கணக்குக் கொடுத்து வெளி வருவதற்குள் தாவு தீர்ந்து விடும் போல் இருக்கிறதே!' என்று எண்ணினார் வெல்ஸ். இருந்தாலும் அரசாங்க இலாக்காவை அலட்சியப்படுத்த முடியுமா?

குறிப்பிட்ட தினம் குறிப்பிட்ட நேரத்துக்கு வருமான வரி அலுவலகத்தை அடைந்தார். அவரது கணக்கு வழக்குகளையெல்லாம் பரிசோதனை செய்த அதிகாரி, "எல்லாம் சரி, ஒரு சின்ன ஜன்னல் மராமத்துக்கு ஓராயிரம் பவுன் செலவு போட்டிருக்கிறீர்களே! இது நியாயமா?" என்றார்.

"நியாயமாயிருக்கக் கொண்டுதானே போட்டிருக்கிறேன்!" என்றார் வெல்ஸ்.

"அதெப்படி சார்?"

"சொல்கிறேன், கேளுங்கள்! ஆரம்பத்தில் இந்த ஜன்னல் மராமத்து இனத்தைக் கணக்கில் காட்டுவதாக இல்லை நான். இந்தச் சின்ன மராமத்து வேலையை நாமே செய்து விடுவோமே என்று எண்ணி, ஏணியையும், கத்தி, கொக்கி முதலிய தளவாடங்களையும் எடுத்துக் கொண்டு சென்றேன்.



"மாடி ஜன்னல் அது. காற்றில் கதவு ஜன்னல் படபட என்று அடித்துக் கொண்டது. கொக்கி மாட்டி விட்டால் அறுத்துக் கொள்ளாதல்லவா? 'இந்தச் சின்ன வேலைக்கு அநாவசியமாக ஒரு தச்சனைக் கூப்பிடுவானேன்?' என்று எண்ணிச் சுவரில் ஏணியைச் சாத்திக் கொண்டு வேலை செய்ய ஆரம்பித்தேன். அப்பொழுது ஏணி சற்றுச் சறுக்கினாற் போலத் தோன்றவே பதறிப் போய் விட்டேன். கையிலிருந்த கொக்கியும் கத்தியலும் கீழே விழுந்து விட்டன. அப்பொழுது மடிப்புக் கலையாத ஆடை அணிந்து கொண்டு ஒரு பெண் பாதை வழியே போய்க் கொண்டிருந்தாள்."

"என்ன ஆயிற்று?"

"நல்ல வேளை! கத்தியல் கீழே விழுந்து விட்டது. ஆனால் கொக்கி அவள் உடையில் குத்திக் கிழித்து விட்டது. அவள் 'மொல்லு மொல்லு' என்று சண்டைக்கு வந்துவிட்டாள். தான் உடுத்தியிருப்பது போலவே புது உடை வாங்கிக் கொடுத்தால்தான் ஆயிற்று என்றாள். வேறு வழியில்லாமல், அவளை அழைத்துக் கொண்டு போய் முந்நூறு பவுன் செலவில் அவளுக்குப் புத்தாடை வாங்கிக் கொடுத்தேன்."

"சரி, முந்நூறு போடுங்கள். ஆயிரம் அல்லவா போட்டிருக்கிறீர்கள்?" என்று குறுக்கிட்டார் வருமான வரி அதிகாரி.

"சொல்வதற்குள் அவசரப்படுகிறீர்களே! வீட்டுக்கு வந்தால் என் மனைவி வக்கீல் எனக்காகக் காத்திருந்தார்."

"என்ன சார் இது! முழங்காலுக்கும் மொட்டைத் தலைக்கும் முடி போடுகிறீர்களே! வக்கீலுக்கும் இதற்கும் என்ன சார், சம்பந்தம்?"

"வக்கீல் எதற்காக வந்திருந்தார் என்கிறீர்கள்? என் மனைவி விவாகரத்து கோரியிருந்தாள். நானும் அந்தப் பெண்ணும் கடையில் புத்தாடை வாங்குவதை அவளுடைய ஒரு தோழி பார்த்திருக்கிறாள். உடனே என் மனைவியிடம் வந்து வத்தி வைத்திருக்கிறாள். இந்த விவாகரத்து விஷயத்தை ஒருவாறு ஒத்திப் போட்டு உடன் படிக்கைக்கு வர மேற்கொண்டு நான் எழுநூறு பவுன் செலவழிக்கும்படியாகி விட்டது. அதனால் அதையும் இந்தச் செலவில் எழுதிக் கொள்ள வேண்டியதுதானே?" என்று கேட்டார் வெல்ஸ்.

வெல்ஸின் இந்தப் பதிலைக் கேட்ட பிறகு வருமான வரி அதிகாரி என்ன பதில் சொல்லுவார், பாவம்!




ஓர் அழகான பெண்ணின் கண்கள் பேசுமா?

இந்த விநோதமான கேள்வி என்னுடைய மனத்திலே, நான் மேதாவி என நினைத்துக் கொண்டிருந்த காலத்திலே எழுந்த விசித்திரம்தான் மிகப் பெரிய விஷயம். 'கவிஞர்கள் பெண்ணின் கண்கள் பேசுந் திறனுடையவை என்கிறார்களே? என்ன வேடிக்கையான கற்பனை!' என்று ஆணித்தரமாக வினாவை அன்று எழுப்பிய என் நெஞ்சம் இன்று, 'கண்கள் மிகப் பொல்லாதவை' என்று எச்சரிக்கை செய்கிற அளவுக்கு மாற்றம் நிகழ்ந்திருக்கிறது. காதலுக்கு அடிப்படை கண் என்கிறார்கள். அதுவும் அப்பட்டமான, அப்பழுக்கற்ற பெரும் பொய் என்று நான் சத்தியம் செய்யத் தயாராக இருந்த காலம் குருடாகி விட்டது.

கண்கள் பேசா. அது பொய்யான அபரிமிதக் கற்பனை என்று கூறுவது சாதாரண மனிதனாக இருந்தால் பரவாயில்லை. ஓர் எழுத்தாளன் என்கிற பெயரை வைத்துக் கொண்டு இந்தக் கற்பனையைத் தவறு என்கிற போது, பொருத்தம் சற்றுக் குறைவாகத்தான் இருக்கிறது. இப்போது முழு மனத்தோடு அதை ஒப்புக் கொள்கிறேன்.

கதைக்குக் கருப்பொருள் தேடும் நான் கற்பனையில் மூழ்குவது சகஜம். ஆனால், கோவிலை நோக்கி நடந்து கொண்டிருந்த நான் உண்மையைக் கற்பனையாகச் செய்துகொண்டு நடந்தேன்.

கோவில் பிராகாரத்தைச் சுற்றிக் கொண்டிருக்கும் போது இரண்டு வயதானவர்கள் பேசிக் கொண்டு சென்றார்கள்.

''என்ன தத்ரூபம்! அந்தக் கண்கள் அப்படியே நேரிலே பகவான் பேசிக் கொண்டு நிற்பதைப் போல இல்லே!''

அப்படியானால்....? சிலையின் கண்களும் பேசுமோ?

அப் பிரதட்சணமாகவே வந்து குருக்களிடம் நின்றேன். திருநீற்றைத் தூக்கி எறியாத குறையாய் என்னிடம் தந்தார் அவர். அவரைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். அவரும் என்னை மிக நன்றாக அறிவார். அடுத்தடுத்த வீட்டில் நாங்கள் இருக்கும் போது அதிமுகத்துக்கு என்ன பேர் என்றும் சொன்னால் அவருக்கு என்னைக் கொஞ்சம் பிடிக்காது கூட.

''ஓய்!''

காலையில் எழுந்ததுமே குளிக்கக் கூட இல்லாமல், பட்டை பட்டையாகத் திருநீற்றைப் பூசிக்கொண்டதுமில்லாமல் பவித்திரமானவர் போல் கோவிலுக்கு வேறு கிளம்பிவிட்டார்.

''என்ன, எழுத்தாளர் சார்?''

''உம்மை ஒண்ணு கேக்கணும்?''

''ஒன்று என்ன? ஒன்பது கேளும்!''

''ஒன்பது கேட்டால் ஒன்று கேட்க வந்ததன் 'எபக்ட்' போயிடும். ஆமாம், நீர் இன்னிக்கு ஸ்நானம் பண்ணினீரா?''

''நீ.......நீ!''

''என்ன நீ....நீ? விஷயத்தை ஒப்புக் கொள்ளும்.''

''இவ்வளவு 'சீக்கிரமா குளிக்கிறதுன்னு இந்தக் குளிர் காலத்திலே......?''

''அதோ பார்த்தீரா?''

''அவர் போகலாம். வயசானவர். ஜில்லென்று பச்சை ஜலம் அவர்களுக்கு இந்தக் குளிரிலே வெந்நீராக இருக்கும். நம்மைப் போல இள வயசுக்குத் தகாது.''

''நீர் பூஜை செய்யவே தகாது ஐயா!''

''குளிக்காமல் இருந்தா அது தப்புதான். கொஞ்சம் வெயில் வந்தவுடனே வீட்டுக்கு வந்து சோப்பு தேய்த்துக் குளிக்கிறேன்!''

''நீர் எது வேண்டுமானாலும் போட்டுக் குளியும். நேத்து ராத்திரி பன்னிரண்டு மணிக்கு வந்து எதுக்குக் கதவைத் தட்டினீர்கள்...?''

''யார்? உங்க வீட்டுக் கதவையா?''

''இல்லே ஐயா; உம்ம வீட்டுக் கதவைத்தான்!''

''சினிமாவுக்குப் போயிருந்தேன்!''

''நீர் போகலாமா?''

''சாமியைத் தொட்டுப் பூஜை செய்கிறவன் கல்யாணம் பண்ணிக்கக் கூடாது. சினிமா, நாடகம், சர்க்கஸ் எதுவுமே போகப் படாதுன்னு எங்கே எழுதி வைச்சிருக்காம்?''

''நீர் போனதைப் பற்றிக் குற்றம் சொல்லலே. அங்கேயெல்லாம் போய்விட்டு மறுநாள் குளிக்காம கிளம்பறேளே? அதான் தப்புங்கறேன்!''

அப்போது அவருடைய கண்களைக் கவனித்தேன். 'படுபாவி மனிதன்; காலையில் சூரியோதயத்துக்கு முன்பே இப்படிப் பிடித்துக் கொண்டு உயிரை வாங்குகிறானே!' என்று பரிதாபமாகப் பார்த்தன. திடீரென்று ஒரு குண்டைத் தூக்கி என் தலையில் போட்டார்.

''ஆமாம்? நீர் குளிக்காம ஆபீஸ் போனதில்லையா?''

''சில நாட்கள் போயிருப்பேன்.''

''சொக்காய் போட்டுக் கொண்டு கோவிலுக்குப் போனதில்லையா?''

''போயிருக்கேன்!''

''அது மட்டும் தப்பு இல்லையா?''

''எது மட்டும்?''

''குளிக்காம ஆபீஸ் போறதுதான்!''

''............''

''அதுவும் ஒரு கோவில் தானே ஐயா? சரஸ்வதியும், லக்ஷ்மியும் இருக்கிற ஒரு கோவில்தானே?''

''ஊம்?''

''அந்தக் காலத்திலே குருக்களுக்குச் சம்பளம் கிடையாது. வருகிறவர்கள் போடற காசே அதிகமாகக் கிடைக்கும். இப்போ மாசத்துக்குச் சம்பளம். அர்ச்சனைக்கு டிக்கட்! அந்தக் காலத்திலே எவன் சட்டை போட்டுண்டு நுழைவான்? இப்போ? எல்லாம் சுதந்திரமா போச்சு.''

''அதனாலே?''

''குருக்கள், தெய்வத்துக்குப் பூஜை என்கிற ஒரு புனித காரியத்தைச் செய்யறவனாக இப்போது இல்லை. மாசத்துக்குக் கூலி வாங்குகிற — நடு நடுவே லஞ்சம் வாங்குகிற டபேதாராக இருக்கான்!''

''நீரெல்லாம் இப்படி மாறிடவேதான் காலமும் கெட்டுப் போச்சு. கோவிலும் மாறிப் போச்சு!''

''தப்பு, தப்பு! நான் சாமியிடம் நெருங்கறேனுன்னு பார்த்தேளா? இன்னிக்கு வேறே ஒருத்தர் முறை. நான் சும்மா வெளியில் நின்னு கொண்டு விபூதி தருவேன். நீங்கள் எப்படி மாசச் சம்பளத்துக்கு உழைக்கிறீர்களோ அதே போல நானும். எனக்குக் கோவில்தான் ஆபீஸ்!''



நண்பர்: என்னங்க உங்க முகமெல்லாம் எண்ணெய் வழிகிறதே?

ஹோட்டல்காரர்: சார்! அப்படி மட்டும் சொல்லாதீர்கள்! எங்க ஹோட்டலில் எல்லாமே சுத்தமான நெய்தான்!

அதற்குப் பதிலாக நான் எதைச் சொல்லப் போகிறேன் என்று அவர் எதிர்பார்க்கவும் இல்லை. என் பதிலை விரும்பவுமில்லை. கோவிலை நோக்கி விரைந்து போய் விட்டார்.

இந்தச் சம்பவத்துக்குப் பிறகு அந்த மகானுபாவரை இப்போதுதான் நான் பார்க்கிறேன். என்னைப் பார்த்ததும் அவருக்கு ஒரு மாதிரியாகப் போய் விட்டது.

''ஓய்! உம்மை ஒண்ணு கேக்கணும்!''

''வந்துட்டீரா வம்புக்கு?''

''வம்புக்கு இல்லே ஐயா! சரி, நீர் ஸ்வாமியின் கண்களை நன்னா கவனிச்சிருக்கீரா?''

''ஏன் உமக்குக் கதைக்குப் பிளாட் அகப்படலின்லையா? ஏதாவது கேஸே அகப்படாவிட்டால், யாராவது சிறு தவறு செய்தால்கூடப் பிடிச்சிண்டு போகிற போலீஸ்காரன் மாதிரி என் வம்புக்கே வருகிறீரா!''

அவர் தம் வயிற்றெரிச்சலை வார்த்தை ரூபத்தில் கொட்டினார்.

''ஒன்றும் பெரிய விஷயம் இல்லை. ஸ்வாமியோட கண்களை நன்னா பார்த்திருக்கீரான்னு கேட்டேன்.''

''ஆயிரம் தடவை பார்த்திருக்கிறேன்.''

''சரி! அப்படியானால் என்னிக்காவது உமக்கு அது பேசறது போல் தோணித்தா?''

''நீர் கேக்கறதே எனக்குப் புரியலே!''

''என்றைக்காவது அந்த விக்கிரகம் கண்களைத் திறந்து பேசியிருக்கிறதா உம்மிடம்?''

''என்ன, கட்சிக் கூட்டம் எதையாவது...''

''ஓய்! கட்சியைப் பற்றி எங்கிட்டே பேசாதேயும். கட்சியிலே இருக்கிறவர்களுக்கு நாம இருக்கணும்னு ஒண்ணும் அக்கறை இல்லை. அவர்கள் வயிறு ரொம்பணும். அவர்கள் வீடு வாழணும். அவ்வளவுதான்! எதுக்கு ஐயா கோவிலுக்கே போகாதவனெல்லாம் சாமியைப் பற்றியும், பூஜை பண்ணுகிறவனைப் பற்றியும் பேசணும்?''

''அடப் பாவி மனிதா!''

''சரி, நீர் விஷயத்துக்கு வாரும். நான் உம்மைக் கேலி செய்யவோ, வம்புக்கு இழுக்கவோ வரல்லே. பிராகாரத்திலே ரெண்டுபேர் பேசிக் கொண்டு போனார்கள்!''

''என்னன்னு?''

''சாமியோட கண்களைப் பார்த்துக் கொண்டு நின்னா அப்படியே நம்மோடு பேசறதுபோல இருக்குன்னு. நீர் எப்பவாவது இதை அனுபவிச்சது உண்டா?''

''ஊஹூம். நீர் வேணுமானால் நன்னா பாருங்கோ. தீபம் கொளுத்திக் காட்டறேன். பேசறதா இல்லை, இட்டறதான்னு தெரியும்!''

அவர் தீபத்தை — திரிவட்டியை அந்த விக்கிரகத்துக்கு முகத்தருகில் காட்டினார்.

அப்படி ஒன்றும் அந்தச் சாமி பேசிவிடவில்லை.

''ஒன்னையும் காணுமே?''

''உமக்குத் தெரியாது!''

''ஏன்?''

''சாமியோட கண் என்னிக்கும் ஒரேமாதிரி யாத்தான் இருக்கு ஸார். ஆனால் பார்க்கற வாளுடைய தாராதரத்தைப் பொறுத்தது!''

''என்னது!''

''ஆமாம். நீர் கதையிலே எழுதுறீரே, ஓர் அழகான பெண் என் எதிரே வந்தாள். அவள் கண்களை நான் பார்த்தேன், அது என்னென்னமோ பேசித்துன்னு சொல்றீரே? நிஜமா கண்ணு பேசித்தா?''

நியாயமான கேள்விதான். கண்கள் பேசாது என்பது உண்மைதான்.

''பேசலே.''

''நான் சொல்றேன், அது பேசும்னு!''

''என்னய்யா இது?''

''ஸார், கண் பேசித்து. பேசித்துன்னு சொன்னால் கண் பேசினதாக அர்த்தமில்லே. அந்தக் கண்ணையும் ஆட்டிப் படைக்கும், உத்தரவு போடும் எஜமானர் ஒருத்தர் இருக்கார் உள்ளே. ஹிருதயம்னு ஒண்ணு இருக்கே! அதைத்தான் சொல்றேன்.

''உங்களுடைய இதயத்திலிருந்து எழுகிற ஓர் உணர்ச்சி உங்கள் கண் வழியா வெளியே வந்து, எதிரே அந்தப் பெண்ணுடைய இதயத்திலிருந்து உண்டாகி அவள் கண் வழியா வெளிப்படும் உணர்ச்சியோடு ஒத்துப் போகறச்சே உங்க ரெண்டு பேர் கண்ணும் பேசும். அதுதான் விஷயம். ஒரு சின்ன உதாரணம் சொல்றேன் பாருமே?''

''என்ன?''

''கோபுர வாசல்லே எத்தனைபிச்சைக்காரர் இருக்கா! அவர்களைப் பார்த்து ஒரு சிலர் வேணும்னுட்டுப் போயிடறா. ஒரு சிலர் அழுகிற அவனுடைய கண்ணைப் பார்த்துப் பச்சாத்தாபப்பட்டுத் தர்மம் செய்யறா. பிச்சைக்காரன் இதயத்திலே எழுகிற சோகம் அவன் கண் வழியே தெரிஞ்சு கேக்கறவா இதயத்தைப் பிடிச்சி உலுக்கறது. இவா கண் அதற்காக அழுகிறது. அது எதனாலே? அவன் ஹிருதய உணர்ச்சியை இவர் ஹிருதயம் உணர்வதால்தானே....?''

''ஆமாம், ஆமாம்!''

''அது போலத்தான், பக்தியாலே இவர் சுவாமியைப் பார்க்கிறார். சாமியின் கண்கள் அருள் மழை பொழியறதுன்னு நினைச்சு அந்தக் கண்ணை உற்றுப் பார்க்கறார். அந்தக் கண் பேசறது என்று நம்புகிறார். அதைப் போன்ற உணர்ச்சி அவருக்கு உண்டாகிறது. புரிஞ்சுதா?''

''புரிஞ்சுது'' என்று கூட நான் சொல்லவில்லை. வாயை மூடிக் கொண்டு அந்தத் திருநீற்றை நெற்றியில் இட்டுக் கொண்டேன், அதில் சிறு துளி கண்ணில் விழுந்தது. அதைத் துடைத்துக் கொண்டு நகர்ந்தேன்.

அவருக்கு அருகே நின்றிருந்த மற்றொரு குருக்கள் அவரிடம் என்னைப்பார்த்து, ''என்ன கொஞ்சம் லூசு ஆசாமா?'' என்று கேட்டது என் காதில் விழுந்தது. நான் பேசாமல் வீட்டுக்கு வந்து விட்டேன்.

இரவு ஒன்பது மணி. நான் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்த நேரத்தில் என்வீட்டுக் கதவை யாரோ 'தடதட' வென்று பலமாகத் தட்டினார்கள்.

கதவைத் திறந்தேன். குருக்கள்!

''ஸ்வாமி, இன்னிக்குக் கோவில்லே ஒரு கலாட்டா செய்துட்டாளே! இந்த விஷயம் உமக்குத் தெரியாதா?''

''.......''

''அனுபவமில்லாமல் யாரும் எதையும் அறிவிக்கப்படாது ஸ்வாமி. பாரும்கோ! உங்களுக்குக் காதல்னு அனுபவமில்லே. பிரமச்சாரி. பெண்ணின் கண்களைப் பற்றி வர்ணிச்சேள். ஆனால் அது வெறும் வாய் வர்ணனையாகத் தான் போச்சே தவிர உள்ளத்திலிருந்துவந்த உணர்ச்சியா தோணலே.''

''வாஸ்தவம் தான்.''

''ஏதோ காசுக்காக உழைச்சேன்; எழுதினேன். அதைப் போலத்தானே நானும்? இன்னிக்கே தர்மகர்த்தாகிட்டே சொல்லிட்டேன், நாளைக்கு வரமாட்டேன்னு!''

''ஏன், நீரும் கதை எழுதப் போறீரா?''

''அதெல்லாம் நம்ம ஜாதிக்கு ஒத்து வராது சுவாமி.''

''கோவில் பூஜைதான்னு சொல்றீரா?''

''அதுவும் துளிக்கூடப் பொருத்தமில்லே. நீங்க வந்து போனதற்கு அப்புறம் நான் விக்கிரகத்துக் கிட்டே போனேன். எல்லா மனுஷாளுக்கும் மனச்சாட்சி இருக்கு; அறிவு இருக்கு. அதுதானே உபயோகத்துக்கு வந்து நாம் செய்யற தப்பைத் திருத்தறதில்லே. விளக்கு இருக்கு. அதைத் தாண்டி விட்டால் இன்னும் பிரகாசமாகும். அது போலத்தான் மனச்சாட்சியும்.

''நீங்க வந்து 'சாமியின் கண் பேசுமா ஐயா'ன்னு கேட்டேள். நானும் என்னமோ பதிலைச் சொல்லி வைச்சேன். ஆனா...அந்தப் புனிதமான விக்கிரகத்துக்கிட்டே போன போது என்னை எதுக்கு இந்த மாதிரி அதன் கண்ணைப் பார் என்று சொன்னதும்? பார்த்த தற்கப்புறம் 'நீ பண்றது தப்பு; பூஜை பண்ற துக்கு நீ தகுதியில்லே'ன்னு மண்டையில் அறையறாப் போல அந்தக் கண்கள் எதுக்குப் பேசணும்? ஸ்வாமி, நீர் சொல்லிடுவீர்..... 'சாமி பேசித்தா? உம்மோட மனச்சாட்சி பேசித்து'ன்னு . எப்படிச் சொன்னா என்ன? பெரியவா ஸ்வாமின்னு சொன்னதைத்தான் உம்மைப் போல் சிறிசுகள் மனச்சாட்சின்னு சொல்றா. ஆக மொத்தம் ரெண்டும் ஒண்ணு தான். உண்மை என்னிக்கும் உண்மைதானே? பேரை மாத்திச் சொன்னால் மட்டும் அது வேறு பொருளாயிடுமா?''

''பக்திபூர்வமாக நான் பூஜை செய்திருக்க வேணும். ஆனா, ஏதோ கூலிக்கு உழைக்கறாப் போல் புஷ்பத்தைத் தூக்கி எறிஞ்சேன்.... இல்லேன்னு என் ஜன்மம் என்னிக்கோ கடைத்தேறியிருக்கும். நீங்க ரொம்ப நல்லா இருக்கணும். உங்களாலே ஒரு பாவம் தடைப்பட்டுது. இல்லையா? கோபுர வாசப்படிகிட்டே பட்சணக் கடை வைக்கலாம்னு யோசனை. ஸ்வாமியின் தரிசனமும் செய்யலாம்; நமக்கு லாயக்கான தொழிலையும் செய்யலாம்.''

குருக்கள் நகர்ந்தார். அவர் இதயத்தின் உள்ளிருந்து எழுந்த அனுபவக் கதிர்கள் அவருடைய கண்கள் வழியே வீசி, என் இதயத்தில் பட்டு என் கண்களை மூடிக் கொள்ளும்படி ஆணையிட்டு விட்டன.

# சத்தியத்தின் பிரதிநிதியாய்...

ஒவ்வொரு இந்தியனுடைய மனத்தையும் நினைவுகளையும் அவன் எங்கிருந்தாலும் கங்கை மானஸீகமாக நனைத்துக் கொண்டிருப்பதைப் போல......

கிளியோபாத்ராவின் மூக்கு இன்னும் சிறிது நீண்டோ, குறைந்தோ அமைந்திருந்தால் ஒரு சாம்ராஜ்யத்தின் வரலாறே மாறிப் போயிருக்கும் என்று சொல்கிறார்கள் அல்லவா?

மல்லிகை நகர் டாக்டர் சிவசங்கரன் எப். ஆர். எஸ். அவர்களின் மகள் வசந்தாவுக்கு இப்போது வாய்த்திருந்த கண்கள் இன்னும் சிறிது அகலமாகவோ, குறுகியோ அமைந்திருந்தால் ஒரு நகரத்தில் ஒரு பெரிய கல்லூரியின் ஆயிரத்து இருநூறு மாணவர்களுக்கு வாழ்க்கை சுவாரஸ்யமில்லாமல் போயிருக்கும். கிளியோபாத்ரா விவகாரத்தைப் போல ஒரு சாம்ராஜ்யத்தைப் பாதிக்கக் கூடிய விஷயமில்லையாயினும் பல பேருடைய ரசிகத் தன்மைக்கு நஷ்டத்தை உண்டாக்கக் கூடியதாயிருக்கும் இது. உடனே நீங்கள் இந்திய அரசாங்கத்தின் டூரிஸ்ட்— அலுவலக வெளியீட்டுப் பிரதாபங்களையோ, ரோடு 'மேப்'பையோ எடுத்து வைத்துக் கொண்டு மல்லிகை நகரத்தைத் தேடிக் கொண்டிருக்க வேண்டாம்!

மல்லிகை நகர் என்பது ஒரு பெரிய நகரத்தின் 'கண்டோன்மெண்ட்' பகுதிக்குப் பெயர். பின் என்ன? 'அரிஸ்டாக்ரடிக்குகள்' வாழ்கிற இடத்துக்கு அரளி நகர் என்றும் துளசி நகர் என்றுமா பேர் வைத்துக் கொண்டிருப்பார்கள்? பேரே மணக்க மணக்க அமைய வேண்டும் என்று இப்படி வைத்திருந்தார்கள். இதைத் தவிர இந்தப் பேருக்கும் அந்தக் கண்டோன்மெண்டுக்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது.

டாக்டர் சிவசங்கரன் மலையாளி. பாரதப் புழாவின் கரையில் திருச்சூருக்கும், பாலக்காட்டுக்கும் நடுவில் ஏதோ ஒரு சிறிய கிராமத்தைப் பூர்வீகமாக உடையவர் அவர். ஓலவக்கோட்டில் புறப்பட்டால் கொச்சி எக்ஸ்பிரஸில் இறங்கி அந்த ஊருக்குப்போகும் படி அருகில் இருக்கிற ஸ்டேஷன் எதுவோ அதில் கொச்சி எக்ஸ்பிரஸ் நிற்காது என்கிற அளவுக்குப் புகழில்லாத ஊர் அது. அதற்குப் புகழில்லை என்பதற்காகச் சிவசங்கரன் கவலைப்பட்ட காலம் மலையேறி விட்டது. சிவசங்கரனாக இருந்தவரை அவர் ஊரைப் பற்றிக் கவலைப்பட்டார். சிவசங்கரன் எப். ஆர். எஸ். ஆனபிறகு தம்முடைய பேரைப் பற்றியே அவர் அதிகமாகக் கவலைப்பட வேண்டியிருந்ததால் ஊரைப்பற்றிக் கவலைப்படுவதை விட்டு விட்டார். ஒரே சமயத்தில் பல காரியங்களுக்குக் கவலைப்பட்டால் 'ஹிஸ்டீரியா' போன்ற வியாதிகள் எல்லாம் வரலாம் என்று அவருடைய எம். பி., பி. எஸ். மூளைக்கு நன்றாகத் தெரியும்.

ஆனால் பாரதப் புழையாற்றின் கரையிலிருந்து நானூறு மைலுக்கு இப்பால் உள்ள தமிழ் நாட்டு நகரத்திலேயே பிறந்து தமிழ் நாட்டுச் சூழ்நிலையிலேயே வளர்ந்த அவருடைய திருக்குமாரிக்குச் சதா காலமும் பாரதப் புழையாற்றின் கரையில்தான் மனம் இருந்தது. அவளுடைய தாயார் அவளை அப்படிப் பைத்தியமாய் ஆக்கியிருந்தாள். அந்த வீட்டில் தாயும் மகளுமாகப் போட்டி போட்டுக் கொண்டு செய்கிற காரியம் ஒன்று வாரா வாரம் உண்டு. தபாலில் கிழமை தவறாமல் வந்து சேர்கிற மலையாள வாரப் பத்திரிகை படிக்கிற காரியம் தான் அது.

கலைக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த வசந்தா ஒவ்வொரு வெள்ளிக்கிழமை மாலையும் கல்லூரியில் கடைசிப் பாட வேளைக்கு 'டிமிக்கி' கொடுத்து விட்டு வீட்டுக்கு வந்து விடுகிற அளவு வெள்ளியன்று மாலைத் தபாலில் வந்து சேர்கிற மலையாள வாரப் பத்திரிகை அவளைக் கிறுக்குப் பிடித்தவளாக ஆக்கியிருந்தது. தாயும், மகளும் படித்து முடித்த பிறகு மூன்றாவது பைத்தியமாகச் செல்வாக்கில்லாத கிறுக்கு ஒன்றும் அந்த வீட்டில் இருந்தது. கொச்சம்மணி என்று பதினாறு பதினேழு வயதில் வேலைக்காரிக் குட்டி ஒருத்தி அந்த வீட்டில் இருந்தாள். வீட்டு வேலைக்கும் டாக்டருடைய ஆஸ்பத்திரி வேலைக்கும் சேர்ந்து பயன்படுவதற்காகப் பத்துப் பன்னிரண்டு வயதிலேயே மலையாளத்திலிருந்து வரவழைத்து வைத்துக் கொள்ளப்பட்ட வேலைக்காரி அவள். நானூறு மைல் தொலைவுக்கு அப்பால் வந்தும் மண் அபிமானத்தை விட முடியாமல் சில அரிய ஆபரேஷன் கேஸ்களாக அவரிடம் தேடிவந்து சேரும் நோயாளிகளுக்கு எடுபிடி வேலையாளாகப் பயன்படுகிற நாட்கள் தவிர மற்ற நாட்களில் கொச்சம்மணி வீட்டு வேலைக்காரிதான். கொச்சம்மணி என்கிற வேலைக்காரக் குட்டிக்கு இந்த உலகத்தில் ஆடம்பரமான ஆசைகளோ, அந்தரங்கமான அபிலாஷைகளோ எதுவும் கிடையாது. தன்னுடைய உயிருக்கு அடுத்த

படியாகக் 'கதாகரன்' எழுதும் கவிதைகளும் மலையாளக் கதைகளும் அவளுக்குப் பிடிக்கும். வெள்ளிக்கிழமையைத் தவிர இருக்கிற வாரத்தின் மற்ற ஆறு நாட்களிலும் அவள் எதற்காக உயிர் வாழ்கிறாள் என்றால் வெள்ளிக்கிழமையை எதிர்பார்த்து உயிர் வாழ்கிறாள் என்று பகவதி சாட்சியாய்ச் சத்தியம் செய்யலாம். அந்தப் பத்திரிகை அவளுடைய கைக்குக் கிடைக்கும் போது வெள்ளிக்கிழமை இரவு ஒன்பதரை மணிக்கு மேலாகி விடும். ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் அது தன் கைக்குக் கிடைக்கிற விநாடி எதுவோ அதை அவள் வாழ்த்தியிருக்கிறாள். மகள் கல்லூரியிலிருந்து திரும்புவதற்குள் பெரியம்மா அந்தப் பத்திரிகையைப் படித்துக் கொண்டிருப்பார்கள். மகள் திரும்பிய பின் அவளுடைய கைகளிலிருந்து அந்தப் பத்திரிகை விடுதலையடைந்து ஹாலில் உள்ள மேஜைக்கு வந்து சேர்வதற்கு இரவு ஒன்பது மணி ஆகும். அப்புறம் டாக்டர் அதை எடுத்து அலட்சியமாகவும் மேலோட்டமாகவும் ஒரு தரம் புரட்டிப் பார்த்து விட்டு எறிவதற்குக் கால் மணிக்கூறோ, அரை மணிக் கூறோ ஆகும். அப்புறம் தான் அந்தப் பத்திரிகையின் உண்மையான இரசிகையின் கைகளுக்கு – அதாவது முதல் வரியிலிருந்து கடைசிப் பக்கத்தின் கடைசி வரிவரை படித்து முடிக்கப் போகிற இரசிகையின் கைகளுக்கு அது போய்ச் சேரும். பத்து வயதுப் பெண்ணாக விற்பனையாகி வந்த அடிமையைப் போல் அவள் அந்த டாக்டர் வீட்டு வேலைக்காரியாகச் சேர்ந்தபின் பாரதப் புழையாற்றின் கரைகளில் உலாவியதில்லை. கதாகரனின் எழுத்துக்களைப் படிக்கும் போது பல முறை மானஸீகமாகப் பாரதப் புழையின் கரைகளில் கொச்சம்மணி உலாவியிருக்கிறாள். அதிகாலையில் எழுந்து குச்சு வீட்டின் ஓட்டுச் சார்ப்பில் படர்ந்திருக்கும் மரமல்லிகைப் பூக்களைத் தொடுத்துக் கூந்தல் முடிப்பில் வைத்துக் கொண்டு பெட்டியும் கையுமாக ஒலவக்கோட்டுக்கு வந்து மல்லிகை நகரத்துக்கு வருவதற்கு முதன் முதலாக ரயிலேறிய நாள் அவளுக்கு நினைவுவருகிற வேளைகளில் கதாகரனின் கதைகளும் நினைவு வரும். கதாகரனின் மலையாளக் கதையை அந்த வாரப் பத்திரிகையில் படிக்கிற நேரத்தில் பாரதப் புழை தான் ஓடிக் கொண்டிருக்கிற இடத்திலிருந்து நானூறு மைல்களைக் கடந்து வந்து அந்த நாழிகையில் அவள் மனத்தில் மட்டுமே ஓடும். அது ஒரு விசித்திரமான அநுபவம். அதை உணர்வதற்குத் தான் கொச்சம்மணியால் முடியும். சொல்வதற்கு வார்த்தைகளே இல்லை.



கதாகரனுடைய கதைகளையும், கவிதைகளையும் படிப்பதைத் தவிர அவளுக்கு வேறு ஆசைகளே இல்லையென்று சொன்னேன் அல்லவா? அதற்கு அப்பாலும் அவளுக்கு ஒரே ஓர் ஆசை உண்டு. அதுதான் கதாகரன் என்கிற அந்தக் கவியுள்ளம் படைத்த கதாசிரியனை நேரிலே எப்போதாவது பார்த்துவிட வேண்டும் என்ற ஆசை. அவனுடைய கதைகள் தாய்ப்பாலைப் போல் கொச்சம்மணியின் மனத்துக்கு அவள் பிறந்த நாட்டின் பண்புகளை நினைவூட்டிக் கொண்டேயிருந்தன.

அந்த வாரம் வெள்ளிக்கிழமை வந்த மலையாள வாரப் பத்திரிகையில் கதாகரன் ஒரு கவிதை எழுதியிருந்தார். அந்தக் கவிதையின் தலைப்பே அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. பாரதப் புழையின் கரையிலே' என்ற தலைப்'பில் வெளிவந்திருந்தது அந்தக் கவிதை.

''பாரதப்புழையின் கரையில் குளிர்ந்திருக்கிற மண்ணே! என் கண் பார்வைக்குத் தெரிந்த மட்டில் உனக்கு நிறமில்லை. உனக்கு மணமில்லை. ஆனால் உனக்கு உள்ளே உன்னுடைய கர்ப்பத்தில் ஏதோ விந்தைகள் நிறைந்திருக்கின்றன. இல்லையென்றால் உன் மேல் முளைத்திருக்கும் எல்லையற்ற பூஞ்செடிகளில் இத்தனை நிறங்களில் இத்தனை விதமான மணங்களோடு பூத்திருக்கும் பூக்களுக்கு அவை எப்படிக் கிடைத்தன? ஓகோ! புரிந்தது. அவை எல்லாம் பாரதப் புழை நீரின் பெருமைதான். இந்த நீர்ப் பிரவாகத்தின் வழியே எங்கள் வாழ்க்கையை அழகு செய்யும் மலர்களும், எங்கள் வயிற்றை நிரப்பும் உணவும், எங்கள் பண்பாடுகளும் உருவாகின்றன. நீ பெருகுவதும், குறைவதும், வறண்டு போவதும் எங்களுடைய பருவ காலங்களை மாற்றி மாற்றிப் படைக்கின்றன. உன்னுடைய நீர்ப்பெருக்கில் என்னுடைய மனமும் நினைவுகளும் நித்யமாக நனைந்து கிடக்குமாக! ஒவ்வொரு இந்தியனுடைய உள்ளத்தையும், நினைவுகளையும் கங்கை மானஸீகமாக நனைத்துக் கொண்டிருப்பது போல ஒவ்வொரு மலையாளியின் மனத்தையும் அவன் எங்கிருந்தாலும் நீ நனைத்துக் கொண்டிருக்கிறாய்....!'' என்று இப்படிப் பொருளமைந்த இந்தக் கவிதையைப் படித்தபோது கொச்சம்மணியின் மனம் பாரதப் புழையிலும் விழிகள் கண்ணீரிலும் நனைந்தன.

'எப்போதாவது பெரிய ஆபரேஷனுக்காகத் தேடி வரும் நாட்டுப்புறத்து மலையாளிகளிடம் பேசிப் பழக மொழி தெரிவதன் காரணமாகவும், வீட்டு வேலை செய்வதற்காகவும் சாப்பாடு துணிமணி தவிர மாதம் முப்பது ரூபாய் சம்பளம் வாங்கிக் கொண்டு இந்த உத்தியோகம் பார்க்க வேண்டும் என்று என் தலையில் எழுதியிரா விட்டால் நானும் பாரதப் புழையின் கரையில்தான் திரிந்து

'பொன்மழை'

படர்ந்து குண்டு குண்டாகப் பூத்திருந்த மல்லிகைப் பூக்களைத் தொடுத்து சரமும் தேங்காய் எண்ணெய் பூசிய பளபளப்புமாகக் கருப்பு 'வெல்வெட்'டைப் போல் வழுக்கிய நீண்ட கூந்தல் முடிப்பில் செருகிக் கொண்டு அவசரம் அவசரமாக ஒலவக்கோட்டுக்கு வந்து இரயிலேறிய வேளையை நினைக்கும் போது கொச்சம்மணி தன் மனத்துக்குள்ளேயே அழுதிருக்கிறாள். பல முறை அப்படி அழுதிருக்கிறாள். படித்த மலையாளியான டாக்டர் சிவசங்கரன் எப். ஆர். எஸ். அவர்களை விடக் கொச்சம்மணியின் நாட்டுப் பற்று அதிகமாக இருந்தது. டாக்டர் சிவசங்கரன் மலையாளப் பத்திரிகையைப் புரட்டிப் பார்க்கிறார். டாக்டர் சிவசங்கரனுடைய மனைவி மலையாளப் பத்திரிகையில் வருகிற கதைகளையும், கவிதைகளையும் படிக்கிறாள். சிவசங்கரனுடைய மகள் பிறப்பிலிருந்தே தமிழ் நாட்டில் வளர்ந்தும், சுதாகரனுடைய கவிதைக்காக ஏங்குகிறாள்.

ஆனால் கொச்சம்மணியைப் போல் சதா காலமும் அந்த உணர்விலேயே திளைத்து கொண்டிருக்க அவர்களால் முடியவில்லை. டாக்டர், அவர் மனைவி, மகள் இவர்களைப் போலக் கொச்சம்மணிக்கு ஆங்கிலம் தெரியாது. அதே போலக் கொச்சம்மணிக்குத் தெரிந்த பல விஷயங்கள் அவர்களுக்குத் தெரியாது. கொச்சம்மணிக்கு மகாகவி வள்ளத்தோளின் 'சித்திர யோகமும்' 'பால லீலை'யும் நன்றாகத் தெரியும். அவருடைய சாகித்ய மஞ்சரியில் பல பாடல்களை அவள் மனப் பாடம் பண்ணியிருக்கிறாள். குஞ்சுக்குட்டன் தம்பிரானுடைய பாரதத்திலும், குமாரனாசானுடைய 'வீணபூவு'விலும் கூட அவளுக்குப் பரிச்சயம் உண்டு. டாக்டர் சிவசங்கரனுடைய மகள் வசந்தாவோ இவற்றின் பேர்களைக் கூடக் கேள்விப்பட்டிருக்க மாட்டாள்.

டாக்டரின் மகள் இணையில்லாத பேரழகியாக இருக்கலாம். ஆனால் நாட்டுப் பற்றிலும் மொழி அபிமானத்திலும் அவள் தன்னோடு போட்டிபோட முடியாது என்று எண்ணிக் கொச்சம்மணி பல முறை தனக்குள் அந்தரங்கமாகக் கர்வப்பட்டுக் கொண்டிருக்கிறாள். அந்த வீட்டில் அவள் மட்டும் பட முடிந்த கர்வமாக இது ஒன்றுதான் மீதம் இருந்தது.

முதன் முதலாக வசந்தா சுதாகரனுடைய கவிதையைத் தன் தாயிடம் புகழ்ந்ததைக் கேட்ட போதுதான் கொச்சம்மணி தன்னுடைய கர்வத்துக்கும் போட்டி இருப்பதாக ஓரளவு புரிந்து கொண்டாள்.

இதற்கடுத்த மறு வெள்ளிக்கிழமை ஓர் அதிசயம் நடந்தது. பங்களாவின் கீழ்ப் பகுதி முழுவதும் நோயாளிகளின் படுக்கையோடு கூடிய அறைகளாகத் தடுக்கப்பட்டு ஆசுபத்திரியாகவும், மாடி முழுதும் குடியிருப்புக்காகவும் அமைந்திருந்தது. இதனால் ஆசுபத்திரி வேலை உள்ள நாட்களில் கொச்சம்மணி கீழேயும் மற்ற நாட்களில் மாடியிலும் இருப்பாள். தமிழோ ஆங்கிலமோ சிறிதும் பேசத் தெரியாத அப்பட்டமான மலையாளி 'பேஷண்ட்ஸ்' யாராவது வந்தால்தான் அவளுடைய 'சர்வீஸ்' கீழே தேவைப்படும். அன்று அப்படிப்பட்ட 'சர்வீஸ்' எதுவும் அவளிடமிருந்து தேவையில்லை. ஆனால் பிற்பகலில் தபால்



வாங்குவதற்காகக் கொச்சம்மணி கீழே இறங்கி வந்தான்.

தபாலில் வழக்கத்துக்கு மாறாக ஒரே மலையாள வாரப் பத்திரிகையின் இரண்டு வேறு பிரதிகள் இருக்கவே இவ்வொன்று யாருக்காக வந்திருக்கும் என்று அறிவதற்காக முகவரியைப் பார்த்தான். ஏதோ ஒரு பேரின் கீழே 'டாக்டர் சிவசங்கர மேனன் கிளினிக்' என்று எழுதி வார்டு எண்ணும் தெளிவாகப் போட்டிருந்தது.

அதை அந்த வார்டில் கொண்டு போய்ச் சேர்த்து விடுவதற்காகப் போன கொச்சம்மணி அங்கேதான் அந்த அதிசயத்தைச் சந்தித்தான். வார்டுக்குள் நுழைந்தவுடன் நீங்கள்தான் இந்த விலாசத்துக்கு உரியவரா என்று கேட்பதற்காகப் பேரைப் படித்தவன், 'கதாகரன் நாயர்' என்று படித்து விட்டு மனத்தில் சந்தோஷமானதொரு சந்தேகத்தோடு எதிரே கட்டிலில் படுத்திருந்த இளைஞரின் முகத்தைப் பார்த்தான்.

அந்த இளைஞர் புன்முறுவலோடு கைநீட்டி அவன் கொடுத்த பத்திரிகைப் பிரதியை வாங்கிக் கொண்டார். அதைக் கொடுத்த பின்பும் நகராமல் கொச்சம்மணி அங்கேயே நின்றான். தன் மனத்திலிருப்பதை எப்படிக் கேட்பது என்று தெரியவில்லை அவனுக்கு. அந்த இளைஞரின் முகத்தைப் பார்ப்பதற்கும் அவனுக்கு நாணமாக இருந்தது.

''இந்தப் பத்திரிகையின் சென்ற இதழில் வந்த 'பாரதப் புழையின் கரையிலே' என்ற கவிதையைப் படித்தீர்களா?'' என்று வேறு விதமாகத் தன் கேள்வியை அவரிடம் கேட்டான் கொச்சம்மணி.

அவனுடைய இந்தக் கேள்வியைச் செவியுற்றவுடன் சாய்ந்தாற் போல் படுத்திருந்த அந்த இளைஞர் நிமிர்ந்து உட்கார்ந்தார். பதில் ஒன்றும் கூறாமல் புன்முறுவல் பூத்தாரேன். ''ஏன் அந்தக் கவிதையில் ஏதாவது விசேஷம் உண்டோ?'' என்று அவனைக் கேட்டார். கொச்சம்மணிக்கு நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டது. ஆனாலும் சமாளித்துக் கொண்டு பதில் கூறினான்: ''அந்தக் கவிதையே ஒரு விசேஷம்தான்! அதைப் படித்த விநாடிகளை நான் வாழ்த்தினேன். அதைப் படைத்த கைகளில் மணம் நிறைந்த பூக்களை அள்ளிச் சொரிய வேண்டுமென்று ஆசைப்பட்டேன்'' என்று கொச்சம்மணி கூறியவுடனே படுக்கையில் உட்கார்ந்திருந்த அந்த இளைஞர் கையிலிருந்த பத்திரிகையைக் கீழே வைத்துவிட்டு ரோஜாப் பூவில் உள்ள நீர் போல் வெண் சிவப்பு நிறமான தம் உள்ளங் கைகள் இரண்டையும் இட்டென்று அவனுக்கு முன்னால் நீட்டி, ''பூக்களைச் சொரியுங்கள்'' என்று கூறிச் சிரித்தார்.

அந்தக் கணத்தில் கொச்சம்மணியின் கண்களிலே பக்தி மலர்ந்தது. நெஞ்சிலே பாரதப் புழையின் நீர் பெருகி நிறைந்தது. அவரிடம் என்ன பேசுவதென்று தெரியவில்லை அவனுக்கு.

''எங்கள் டாக்டரின் மகள் அந்தக் கவிதையைப் படித்துவிட்டு உங்களுக்கு நோபெல் பரிசு தர வேண்டும் என்று கொண்டாடிக் கொண்டிருக்கிறாள்'' என்று மீண்டும் புகழ் மாலையில் இறங்கினான்.

''உங்கள் டாக்டரைப் பார்த்தால் கவிதைகளை இரசிக்கிறவராகத் தெரியவில்லையே? என்னுடைய நோக்கில் பார்த்தால் உலகத்தில் உள்ள டாக்டர்கள் எல்லாம்தான் நிஜமான நோயாளிகள். சாதாரண மனிதர்களுக்கு இருக்கிற ஆர்வங்களையும் சுவையுணர்வுகளையும் டாக்டர்கள் இழந்து போயிருக்கிறார்கள். வாயினால் பேசி மற்றவர்களுடைய நாடித் துடிப்பை உணர்வதற்குப் பதில் ஸ்டெதாஸ்கோப்பினாலேயே உணர்கிறவர்களுக்குக் கவி இதயமும் கத்திரிக்காய் விற்கிறவனுடைய இதயமும் ஒன்றுபோலத்தான் தோன்றும். நல்ல வேளையாக உங்கள் டாக்டரின் மகளுக்காவது கவிதையை இரசிக்கும் இதயம் இருப்பதாக நீங்கள் சொல்வதைக் கேட்டு மகிழ்கிறேன். நீங்கள் 'நான் இன்னார்தானா' என்று கேட்டுத் தெரிந்து கொள்வதற்கே ஆர்வமாக இருக்கிறீர்கள். ஆனால் உங்கள் டாக்டரோ நான்கு நாட்களுக்கு முன்பு நான் இங்கு வந்து 'அட்மிட்' ஆனபோது என்னைப் பற்றி நானாக இன்னாரென்று கூறியும்கூடப் பதிலுக்குப் புன்சிரிப்புக்கூடச் சிரிக்கவில்லை!'' என்று கொதிப்போடு பேசினார் அவர்.

''அது அவர் சுபாவம்! அவருடைய மனைவிக்கும், மகளுக்கும் நீங்கள் இங்கே அட்மிட் ஆகியிருப்பது தெரிந்தாலோ ஒரு திருவிழாக் கொண்டாட்டமே கொண்டாடிவிடுவார்கள்'' என்று உற்சாகமாகப் பதில் கூறினான் கொச்சம்மணி.

எங்களுடைய புதல்வி சௌபாக்கியவதி பிருந்தாவுக்கும் ஸ்ரீ சந்தானமய்யங்கார் குமாரர் சிரஞ்சீவி சேஷாத்திரி B. Com., A. C. A.க்கும் 18-1-62 அன்று ஆமூரில் நடந்த திருமணத்திற்கு விஜயம் செய்து தம்பதிகளை ஆசிர்வதித்தும் பரிசுகள் அளித்தும் வாழ்த்துக்கள் அனுப்பியும் எங்களை கௌரவித்த உறவினர், நண்பர்கள் யாவருக்கும் எங்கள் மனமார்ந்த நன்றி.

சகுந்தலா ரெங்காச்சாரி
வி. ரெங்காச்சாரி, மிராசுதார்
உரிமையாளர் சகுந்தலா பார்மசி



"நீங்கள் இங்கு நர்ஸாக இருக்கிறீர்களோ?"

சுதாகரனின் இந்தக் கேள்விக்கு மறுமொழியாகத் தன் சரித்திரத்தையே சுருக்கமாகச் சொல்லி முடித்தாள் கொச்சம்மணி.

"இன்றைய நிலையில் உங்களைப் போன்று கஷ்டப்படுகிறவர்கள்தான் தேசப் பற்றையும், மொழிப் பற்றையும், தேசிய உணர்ச்சிகளையும் இழந்து விடாமல் காத்துக் கொண்டிருக்கிறீர்கள்" என்றார் சுதாகரன்.

"நீங்கள் இப்படி ஏங்கிப் போய்ப் பேசக் கூடாது. இங்கே தங்கியிருக்கிற வரை உங்களுக்கு வேண்டிய சௌகரியங்களை தான் செய்து கொடுப்பேன். ஒவ்வோர் இந்தியனுடைய உள்ளத்தையும் நினைவுகளையும் கங்கை மானசீகமாக நினைத்துக் கொண்டிருப்பதைப் போலத் தன் கரையில் பிறந்த ஒவ்வொரு மலையாளியின் மனத்தையும் பாரதப் புழை நினைத்துக் கொண்டிருப்பதாக நீங்கள் எழுதியிருக்கிறீர்களே! என் மனத்தை ஒவ்வொரு விநாடியும் நான் பிறந்த இடத்து நதிக் கரை நீர் அலை அலையாக நினைத்துக்கொண்டிருக்கிறது. உங்களுக்கு உதவி செய்வதன் மூலம் நான் பெருமைப்பட முடியும்" என்று கொச்சம்மணி கூறிய போது சுதாகரன் அவளைப் பார்த்து இரண்டு கைகளையும் கூப்பி வணங்கினார்.

அவள் உற்சாகம் தாங்க முடியாத மனத்தோடு தபால்களை எடுத்துக் கொண்டு மாடிக்குப் போனாள். வாரப் பத்திரிகைக்காகக் காத்துக் கொண்டிருந்த டாக்டரின் மனைவியிடம் பத்திரிகையையும் சுதாகரன் கீழே தங்கள் ஆசுபத்திரியில் வந்து 'அட்மிட்' ஆகியிருக்கும் மகிழ்ச்சிகரமான செய்தியையும் சேர்த்துத் தந்தாள் கொச்சம்மணி. ஆனால் அந்த முதிய அம்மாள் சுதாகரனின் எழுத்துக்களை விரும்பிப் படித்த அளவு இந்தச் செய்தியைக் கேட்டு அதிக ஆர்வம் காண்பிக்கவில்லை.

"அப்படியா? சாயங்காலம் வசந்தா கல்லூரியிலிருந்து வந்ததும் அவளிடம் சொல்லு. மிகவும் மகிழ்ச்சி அடைவாள்" என்று சொல்லி விட்டுப் பத்திரிகை படிப்பதில் மூழ்கிவிட்டாள் சிவசங்கரனின் மனைவி. கொச்சம்மணியின் ஆர்வம் இந்த அலட்சியத்தில் பேர் பாதி அடங்கிப் போய் விட்டது. ஏதோ பெரிய திரு விழாக் கொண்டாட வேண்டிய நிகழ்ச்சி நடந்திருப்பது போலவும் அதைப் பொருட்படுத்தாமல் எல்லாரும் வேண்டுமென்றே திட்டமிட்டுக் கொண்டு அலட்சியம் செய்வது போலவும் கொச்சம்மணிக்கு அப்போது தோன்றியது. சாயங்காலம் வசந்தா வந்ததும் அவளிடம் ஓடிப்



"நம்ப சாந்தாவுக்கு ஒரு பல் டாக்டரை நிச்சயம் பண்ணியிருக்காளாம்!"

"அதுதான் அவளுக்கு வாயெல்லாம் பல்லாயிருக்கு போலிருக்கு!"

போய் இந்தச் செய்தியைச் சொன்னாள். அவள் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. இந்தச் செய்தியைக் கேட்டதும் வசந்தா மகிழ்ச்சிக் கூத்தாடினாள்.

"இதோ வருகிறேன்! இரண்டு பேருமாகக் கீழே போய் அவரைப் பார்க்கலாமடீ" என்று கூறிவிட்டு அலங்காரம் செய்து கொள்ளப் புகுந்த வசந்தா முக்கால் மணி நேரத்துக்குப் பின்புதான் வெளியே வந்தாள். ஏதோ கிளியோபாத்ரா ஸீஸரை வெற்றி கொள்ளப் புறப்பட்டாற் போல அழகுத் தேவதையாகப் புறப்பட்டிருந்தாள் வசந்தா. இதன் காரணமும் கொச்சம்மணிக்குப் புரியவில்லை. 'இந்தப் பெண் சுதாகரனைத் தான் பார்க்க வேண்டுமென்று வருகிறாளா; அல்லது சுதாகரன் தன்னைப் பார்க்க வேண்டுமென்று வருகிறாளா?' என்று புரியாமல் மருண்டாள் அவள். மனம் எதற்காகவோ கஷ்டப்பட்டது அவளுக்கு. வசந்தா சுதாகரனுடைய அறைக்குள் நுழைந்ததும் தான் யாரென்று அறிமுகம் செய்து கொள்ளாமலே அவரது கட்டிலின் விளிம்பை ஒட்டினாற் போல் ஸ்டூலில் உட்கார்ந்து கொண்டு விட்டாள். கதவோரமாகப் பணிவோடு தயங்கி நின்ற கொச்சம்மணிக்கு இதுவும் பிடிக்கவில்லை. "எங்கள் டாக்டரின் மகள்" என்று கொச்சம்மணி அவருக்கு வசந்தாவை அறிமுகம் செய்து வைத்தாள். வசந்தா வணங்கியதற்குப் பதிலாகச் சுதாகரன் கைகூப்பினான். அடுத்த விநாடி பாதி ஆங்கிலமும் பாதி மலையாளமும் கலந்து வசந்தா சுதாகரனிடம் கேட்கத் தொடங்கிய கேள்விகளைக் கண்டு கொச்சம்மணி தன் மனத்தில் மிகவும் வேதனையடைந்தாள்.

"நீங்கள் 'கோல்ட்ஸ்மித்' ஏதாவது படித்திருக்கிறீர்களா?"

"இல்லை." — சுதாகரனின் பதில் இது.

"பைரன் ஷெல்லி.........?"

"இல்லை."

"கலீல்ஜிப்ரான்?"

"இல்லை."

"நீங்கள் விரும்பித் தோய்ந்து படித்த புத்தகம்?"

"வாழ்க்கை! பாரதப்புழையின் கரையில் சிறிதும் பெரிதுமாயுள்ள மலையாளத்து ஊர்களின் வறுமையும், வளமும், ஏக்கமும், இன்பமும் எனக்கு மனப்பாடம்."

"உங்கள் கவிதைகளுக்கு.... பத்திரிகையில் 'என்ன' கொடுக்கிறார்கள்?"

"சில பேரிடமிருந்து இப்படிக் கேள்விகளை எதிர்பார்க்கும் துர்ப்பாக்கியத்தைத் தவிர

பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில்




## ஈறுகளை பலப் படுத்து கிறது

**வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!** "ஆஸ்மோஸ்கோப்" பரிசோதனைகளில், கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட், வேறெந்த சாதாரண பற்பசையைவிட மிகத்தீவிரமாக வாய் நாற்றத்தை ஒழிக்கிறது என்பது நிரூபணமாயுள்ளது.

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!** கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்டை ஒவ்வொரு முறையும் சாப்பிட்டவுடன் தேய்ப்பதால், பற்களை சொத்தையாக்கும் கிருமிகள் அழிகின்றன.

கால்கேட்டின் பிரத்தியேகமான சேர்க்கை முறையைக் கொண்ட குளோரோபில்லின் பூரண பலனை அடையுங்கள்.... கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்ட் அல்லது கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் வாங்குங்கள்!

கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்டை தினமும் தேய்ப்பதால், தீவிரமான குளோரோபில்லின் பூரண நன்மையை அடைகிறது, ஈறுகள் உறுதியாகவும் ஆரோக்கியமாகவும் இருக்க உதவுகிறது. உன்னதமான இந்த குளோரோபில் டூத்பேஸ்ட், சிறந்த பற்பசை, பற்பொடி முதலியவை தயாரிப்பதில் மிக்க அனுபவம் கொண்ட உலகிலேயே மிகப்பெரிய ஸ்தாபனத்தால் தயாரிக்கப்படுகிறது!




வேறு எந்த பற்பசையிலும்
இதைவிட அதிக வீரிய குளோரோபில்
இல்லை — குழந்தைகள் அதன்
பெப்பர்மின்ட் வாசனையை மிகவும்
விரும்புகிறார்கள்!




CTPA-G-10 TAM.

# ஆல மரத்தடி நிழலிலே—

முன்பெல்லாம் சாதாரணமாக நம்நாட்டு கிராமவாசிகள் அன்றாட வேலை முடிந்தவுடன் ஆலமரத்தின் நிழலில் கூடி பொழுதைக் கழிப்பது வழக்கம். இப்பொழுதோ அவர்கள் மத்தியில் டிரை-செல் ரேடியோ செட் ஒன்று செய்தி அறிக்கைகளையும், அவர்களுக்குப் பிடித்தமான பாட்டுக்களையும் ஒலிபரப்பிக் கொண்டு அவர்களை இன்பத்தில் ஆழ்த்தி வருவதை சாதாரணமாகக் காண்கிறோம்.

இக்காலத்து கிராமவாசிகள் ரேடியோ நிகழ்ச்சிகளை மிகத்தெளிவாகக்-கேட்பதற்கு அதிக சக்தி அளிக்கக்கூடிய எஸ்ட்ரெலா பாட்டரிகளையே உபயோகிக்க விரும்புகிறார்கள். நீண்ட காலம் உழைக்கக்கூடியதும், டிரை-செல் பாட்டரி உற்பத்தியில் 20 வருஷ அனுபவத்தினுல் தயாரிக்கப்பட்டதுமான எஸ்ட்ரெலா பாட்டரிகள் வெளிநாடுகளில் உற்பத்தியாகும் சிறந்த பாட்டரிகளுக்கு சமமானவையென்று பரிசோதனைகள் மூலம் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

உங்கள் ரேடியோவிற்கு ஒரு எஸ்ட்ரெலா பாட்டரியை இன்றே பொருத்துங்கள். இது உங்களுக்குத் தேவையான எல்லா அனுகூலங்களையும் ஒருங்கே அளிக்கவல்லது.

**எஸ்ட்ரெலா**

**ரேடியோ பாட்டரி**

இப்பொழுது உங்கள்
ரேடியோ டீலரிடம் கிடைக்கிறது




**எஸ்ட்ரெலா பாட்டரீஸ் லிமிடெட்**
பம்பாய் • மதராஸ் • டெல்லி • கல்கத்தா • கான்பூர்

ES-6-6 TAM.

வெள்ளம்

அத்தியாயம் இருபத்தைந்து

## இயற்கையின் மகன்

இரவோடு இரவாக முருகையனை மார்வாடிக் கடைக்கு அழைத்துக் கொண்டு சென்று, கடையை மார்வாடி மூடிக் கொண்டிருந்த சமயத்தில் முருகையன் அடகு வைத்திருந்த மோதிரத்தைத் திருப்பிக் கொண்டு வந்தாள் சித்திரா. முருகையனுடைய அந்தச் செய்கை அவள் மனத்தை அளவுக்கு அதிகமாகவே புண்படுத்தி விட்டது. பொதுவாகவே நகையை வைத்துக் கடன் வாங்கும் பழக்கத்தை அவள் வெறுத்தாள். அதிலும் அந்த மோதிரம் அவளுடைய அடையாளமாக முருகையனுக்குக் கொடுக்கப்பட்டது. அவனோ அதைச் சாந்தாவின் பொருட்டு அடகு வைக்கத் துணிந்து விட்டான். சாந்தாவுக்காக அவன் இப்படிச் செய்ததைத் தான் சித்திராவால் ஒப்புக்கொள்ளவே முடியவில்லை.

காரில் அவனோடு கடைக்குச் சென்ற போதும், கடையிலிருந்து திரும்பிய போதும், வீட்டுக்கு வந்த பிறகும் கூட இதைப் பற்றியே திரும்பத் திரும்பப் பேசிக் கொண்டிருந்தாள் சித்திரா. நேரடியாக அவன் மீது ஆத்திரப்பட்டு எரிந்து விழவில்லையென்றாலும், அவள் அதனால் மிகவும் நொந்து போயிருந்தாள் என்பதைக் கண்டு கொண்டான் முருகையன்.

''சித்திரா! உன்னுடைய வருத்தம் எனக்குத் தெரிகிறது. ஆனால், நான் உன்னுடைய அன்பு இந்த மோதிரத்தில் மட்டும்தான் இருக்கிறதென்று நினைக்கவில்லை. நோய் வாய்ப்பட்டிருந்த ஒருத்திக்குத் தக்க சமயத்தில் உதவி செய்வதற்கு அது பயன்பட்டிருக்கிறது. இதனால் நான் உன் அன்பை மறந்து விடவும் இல்லை. அவளிடம் தனிப்பட்ட அன்பு கொள்ளவும் இல்லை.''

''தனிப்பட்ட அன்பு என்றால்....''

அகிலன்

புரிந்து கொண்டே கேள்வி கேட்கும் சித்திராவுக்கு எப்படிப் பதில் அளிப்பது என்று ஒரு விநாடி யோசனை செய்து விட்டு, ''நான் அவளைக் காதலிக்கவில்லை சித்திரா!'' என்றான்.

''நீங்கள் என்னையும் காதலிக்கவில்லை....!''

''சித்திரா!''

''ஆமாம், அப்படியிருந்தால் நீங்கள் இதைச் செய்தே இருக்க மாட்டீர்கள்.''

''நான் செய்தது தவறாக இருந்தால் நீ என்னை மன்னித்துக் கொள், சித்திரா. இனிமேல் நான் இப்படிச் செய்யவில்லை.''

சித்திரா தன் கண்களைத் துடைத்துக் கொண்டு அவனைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தாள். தவறுதலுக்கு மன்னிப்புக் கேட்கும் அவனுடைய ஆண்மையைத் தனது பெண்மை வென்று விட்டது என்ற பூரிப்பு அவளுக்கு. ''இனிமேல் என்றைக்கும் இதை நீங்கள் உங்கள் விரலை விட்டுக் கழற்றவே கூடாது. ஆமாம், என்றைக்குமே கழற்றக் கூடாது!'' என்று சொல்லிக் கொண்டே அவனுக்கு மறுபடியும் போட்டு விட்டாள்.



இரவில் தனிமையில் முருகையன் படுக்கையில் கிடந்தபடி வெகு நேரம் அந்த மோதிரத்தை உற்றுப் பார்த்தான். அந்த மோதிரத்துக்கும் அவனுடைய காதலுக்கும் என்ன சம்பந்தம்? காதல் என்றால் என்ன? ஒரே குழப்பமாக இருந்தது முருகையனுக்கு.

'சாந்தா உங்களைக் காதலிக்கிறாள்; அது எனக்குத் தெரியும்...... நீங்கள் என்னைக் காதலிக்கவில்லை; அப்படியிருந்தால் நீங்கள் இதைச் செய்திருக்க மாட்டீர்கள்!' சித்திரா கூறிய சொற்கள் அவனுடைய மனத்தில் பல முறை எதிரொலி செய்தன.

ஒரு வேளை இந்தக் காதல் என்னும் விஷயம் பற்றி ஆண்களைவிடப் பெண்களுக்குத்தான் அதிகமாகத் தெரியுமோ? சாந்தாவின் வீட்டில் குடியிருந்த ஓர் அம்மாளும் இப்படித்தான் அவள் மீது சந்தேகப்பட்டுப் பேசினாள். அதனால் அந்த வீட்டை விட்டே வெளியேறும்படியாகப் போய் விட்டது. இப்போது சித்திராவும் அதே விஷயத்தைச் சொல்கிறாள். எனக்குத்தான் இதெல்லாம் புரியவில்லை!

இனிமேல் சாந்தாவின் வீட்டுக்குப் போவதை அடியோடு நிறுத்திக்கொள்ள வேண்டியதுதான். வீணாகச் சித்திரா சந்தேகப்படவும் வேண்டாம்; கவலைப்படவும் வேண்டாம். காதலைப் பற்றி வீணாக ஆராய்ச்சி செய்து குழம்பிக் கொண்டிருப்பதை விடப் பேசாமல் சித்திரா சொல்கிறபடி கேட்டுக் கொள்வதே மேல்!

சித்திராவின் அழகு கொள்ளை அழகு. முதன் முதலில் அவளைப் பார்த்தவுடனேயே, அவளுடைய உருவம் என் மனத்தில் பதிந்து விட்டது. அவளைப் பார்க்கும்போதெல்லாம் ஏனோ ஒருவித ஆனந்தம் பொங்குகிறது. பார்க்காத சமயங்களிலும் நினைத்தால்கூட அந்த நினைவில் ஓர் இனிமை இருக்கிறது. இதற்குத்தான் காதல் என்று பெயரா?

இனிமேல் இருவரும் ஒரே வீட்டில் இருந்து கொண்டு, இப்படியே தனிமை வாழ்வு வாழ முடியாது. எப்படியும் விரைவில் அவளைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டியதுதான். என்னை விட அவள்தான் இந்தப் பிரிவினால் மிகவும் சிரமப்படுகிறாள். என்னுடைய அறைக்கு வந்து விட்டால் பிறகு திரும்பிப் போவதற்கே அவளுக்கு மனம் வருவதில்லை. இந்த வீட்டில் இருக்கும்

பெரியவர்கள் எங்களைப் பற்றி என்ன நினைத்துக் கொள்வார்கள்? பெரிய பாளையத்தில் இப்படியெல்லாம் ஓர் ஆணும், பெண்ணும் அவர்கள் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறவர்களாக இருந்தாலும் கூட, நெருங்கிப் பழக முடியுமா?

பெரியபாளையத்துக்கும் சென்னை நகரத்துக்கும் இருந்த வேற்றுமைகளை அவனால் நினைத்துப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. காலையில் எழுந்தவுடன் வேப்ப மரத்தில் ஏறிப் பல் விளக்குவதற்குக் குச்சி ஒடித்துக் கொண்டு வயல் வரப்புக்களில் நடந்து சென்ற நாட்கள் அவன் கண் முன் வந்தன. கிணற்றில் விழுந்து குளிக்கலாம்; இல்லையென்றால், ஆற்றுக்குப் போனால் மனம் கொண்ட மட்டும் நீந்திக் களிக்கலாம். வயல்களில் ஆண்கள் ஏர் உழுவார்கள்; பெண்கள் நாற்று நடுவார்கள்.

மனிதர்கள் இயற்கையோடு அங்கே இணைந்து வாழ்ந்தார்கள். தங்கள் கைகளாலும் கால்களாலும் உழைத்துச் சாப்பிட்டார்கள். மனிதர்களுடைய எல்லா அவயவங்களுக்கும் அங்கே வேலை இருந்தன. அவர்களுடைய உழைப்பால் நெல் நாற்றுக்கள் உயிர்த் துடிப்போடு தலைதூக்கிச் சிரிக்கும் அந்தக் காட்சி....

பட்டணத்து மனிதன் பாதி மனிதன். பலருடைய கைகளுக்கும் வேலை இருப்பதில்லை; கால்களுக்கும் வேலை யிருப்பதில்லை. கைகளால் உழைக்கத் தெரியாதவர்கள் இங்கே பெரிய மனிதர்கள்!! காருக்குக் காத்து நிற்பார்கள்; கால்களைப் பயன்படுத்த மாட்டார்கள். இயந்திரமும் பணமும் ஆட்சி செய்கிற இடம் இந்தப் பட்டணம்.

தான் கூட இங்கே பாதி பெரிய மனிதனாக மாறி வருவது போல் தோன்றியது முருகையனுக்கு. கார் இருப்பதால் கால்களுக்கு வேலையே இல்லை. கணக்கு எழுதுவதைத் தவிர கைகளுக்கும் வேலை இல்லை. கணக்கென்றால் பணம்! கார் என்றால் இயந்திரம்!.... பணம், இயந்திரம்.... பணம் இயந்திரம்...பணமும் இயந்திரமும்தான் பட்டணம்!

ஆண் பிள்ளைகளின் ஆண்மைக்கும் பெண் பிள்ளைகளின் பெண்மைக்கும் இந்தப் பணமும் இயந்திரமும் எந்த அளவுக்குத் துணை செய்யப் போகின்றன? எந்த அளவுக்கு அவர்களுக்குத் துன்பம் தரப் போகின்றன?

சாந்தாவின் உழைப்பு முருகையனுக்குப் பிடித்திருந்தது. எந்த நேரமும் கலகலப்போடும் சுறுசுறுப்போடும் அவள் எதையாவது செய்து கொண்டிருந்தது அவனுக்கு ஓர் உற்சாகத்தைக் கொடுத்தது.

சித்திரா பெரும்பாலும் அழகுப் பொம்மை போலவே காட்சி தருகிறாள். சமையல் அறையிலும் அவளைப் பார்த்ததில்லை. வீட்டு வேலைகள் செய்ய வேண்டிய அவசியமும் அவளுக்குக் கிடையாது. எப்படித்தான் பொழுது போகிறதோ? அவளையும் உழைக்கச் சொல்ல வேண்டும். உடலைப் படைத்த கடவுள் அதை



உடைகளுக்கும் நகைகளுக்கும் சுமை தாங்கியாக இருப்பதற்குப் படைக்க வில்லை. பணம் இருந்தால் என்ன? இயந்திரங்கள் இருந்தால் என்ன? அவற்றுக்கு அடிமைப்பட்டு மனிதர்கள் தங்கள் இயற்கைச் சக்தியை இழக்க வேண்டும் என்பதில்லையே!

இப்படி எதை எதையோ நினைத்துக் கொண்டு உறங்கி விட்டான் முருகையன். மறு நாள் காலையில் எழுந்தவுடன் அவனுடைய கைகளையும் கால்களையும் ஒருமுறை பார்த்துக் கொண்டான். உறங்கிப் போன உழைப்புச் சக்தி அவற்றில் தேங்கிக் கிடப்பதுபோல் தோன்றியது.

தோட்டத்துப் பக்கம் நடந்து சென்ற முருகையனுக்கு அங்கே கிடந்த மண் வெட்டியைக் கண்டவுடன் உற்சாகம் பிறந்து விட்டது. சட்டையைக் கழற்றி எறிந்து விட்டு, தலையில் துண்டைச் சுற்றிக் கொண்டு, மளமளவென்று புல்லை வெட்டத் தொடங்கினான். முதுகுத் தண்டில் வேர்வை வழிந்தோடும் வரையில் அவன் வெட்டிக் கொண்டிருந்தான். காலை வெயில் அவனுக்கு இதமாக இருந்தது.

சன்னல் வழியாக இந்தக் காட்சியைப் பார்த்து விட்டாள் மாணிக்கத்தின் மனைவி. அவளால் சிரிப்பை அடக்க முடியவில்லை. ஓடிப் போய் இதைச் சித்திராவிடம் சொல்லி விட்டு விழுந்து விழுந்து சிரித்தாள். "பட்டிக்காட்டு மாப்பிள்ளைங்கிறது சரியாத்தான் இருக்குது. போய் வேடிக்கையைப் பாரேன்!"

சித்திராவும் சன்னலருகில் நின்று பார்த்தாள். அவளுக்குச் சிரிப்பு வரவில்லை. உண்மையிலேயே அவனுடைய தோற்றம் அப்போது அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. செடி கொடிகளுக்கு மத்தியில் தோன்றும் முருகையன் ஏதோ ஒரு தனியான காந்த சக்தியைத் தான் பெற்றிருந்தான். தோட்டக் கிணற்றில் அவன் ஏறிக் குதித்தபோது எப்படியிருந்தானோ, மரத்தில் ஏறி இள நீர் பறித்துப் போட்ட போது அவன் எப்படியிருந்தானோ அப்படித் தான் இன்றும் இருந்தான்.

ஆனால் மாணிக்கத்தின் மனைவி, சித்திராவைச் சும்மா விடவில்லை. மேலும் மேலும் பரிகசித்துக் கொண்டே போனாள். "பார்த்தியா! உன் தோட்டக்கார மாப்பிள்ளையை! எங்கேயோ காட்டிலே இருந்து பிடிச்சுக்கிட்டு வந்திருக்கே நீ! போ, சித்திரா! போய்ச் சொல்லு! உன் அண்ணன் வந்து பார்த்தால் என்ன நினைச்சுக்குவார்? தோட்டக்காரன் வந்தா இவரை மதிப்பானா?"

மிகுந்த கோபத்தோடு வேகமாகத் தோட்டத்துக்குள் நுழைந்தாள் சித்திரா. அவளுடைய அண்ணியின் பரிகாசத்தால் தூண்டிவிடப்பட்ட கோபம் தான் அது.

## அத்தியாயம் இருபத்தாறு

# மாறியது யார்?

செடிகளை விலக்கிக்கொண்டு தோட்டத்துக்குள் காலடி எடுத்து வைத்த சித்திராவுக்கு அவளுடைய கோபம் எப்படிப் பறந்துபோனது என்றே தெரியவில்லை. அவள் வந்ததைக் கவனியாமல் முருகையன் முழுமூச்சோடு வேலையில் ஈடுபட்டிருந்தான்.

மண் வெட்டியால் தரையைப் பெயர்த்து அங்கே மண்டிக் கிடந்த அருகம்புல்லை அவன் வேருடன் களைந்து ஒதுக்கிக் கொண்டிருந்தான். அவனுடைய கரங்களின் சதைப் பிடிப்புக்கள் கெண்டை மீன்களைப் போல் துள்ளிக் கொண்டிருந்தன. வலிவும் வனப்பும் நிறைந்த அவனுடைய உருவம் அப்போது உழைப்பால் தனது உயிர்த் துடிப்பை வெளியிட்டுக் கொண்டிருந்தது. எப்படி, எதற்காக அவனிடம் கோபித்துக் கொள்வது?

சன்னல் பக்கம் திரும்பிப் பார்த்தாள். அவளுடைய அண்ணியின் முகம் அங்கே நீட்டிக் கொண்டிருந்தது.

"அத்தான்! நீங்கள் இப்படிச் செய்வது உங்களுக்கே நன்றாக இருக்கிறதா?"

"ஓ! சித்திராவா!"

மண்வெட்டியைக் கீழே போட்டு விட்டு, இரண்டு கைகளையும் இடுப்பில் மடித்து வைத்துக் கொண்டு, தலையைத் தூக்கி அவளைப் பார்த்தவாறே நிமிர்ந்து நின்றான் முருகையன். சித்திராவின் கண்களுக்கு அவன் வானத்துக்கும் பூமிக்கும் ஒன்றாக உயர்ந்து நிற்பதுபோல் தோன்றியது.

அவன் பெருமையுடன் சிரித்தான். அவனுடைய உருண்டு திரண்ட தோள்களில் முத்து முத்தாக வேர்வை மணிகள் கொப்புளித்திருந்தன.

"நீயும் தோட்ட வேலை செய்கிறாயா, சித்திரா? இந்தா, இந்தப் புல்லைத் திரட்டிக் கொண்டு போய்ப் பசுவிடம் போடு! உம்!"

அருகில் கிடந்த கூடையில் புல்லை நிரப்பி அவளிடம் எடுத்துக் கொடுத்

தான். தயங்குவதற்கு அவளுக்கு அவன் நேரமே கொடுக்கவில்லை.

"இங்கே வேலை செய்வதென்றால் சேலையை வரிந்து கட்டிக் கொண்டு வர வேண்டும். தெரியுமா? சரி, போய்க் கொட்டி விட்டு வா!"

அடிமை போல் அவன் இட்ட கட்டளையை நிறைவேற்றி விட்டு வந்து நின்றாள் சித்திரா. அவளுக்கு ஆனந்தமாகவும் இருந்தது; அதே சமயம் வெட்கமும் பிடுங்கித் தின்றது.

'களீர்' என்று சன்னல் பக்கம் சிரிப்பொலி. இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். அங்கே மாணிக்கத்தின் மனைவியோடு, இப்போது சித்திராவின் தாயாரும் ஒன்றாக நின்று கொண்டிருந்தாள்.

"போங்கள்! எனக்கு வெட்கமாக இருக்கிறது!" என்று முகத்தை மூடிக் கொண்டு அவ்விடத்தை விட்டு ஓடப் பார்த்தாள் சித்திரா. முருகையனுக்குத் திடீரென்று கோபம் வந்து விட்டது. தான் செய்வது என்ன என்பதைக்கூட யோசிக்காமல், எட்டி அவள் கரத்தைப் பற்றி இழுத்தான். எவ்வளவு வலிமையான பிடி!

"இதோ பார், போகாதே! இதில் என்ன வெட்கம் வந்திருக்கிறது? நான் சொல்வதைக் கேள், சித்திரா!"

அவன் பிடியை விடவில்லை. மற்றவர்கள் இரண்டு பேர்கள் தங்களைப் பார்த்துக் கொண்டிருப்பது அவனுக்குத் தெரியும். ஆனாலும் அவன் அவளை நழுவ விடவில்லை. 'இதில் என்ன வெட்கம் வந்திருக்கிறது? எதற்காக அவர்கள் பரிகாசமாய்ச் சிரிக்கிறார்கள்?'

"விடுங்கள், கையை!" என்று அழமாட்டாக் குறையாகச் சொன்னாள் சித்திரா.

"நீ நான் சொல்வதைக் கேட்க வேண்டும். அப்போதுதான் விடுவேன்."

"சரி!" அவள் வரிந்து கட்டிக் கொண்டு சொன்ன வேலைகளைக் கேட்கத் தொடங்கி விட்டாள். சன்னலோரத்துப் பரிகாசச் சிரிப்பு இப்போது அடங்கி விட்டது. மாமியும் மருமகளும் ஒருவரை யொருவர் பயத்தோடு பார்த்துக் கொண்டார்கள். மாணிக்கத்தின் மனைவிக்குத் தன்னுடைய எண்ணம் ஈடேறவில்லை என்பதில் ஆத்திரம். தன்னை அந்த முருகையன் தொடிப் பொழுதில் முறியடித்து விட்டானே என்ற கோபம்.

"அத்தை! நம்ப சித்திராவுக்கு இப்பவே மாப்பிள்ளை சொக்குப் பொடி போட்டு வைச்சிருக்கார் அத்தை! எவ்வளவு நெஞ்சுத் துணிச்சல் இருந்தால் அவர் அவளை நமக்கெதிரிலேயே கைப் பிடிச்சு இழுப்பார்!"








''சின்னஞ் சிறுசுகள்! இதெல்லாம் அதுகளுக்கு ஒரு விளையாட்டு!'' என்று மறுப்பினாள் மாமியார். மருமகளுக்கு முன்னால் தன் மகளை விட்டுக் கொடுத்து விடக் கூடாதல்லவா?

''விளையாட்டு வினையாக முடியாமல் பார்த்துக் கொள்ளணும் அத்தை! நம்ப சொல்கிறபடி கேட்கிற பிள்ளைங்கிறதினாலேதானே, நம்ப அவரை இங்கே கூட்டி வந்து இவ்வளவு செய்து வைச்சிருக்கோம்? இப்பவே அவரோட இஷ்டப்படி சித்திராவை ஆட்டி வைக்கத் தொடங்கிட்டா, இது நம்ப குடும்பத்துக்கு நல்லா இருக்குமா?''

''ஒண்ணுமில்லாத விஷயத்துக்கு நீ ரொம்பக் கவலைப்படறே! எல்லாம் கல்யாணம் ஆச்சின்னா சரியாப் போகும். இப்போ மாணிக்கம் உன் பேச்சைத் தானே கேட்டு நடக்கிறான்? எல்லாம் இந்தக் காலத்திலே அப்படி அப்படித் தான் நடக்கும். விட்டுத் தள்ளு!''

மருமகளுக்கு இது கருக்கென்று தைத்தது. அவளும் பணக்கார வீட்டுப் பெண்தான்.

''விட்டுத் தள்ளுகிற விஷயமில்லை, அத்தை இது! நம்பளோட குடும்ப கௌரவம் என்ன? நம்பளோட மானம் மரியாதை என்ன? பத்து ரூபாய்க் காசை விட்டெறிஞ்சா மாடா உழைக்கிறதுக்குக் காத்திருக்கான் தோட்டக்காரன். அதை விட்டுட்டுக் காலை நேரத்திலே ஆணும் பெண்ணும் போய் அங்கே கூத்தடிக்கலாமோ?''

பதில் சொல்லாமல் மெதுவாக நழுவி விட்டாள் சித்திராவின் தாயார். 'அவர்கள் சிரிச்சுப் பேசறது இவளுக்குப் பிடிக்கல்லே; பொறாமையினாலே எதை யாச்சும் உளறி வைக்கிறா!' என்று தனக்குள் முணுமுணுத்துக்கொண்டாள்.

தங்கள் விஷயம் இந்த அளவுக்குப் போய் விட்டதை அறியாத சித்திராவும் முருகையனும் தோட்ட வேலையை முடித்து விட்டு வீட்டுக்குள் வந்தார்கள். தனித் தனியே தங்களுடைய அறைகளுக்குச் சென்று குளித்தார்கள். அவசரம் அவசரமாக மாற்றுடை உடுத்துக் கொண்டு முருகையனிடம் ஓடி வந்தாள் சித்திரா.

''இன்றைக்கு நீங்கள் சொல்லியபடி நான் கேட்டிருக்கிறேனல்லவா?''

''ஆமாம்; அது எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது'' என்றான் முருகையன். ''நான் பெரிய பாளையத்துத் தோட்டத்தை நினைத்துக்கொண்டேன்'' என்றான் முருகையன்.

''இதோ பாருங்கள்!'' என்று அவனுடைய அருகில் நெருங்கி வந்து செல்லத்தோடு அவன் கரத்தைப் பற்றினாள் சித்திரா. ''தேகப் பயிற்சி வேண்டுமென்றால், நீங்கள் அறைக்குள்ளாகவே அதைச் செய்யலாமே! எதற்கு மற்றவர்கள் கண்ணில் பட்டு அவர்கள் கேலி செய்ய இடம் கொடுக்க வேண்டும்?''

''தோட்டம் இல்லாவிட்டால் நீ சொல்வது சரிதான். தோட்டந்தான் இருக்கிறதே! தோட்டத்தில் உயிர்க் கூட்டத்துக்கு மத்தியில், உயிர்க் கூட்டத்துக்காக உழைப்பது உனக்கு உற்சாகமாக இல்லை? வெறும் தேகப் பயிற்சியில் சுயநலம் இருக்கிறது; இதில் சுயநலத்தோடு பயிர்நலமும் இருக்கிறதே!''

''போங்கள், அத்தான்! உங்களை நான் பேச்சில் வெற்றி கொள்ள முடியாது'' என்று சிணுங்கினாள் சித்திரா. பிறகு, சுற்றி வளைத்துக் கொண்டு, மற்றொரு விஷயத்தை அவனிடம் மெதுவாகத் தெரிவித்தாள்.

''நீங்கள் சொல்கிறபடி நான் கேட்டு விட்டேன். அதற்காக நான் சொல்கிறபடியும் நீங்கள் கேட்க வேண்டும்.''

''என்ன செய்யவேண்டும்; சொல்!'' என்று வினவினான் முருகையன்.

''நான் உங்களுக்காகத் தைத்து வைத்திருக்கும் கோட்டையும் சூட்டையும் இப்போது எனக்காகப் போட்டுக் கொள்ள வேண்டும். தோட்டத்தில் உங்களைப் பார்ப்பதற்கு எனக்குப் பிடித்திருந்தது. அதேபோல் இந்த உடையிலும் உங்களைப் பார்க்க வேண்டும் என்று எனக்கு ஓர் ஆசை!''

முருகையனுக்கு இப்போது வெட்கமாக இருந்தது!

''சித்திரா!'' என்று கெஞ்சினான்.

''ஊஹூம்! உங்களுடைய அண்ணா செல்வரத்தினம் அன்று போட்டுக் கொண்டு வந்தாரே, நீங்கள் மட்டிலும் போட்டுக் கொண்டால் என்னவாம்? அவருக்கு அது நன்றாகத்தானே இருந்தது....?''

செல்வரத்தினத்துக்கு அது நன்றாக இருந்தது என்பதைச் சித்திராவின் வாயால் கேட்ட பிறகு, முருகையன் கணப் பொழுதுகூடத் தாமதிக்கவில்லை. மளமளவென்று உடை மாற்றத்தில் இறங்கினான். துரை போன்ற கோலத்தில் அவன் காட்சியளித்தான்.

வைத்த கண் வாங்காமல் அவனைப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, அவனிடம் தான் பெற்ற வெற்றியைத் தன் அண்ணியிடம் பறைசாற்றுவதற்காக அவனைத் தானே சாப்பிடுவதற்கு அழைத்துக் கொண்டு சென்றாள். அண்ணியின் கண்கள் அகல விரிந்தன; இமைப்பை மறந்தன. (தொடரும்)

# கூடில்லாப் பறவை

## வையவன்

"சங்கு."

சமையல் அறையில் வெந்து கொண்டிருந்த இட்டிலி அடுப்பைக் கவனித்துக்கொண்டிருந்த சங்குண்ணி நாயர் ஸ்நான அறையிலிருந்து எஜமானின் குரல் அழைப்பதைக் கேட்டான். வழக்கம்போல் துண்டை மறந்துவிட்டார் என்று நினைத்து எழுந்து துண்டை எடுத்துக் கொண்டு ஸ்நானஅறைக்கு வெளியே தயங்கிய படியே நின்றான்.

"எஜமான்! இங்கனே நிக்கிறேன். துண்டு!" என்று ஒருக்களித்திருந்த கதவின் வழியாகத் துண்டை நீட்டினான்.

"துண்டு கொண்டாந்துட்டேன் சங் குண்ணி. ஒன்னே அதுக்காகக் கூப்பிடல்லே. அடுப்புக் காரியமா இருக்கையா?"

"ஆமாம். எஜமான்! இட்டிலி ஏத்தி யிருக்கேன்."

"இட்டிலிதானே! சரி, நான் எறக்கறேன். ஒரு முக்கியமான வேலே. எட்டரை மணிக்குள் ளாறே பெல்ஸ் ரோடிலே ஒரு ஆசாமிக்கு பணம் கொண்டு வந்து தர்றதா சொல்லி விட்டேன். மணி இப்ப என்ன ஆகிறது?"

"ஏழரை எஜமான்."

"சரி, ஷெல்பைத் திறந்து எழுநூத்தி ஐம்பது ரூபா எடுத்துக்கோ. பெல்ஸ் ரோடிலே நாதமுனி அண்ட் கோ ன்னு போர்ட் போட்டிருக்கும். அதே தான் வீடும். அவரிட்டே சேர்த்துட்டு, இன்னிக்குச் சாயந் திரமா அவரை நான் பாக்கறதா சொல்லு. சீக்கிரமா வந்துடு. ஒரு டாக்ஸியைப் பிடிச் சுக்கினு போ."

"எதுக்கு எஜமான்! சைக்கிள்ளேயே போயிட்டு வர்றேன்."

"ஊம்" என்று உள்ளேயிருந்து மறுமொழி தந்தார் அவர்.

சங்குண்ணி நாயர் மேஜைக்குள்ளேயிருந்து சாவியை எடுத்து ஷெல்பைத் திறந்தான். சொன்ன தொகையை எடுத்துக் கொண்டு அதை அழுக்கான இடுப்பு வேஷ்டியில் கட்டி முடிந்து கொண்டு அப்படியே புறப்பட்டான். வாசற்படிக்கு அருகில் சைக்கிள் நிறுத்தி வைக்கப்பட் டிருந்தது. அதைத் தள்ளிய படியே ஸ்நான அறையை நோக்கிக் குரல் கொடுத்தான்.

"எஜமான்! நான் போறேன். அடுப்பிலே இட்லி இருக்கு. சீக்கிரம் கவனிக்கணும்."

"ஓ. இதோ ஆச்சு சங்கு. நீ பொறப்படு."

சைக்கிளைப் படிக்கட்டுகளில் இறக்கும்போது சங்குண்ணி யதேச்சையாக இடது புறம் கவ னித்தான். 'சிவசங்கரம் பிள்ளை' என்ற பெயர் பலகையில் 'இன்' பகுதி இன்னும் தள்ளப்படவில்லை. இடது கையால் அதைத் தள்ளி விட்டு வீதியில் இறங்கிச் சைக்கிளில் ஏறிக் கொண்டான்.

சங்குண்ணி நாயர் அலாவுதீன் நீபத்துப் பூதம் போல் அகண்டாகாரமான உருவமும், உயர்ந்து நிமிர்ந்த மேருவைப் போன்ற கம்பீர மான தோற்றமும், உலகத்தின் புன்மைகளை யெல்லாம் அலட்சியமாகப் பார்ப்பன போன்ற கசப்பான கண்களும், அழுக்கடைந்த அரைக் கை பனியனும், வேஷ்டியுமாக வாகன சந்தடி களில் அவனுடைய கம்பீர ஆகிருதி சைக்கிளைச் செலுத்திச் செல்வது ஒரு ராஜா மாறு வேஷத் தில் நகர்ச் சோதனைக்குப் புறப்பட்டாற் போலிருந்தது.

சிவசங்கரம்பிள்ளையும் சங்குண்ணி நாயரும் சரியான ஜோடிதான். வற்றலான அந்தக் குள்ள உருவம் தலையில் செட்டுகள் வைத்துக் கொள்ளும் தொப்பியை அணிந்து பட்டை யாகத் திருநீறு பூசிப் பெருவிரலளவு சந்தன பொட்டுக் கறுத்த முகம் துண்டு மீசையால் விசித்திர பாவம் கொள்ள, வேஷ்டியின் ஒரு மூலையைக் கையில் தூக்கிப் பிடித்துக் கொண்டு சங்குண்ணியோடு நடந்து போகும்போது, என்ன வித்தியாசங்கள் இருந்த போதிலும் இரண்டு பேருக்கும் ஏதோ ஒரு பொது ஒற்றுமை இருந்தது. சிவசங்கரம் பிள்ளையை விடச் சங்குண்ணிக்கு ஓ ரி ர ண் டு வயது குறைவு. அவருடைய பூர்வீகம் எப்படிச் சங்குண்ணிக்குத் தெரியாதோ, அப்படியே சங்குண்ணியின் பூர்வீகம் சிவசங்கரனுக்குத் தெரியாது. எட்டு வருஷங்களுக்கு முன் வாழ்க்கையின் இரு வேறு இருண்ட திசை களிலிருந்து புறப்பட்டு இங்கே சந்திக்க என்று விதிக்கப்பட்டவர்கள் போல அவர்கள் சந் தித்தார்கள். அப்போது சலவைச் சட்டை யும் வேஷ்டியுமாகச் சிவசங்கரம் பிள்ளையிடம் வேலே கேட்கப்போனான் சங்குண்ணி. சொந்த ஊரில் வியாபாரம் நொடித்துப் போக நண் பர் ஒருவருடைய வற்புறுத்தலின் பேரில் சென்னைக்குத் தொழில் செய்ய வந்திருந்த சிவசங்கரம்பிள்ளைக்குத் தாரம் இறந்து போய் விட்டாள். பிள்ளையோ குட்டியோ பிய்த்துப் பிடுங்கச் சம்சாரமோ இல்லாத காரணத்தால் ஹோட்டலில் சாப்பிட்டு அந்த நாளில் உடம் பைக் கெடுத்துக் கொண்டிருந்தார் அவர்.

சங்குண்ணி அவர் வாழ்வில் முதலில் சமை யல் அறையில்தான் பிரவேசித்தான்; பின்னால் சிவசங்கரம் பிள்ளை பெரிய மனிதராகி ஏற்று மதி இறக்குமதியில் கொஞ்சம் பசை கண்டு சென்னையில் ஆழக் காலூன்றிய போது சங் குண்ணி அவருடைய வாழ்வின் முக்கிய அம்ச மாகி விட்டான்.

அவனுக்கு அவர் மாதா மாதம் அறுபது ரூபாய் சம்பளம் கொடுத்தார். அதை அவன் என்ன செய்கிறான் என்று கேட்டுக் கொள்ள வில்லை. ஆயிரக்கணக்கில் தன் எஜமான் சம்பாதித்து ஏன் இப்படித் தான தர்மங்கள் செய்கிறார் என்று சங்குண்ணி நினைத்ததுண்டு; கேட்டதில்லை. ஆம், சிவசங்கரம் பிள்ளை ஒரு வேதாந்தி. அவருக்கு வியாபாரம் ஒரு வாழ்க்கைக் கடமை. லாபமோ, நஷ்டமோ கருதாமல், எதற்காகச் சம்பாதிக்கிறோமென்ற கேள்வி எழாமல் அவர் வியாபாரம் செய்து கொண்டு போனார். சங்குண்ணி நாயரும் சிவசங்கரம் பிள்ளையும் சரியான ஜோடிதான்.



யார் நன்மைக்காக உழைக்கிறோம் என்ற பிரக்ஞையேயற்று அவன் சிவசங்கரம் பிள்ளைக்குச் சேவகம் செய்து வந்தான். அவனுடைய நினைவில் எஜமானுக்கு ஜன்ம ஜன்மாந்தரங்களாக உழைக்க வேண்டும் என்ற நியதியேறி, சொந்த விருப்பு வெறுப்புக்கள் என்பனவெல்லாம் குறுகிக் குறைந்து போய் அவன் அவரிடம் ஐக்கியமாகிவிட்டான். 'சங்குண்ணி! சிவசங்கரம் பிள்ளைக்கு அப்புறம் நீ என்ன ஆகப் போகிறாய்? உன் வாழ்க்கைக்கு அர்த்தம்தான் என்ன?' என்று அவனை யாராவது கேட்டால் அதற்கு அவனால் யோசிக்கக் கூட முடியாது.

சிவசங்கரம்பிள்ளை அவசரம் அவசரமாகக் குளித்துவிட்டு வந்து அடுப்பைக் கவனித்து இட்டிலியை இறக்கினார். சங்குண்ணி தொகையை அரைத்து ஓர் எவர்சில்வர் கிண்ணத்தில் போட்டு மூடி வைத்திருந்தான். வெளியுலகில் ஒரு பெரிய வியாபாரப் புள்ளியாக இருந்த போதிலும், இப்படிச் சிறிய வேலைகளில் ஈடுபடுவதைக் குறித்து, அவர் கவலை கொள்ள மாட்டார். அவர் விரும்பினால் இன்னும் இரண்டு வேலைக்காரர்களை வைத்துக் கொள்ளலாம். அது அவருக்கு இஷ்டமில்லை; சங்குண்ணிக்கும் பிடிக்கவில்லை.

முக்கால் மணி நேரத்தில் சங்குண்ணி பெல்ஸ் ரோடு ஆசாமியிடம் தொகையைக் கொடுத்து விட்டுத் திரும்பி வந்தான். பிள்ளை கட்டுக் கட்டாக விபூதி அணிந்து சந்தனத்தைக் குழைத்து இட்டுக் கொண்டு பகவத் கீதையைப் பிரித்தபடி அவன் வரவுக்காகக் காத்திருந்தார். அவர் பெரிய சைவ சித்தாந்தியாக இருந்தாலும் தினமும் கீதையைப் படிக்காமல் அவருக்குப் பொழுது ஓடாது. அன்று ஞாயிற்றுக் கிழமை. அது எந்தக் கிழமையானாலும் சங்குண்ணி பரிமாறிச் சாப்பிட்டால்தான் அவருக்குத் திருப்தி. சங்குண்ணி சைக்கிளை உள்ளே தள்ளி மூலையில் நிறுத்தி விட்டு, போன இடத்தில் வாங்கி வந்த ரசீதை அவரிடம் நீட்டினான்.

''என்ன சங்கு ஆள் வீட்டிலே இருந்தானா?''

''இருந்தது எஜமான்.''

''என்னவாச்சும் சொன்னானா?''

''நிங்களைச் சாயந்திரம் கிளப்பிலே பார்க்கிறதா சொல்லிச்சு.''

''சரி, நீ எனக்குப் பரிமாற வா. அடுப்பிலே பருப்பு வேகப் போட்டிருக்கிறேன். ஒரு ஸ்பூன் நெய்யை விட்டுடு'' என்று கீதையை மூடி மேஜை மேல் வைத்து விட்டு ''முருகா'' என்று கூறிக் கைகழுவ எழுந்தார். சிற்றுண்டியை நிதானமாகச் சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது நேற்றிரவு இரண்டு மணி நேரம் விழித்திருந்து 'ரேஸ் புக்'கில் உழன்றது நினைவு வந்தது.

''சங்குண்ணி, இன்னிக்கு என்ன கிழமை? ஞாபகம் இருக்கா?''

''இருக்கு எஜமான். ஞாயித்துக்கிழமை.''

''ஆங். நீ சமையலே யெல்லாம் சீக்கிரமா முடிச்சுட்டுப் பதினொண்ணுக்கெல்லாம் கிளம்பிடு. இன்னிக்கு மகாராஜா கப். அயனை டிரிபிள் ஈவெண்ட் ஒண்ணுக்கு ஸ்டடியானைக்கு கெடைச்சிருக்கு.''

சங்குண்ணி ''ஆகட்டும்'' என்றான்.

பிள்ளைக்கு இந்த ரேஸ் விஷயத்தில் நீண்ட நாட்களாகவே ஒரு பற்று உண்டு. அவர் சூதாடி அல்ல. வெற்றி தோல்வி என்ற வேடிக்கையான விளையாட்டுக்காகக் கண்டிப்பான அளவுகோலுடன் இதில் ஈடுபட்டது. தோற்றால் வருந்துவதுமில்லை; ஜெயித்தால் மகிழ்வதுமில்லை. ரேஸ் கோர்ஸுக்கு இவராகப் போகவும் மாட்டார். பொறுக்கி எடுத்த மூன்று குதிரைகள் மேல் பணத்தைக் கட்டி வரச் சங்குண்ணியை அனுப்புவார்.

சங்குண்ணிக்கும் அந்த மனித வெள்ளத்தை ரசிப்பதிலே ஒரு சந்தோஷம்.

இத்தனை நாட்களும் அந்த ரேஸ் மைதானத்திலிருந்து மனத்தில் எந்தவிதமான சலனமுமில்லாமல் ஒரு வேலைக்காரனைப் போல் தன்னிடம் ஒப்படைக்கப்பட்ட கடமையை உணர்ச்சியற்றுச் செய்து முடித்து விட்டு, திரும்புவான். இன்று அவன் மனம் திரும்பும் போது குதூகலத்துடன் பொங்கிற்று. இன்று ஏதோ ஒரு வேடிக்கையில் கையில் வைத்திருந்த இருபது ரூபாயை ஓர் ஊர் பேர் தெரியாத குதிரை மேல் கட்டி..... அது தோற்று விடும் என்று நம்பிக்கையோடு எதிர்பார்க்கும் போது அது அநேகமாக ஜெயித்துவிட்டது... இப்போது அவன் கையில் இரண்டாயிரம் ரூபாய் இருந்தது.

சங்குண்ணி பணத்துக்கு ஆசைப்பட்டவனல்ல. பணம் என்றால் அவனைப் பொறுத்த வரையில் அதற்கேதும் மதிப்பில்லை. அவன் எஜமான் சிவசங்கரம் பிள்ளையின் நம்பிக்கையான வேலையாள். அவர்தான் அவன் வாழ்க்கை. வெற்றியிலும் தோல்வியிலும் இருக்கிற வேடிக்கைக்காகத்தான் அவன் அந்தத் தொகையைக் கட்டினான். வெற்றி தான். பணத்தை வாங்கும்போது சங்குண்ணிக்குத் திகைப்பாகி விட்டது. அந்தப் பணத்தைத் தன் கையால் தனது எஜமானுக்காக இன்றித் தனக்காக வாங்க வேண்டுமா? அவ்வளவு பெரிய தொகை அவனுக்கு ஏன்? அதை வைத்துக் கொண்டு என்ன செய்வது? அவன் காலைப் பவனக்கொடிகள் பின்னிக்

கொண்டது போல் அவன் மயங்கினான். இது எஜமானுக்கு விரோதமாய் ஆகுமா?

'எனக்கெதுக்குய்யா பணம்? எதுக்கோ என்னத்துக்கோ கட்டிட்டோம். கெடைச்சிடுச்சு. அதுக்கப்பறமா ஐயப்பன் விட்டவழி.'

சங்குண்ணி நாயர் அழுக்கடைந்த அரைக்கை பனியனும் வேஷ்டியுமாக இரண்டாயிரம் ரூபாயை மடியில் கட்டிக் கொண்டு வீட்டுக்கு வந்தான். சிவசங்கரம் பிள்ளையிடம் அவர் தோற்று விட்டதைச் சொன்னான். தான் ஜெயித்து விட்டதைச் சொல்லவில்லை. அந்தப் பணத்தை என்ன செய்வது என்று அவன் தீர்மானிக்கவில்லை. உறவென்றும் உரிமையென்றும் சங்குண்ணிக்குச் சொந்த ஊரில் இல்லை. அதை யாருக்கும் அனுப்ப வேண்டியதில்லை. யாருக்கேனும் பட்ட கடனைத் தீர்த்திருந்தாலும் அவன் இருதயத்தை விட்டு ஒரு கனம் இறங்கியிருக்கும்.

போகப் போக அந்தப் பணம் கள்ளங்கபடில்லாத சங்குண்ணிக்கு ஒரு பிரச்னையாகிவிட்டது.

வேலையெல்லாம் தீர்ந்து பொழுது போன பின்பு, தனது சின்ன டிரங்குப் பெட்டியின் அடியில், அழுக்குத் துணிகளுக்கும், பக்தி சம்பந்தமான மலையாளப் புத்தகங்களுக்கும் அடியில் பளபளக்கும் அந்த நோட்டுக் கத்தையை எடுத்து வைத்து, பெட்டியிலிருந்து தாகத்தை உகப்பி அதை வேடிக்கை பார்ப்பது போலப் பார்த்து விட்டு, மூடி வைத்து யோசிக்கையில் சங்குண்ணி நாயருக்குக் கவலைகள் ஆரம்பமாயின.

இதை அப்படியே எஜமானிடம் கொடுத்தால் என்ன? நான் இதைத் திருடி வைத்திருந்ததாக அவர் நினைத்தால்.....? அவனுக்கு உடம்பு சிலிர்த்தது.

ஏதாவது தர்மம் செய்து விடுவோமா? யாருக்குச் செய்வது? நேர்மையான ஓர் ஏழைக்கோ, நம்பிக்கையான ஒரு தர்ம ஸ்தாபனத்துக்கோ செய்தால்தான் சரி. அதைத் தேட வேண்டும். அதனால் ஒரு துளி விளம்பரம் கூட வராதபடி ஜாக்கிரதையாக அதை ஒப்படைக்க வேண்டும். பிரதி தினமும் சங்குண்ணி இப்படிக் குழம்பிக்கொண்டிருந்தான்.

விதி விதி என்று ஓயாமல் பேசுகிறார்களே அது எத்தனை வேடிக்கையாக அல்லது கிரமமாகச் சில விஷயங்களை வரிசைப்படுத்துகிறது. சிவசங்கரம் பிள்ளைக்குத் தம் வாழ்நாளிலேயே கண்டிராத பெரும் சறுக்கல் ஒரு பெரிய ஏற்றுமதியில் நேர்ந்து விட்டது. சிவசங்கரம் பிள்ளை ஓஹோவென்று வியாபாரம் செய்து வந்த போதிலும் ரொக்கப் பணம் அவரிடம் கிடையாது. மார்க்கெட்டில் அவருக்கிருந்த நல்ல பெயரின் காரணமாக ஆட்டைத் தூக்கி மாட்டில் போட்டு, மாட்டைத் தூக்கி ஆட்டில் போட்டு அவர் வியாபாரம் செய்து வந்தார். மிகவும் நாணயஸ்தர். இது சக்திக்கு மீறிய பெரிய நஷ்டம். இந்த இக்கட்டில் முக்கியமான இன்னொரு வியாபாரத்திலும் தலை கொடுத்துவிட்டார். பணத் தேவை அவருடைய மென்னியைப் பிடித்தது. சரக்கெல்லாம் சேகரமாகி மலேயாவுக்குப் புறப்படக் கப்பலை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் நிலை; புதிய சரக்கு அனுப்பி வைக்கப் பணமில்லாத குறை ஒருபுறம்.

இவ்வளவு சன்னைகளையும் வைத்துக் கொண்டு மத்தியானம் சங்குண்ணி சமைத்து விட்டுச் சாப்பிடக் கூப்பிடும் வரை ஆபீசுக்குக் கூடப் போகாமல் நாற்காலியின் இரண்டு கைப் பிடிகளின் மேலும் கைகளை வைத்துத் தலையைத் தாங்கிக் கொண்டு, சஞ்சலமற்ற பார்வையோடு மடியின் மீது விரிந்து கிடந்த பகவத் கீதையில் லயித்திருந்தார். சங்குண்ணிவெறும் உடம்பின் மீது போர்த்தியிருந்த மலையாளத் துண்டில் ஈரக் கையைத் துடைத்த







''இவன்தான் என் பேரன். நிறைய சம்பாதித்துக் கோடி கோடியா பணம் சேர்த்திருக்கிறான்.''

''அப்ப பேரன் என்று சொல்லாதீங்க, குபேரன் என்று சொல்லுங்க!''

வண்ணம் தன் எஜமானைப் பார்த்தான். எட்டு வருஷங்களாக அவனுக்குத் தெரிந்திருந்த சிவசங்கரம் பிள்ளை அங்கே இல்லை. முகத்தில் ஒரு கரு நிழலோடு, நெற்றியில் வேதனை தெறிய ஒரு நூதன சிவசங்கரம் பிள்ளை அங்கே யிருந்தார். சங்குண்ணி மனத்தில் வருத்தம் பனிச்சென்று ஊடுருவியது. அவர் கவலைப்படுவது எதற்காக என்று அவன் அறிவான்.

மெதுவாகத் திரும்பிப் போய்ச் சமையல் அறை ஓரத்தில் தன் பெட்டியிலிருந்த மொத்தப் பணத்தையும் ஒரு காகிதத்தில் சுற்றி எடுத்துக் கொண்டு வந்தான். சிவசங்கரம் பிள்ளை அதே நிலையிலேயே கதையில் கண்ணுயிருந்தார். அவர் அருகில் சென்று சற்று ஓரமாக, மார்பின் மீது கைகளைக் கட்டிக் கொண்டு சங்குண்ணி அவரை அழைத்தான்.

''எஜமான்!''

சிவசங்கரம் பிள்ளை புத்தகத்திலேயே கவனமாக அவன் அருகில் வந்து நிற்பதை உணராமல், ''ஊம்!'' என்றார்.

''ஒரு சமாசாரம் சொல்லணும். தப்பா நெனெக்கப்படாது'' என்று உருக்கமான குரலில் ஆரம்பித்தான். சிவசங்கரம்பிள்ளையின் கவனம் கலைந்தது.

''என்ன சங்கு, என்ன விசேஷம்?''

''நான் ஒரு தப்புப் பண்ணிட்டான். ரேசுக்குப் போயி ஒரு பிருகத்தின் பேர்லே, இருபது ரூபா கட்டிட்டன். ரெண்டாயிரம் அடிச்சுட்டுது. இதை வைச்சு என்ன பண்றதுன்னு தெரியாமல் முழிச்சேன். எஜமான் என்னை க்ஷமிக்கணும்'' என்று பக்கத்திலிருந்த மேஜைமீது அந்த நோட்டுக் கத்தையை வைத்தான் சங்குண்ணி.

''என்ன..... என்ன சங்குண்ணி?''

சிவசங்கரம் பிள்ளை என்ன பேசுவது என்று புரியாமல் சங்குண்ணியை உற்றுப்பார்த்தார். அவர் உள்ளத்தில் அவன் பேரில் அன்பு ஒரு பக்கமும் ஆச்சரியம் ஒரு பக்கமும் பொங்கின. சங்குண்ணி சிவசங்கரம் பிள்ளைக்கு ஜன்னல் கதவும் கதவுமற்ற ஒரு வீடாகத்தான் இத்தனை நாட்கள் தெரிந்தான். அவன் மனத்தில்கூட ரகசியமா?

''சங்குண்ணி, நீ ஒரு நல்ல மனுஷன்'' என்றார். அதற்குள் அவருடைய தொண்டை கரகரத்து விட்டது. உள்ளம் சற்று நழுவி நெகிழ்ச்சியின் எல்லைக்குள் போய்த் தடுமாறிற்று.

மார்பின் மீது கைகளைக் கட்டிக் கொண்டிருந்த சங்குண்ணி நாத் தழு தழுக்க, ''இது ரொம்பப் பெரிய வார்த்தை எஜமான்!'', என்று அடக்கத்துடன் கூறினான்.

''ஆமா, சங்குண்ணி, இது உன் பணம். இப்போ எனக்குக் கடனாகத் தேவைப்படறது. கொடு. பின்னாடி வாங்கிக்கோ. அப்படின்னு தான் நான் ஏத்துக்க முடியும்'' என்றார்.

''இல்லே எஜமான்...'' என்று சங்குண்ணி இழுத்தான்.

''ஒண்ணும் பேசாதே சங்குண்ணி. இந்த நிபந்தனையின் பேரிலேதான் இதை நான் எடுத்துக்கறேன்—.''

ஆறுமாதங்கள் ஆயின. ஒன்பதுமாதங்கள் ஆயின. ஒரு வருஷம் ஆயிற்று. சங்குண்ணி சமயத்தில் கொடுத்த அந்தப் பணம் சிவசங்கரம்பிள்ளைக்கு மிகவும் உதவி செய்தது. பழையபடியே சிவசங்கரம் பிள்ளை சங்குண்ணியைத் தம் சங்குண்ணியாகவே கருதிக் கொண்டு வந்தார். ஆனால்.....ஆனால்.....

பார்வதிக் குட்டியைச் சங்குண்ணி நாயர் ஜெனரல் ஆஸ்பத்திரி வாசலில் ஒரு நாள் சந்தித்தான். அவளுடைய தந்தை குன்னிராமன் எல்லாரையும் போலவே பட்டணத்தில் பிழைக்க வந்தான். ஒரு டீக்கடையில் கொஞ்ச நாட்கள் இருந்து வயிற்றுக் கட்டி ஆபரேஷனுக்காக ஆஸ்பத்திரியில் இருந்த போதுதான் அவர்கள் சந்திப்பு நேர்ந்தது. இரண்டு பேருக்கும் காதலா என்று எண்ணினால் அது அபத்தம். ஒரு மனித ஜீவனை இன்னொரு மனித ஜீவன் காண்பது போல அவன் கண்டான். நோயாளிக்குக் காப்பியும் இட்டிலியும் வாங்கிக் கொண்டுபோவதை ஆட்சேபித்துக் கொண்டிருந்தான். அவனை விசாரிக்கப் போய் அனுதாபத்தில் ஆரம்பமான அந்த நட்பு சங்குண்ணியின் மனத்தில் ஒரு சலன அலையைக் கிளப்பி விட்டது. அது குன்னிராமன் கேட்ட ஒரு கேள்வியால்தான்.

''உனக்கென்று குடும்பம், குழந்தை குட்டி எல்லாம் இருக்க வேண்டாமோ? என்ன பிழைப்பு அப்பா, பிழைக்கிறாய்?''

அது ஒன்றும் எடுத்த எடுப்பில் சங்குண்ணியைப் பாதிக்க வில்லை. ''உன் எஜமானுக்கு அப்புறம்? உன் பரம்பரை?'' இப்படிக் கேள்வி மேல் கேள்வி போட்டு நெற்றிக்கு மேலே சொட்டிக் கொண்டே யிருக்கும் தண்ணீர்ப் பையைக் கட்டியது போல, குன்னிராமன் சொட்டுச் சொட்டாகச் சங்குண்ணியைக் கலக்கலானான். கொஞ்ச நாட்கள் அந்த ஆஸ்பத்திரிக்குக் குன்னிராமனுக்காகப் போய் வந்தான் சங்குண்ணி.

பார்வதிக் குட்டி அழகி என்று பொய் சொல்லக் கூடாது. அவளைக் கண்டு மயங்கி விட்டுத்தான் சங்குண்ணி தத்தளித்துக்கொண்டிருந்தான் என்பதும் அபாண்டம். குன்னிராமனுக்கு இந்த வரனை விட்டு விடக் கூடாது என்று அபிப்பிராயம். மெல்ல மெல்லச் சங்குண்ணி சேர்த்து வைத்திருந்த பணம், சிவசங்கரம் பிள்ளையிடம் உள்ள பணம் என்று எல்லாவற்றையும் தெரிந்துகொண்டு சொந்தமாக அவனுக்கு நிலம் வாங்கித் தந்து கல்யாணம் செய்து வைப்பதாகவும், குழந்தை குட்டிகளோடு சௌக்கியமாக அவன் வாழ்ந்தாக வேண்டும் என்றும் அவனைக் கிண்டத் தொடங்கினான்.

ஒரு குழந்தைக்குத் தகப்பனாக வேண்டும், தன் கையால் அவளை எடுத்து வளர்க்க வேண்டும் என்ற ஆசை சங்குண்ணிக்கு மிகுதியாயிற்று. அதற்குப் பணம் தேவைப்பட்டது. பணத்தின் தேவை எழுந்ததும் தனது என்ற சொந்தம் பிறந்தது. சிவசங்கரம் பிள்ளை அதைத் திருப்பித்தருவார் என்று எதிர்பார்க்க ஆரம்பித்தான். அவர் இட்ட உப்பில் சேமித்த தொகை அது. அதை எப்படி எதிர்பார்ப்பது. கொடுத்ததை எப்படித் திருப்பிக் கேட்பது என்று தவித்தான். அவரை நேரடியாகக் கேட்க அவனுக்குத் துணிவில்லை. அவன் காத்துக் கொண்டிருந்தான். குன்னிராமன் உடல் தலமாகி மலையாளக் கரைக்குப் போய் மாதத்துக்கு ஒரு கடிதத்தில் அவனை வருந்தி அழைக்க அழைக்க சங்குண்ணியின் பொறுமை குறைந்து கொண்டே வந்தது.

ஃ ஃ ஃ

மத்தியானம் சங்குண்ணியைக் கடைத் தெருவுக்கு அனுப்பிவிட்டுச் சிவசங்கரம்பிள்ளை வெளியூர் நண்பர் ஒருவரோடு உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார். சங்குண்ணி போய் ரொம்ப நேரமாயிற்று. பிள்ளைக்கு ஆபீஸ் வேலை இல்லாமையால் சாவகாசமாக நண்பரோடு உட்கார்ந்து கொண்டார்.

''என்ன சிவசங்கரம்! இந்த வயசிலே என்னமோ கொஞ்சம் நல்லபடியா இருக்கே. இன்னும் கொஞ்ச வயசாகித் தள்ளாமை வந்துட்டா உன்னைப் பார்த்துக்கிறதுக்கு யார் இருக்காங்க? நான் சொல்றேன்னு தப்பா எடுத்துக்காதே. அட, செத்தா கொள்ளிக்காவது ஆள் வேண்டாமா?''

சிவசங்கரம் பிள்ளை மௌனமாக அவருடைய கருத்தைக் கௌரவமாகப் பரிசீலிப்பது போலப் புன்முறுவல் பூத்தார்.

''ராஜு! இன்னும் நான் சங்குண்ணியைப் பத்திச் சொன்னதை நீ சரியாப் புரிஞ்சிக்கலே. அவன் என்னை ஒரு தாய்க்குச் சமானமாகக் காப்பாத்தறான். ஒரு சகோதரன் மாதிரி தன்மையா இருக்கான். எனக்கு வயசானப்புறம் நான் என்ன ஆவேனோன்னு பயப்படத் தேவையில்லே. மறுபடியும் சொல்றேன், ராஜு அந்த மாதிரி ஆட்கள் எல்லாம் இந்த லோகத்திலே கெடைக்கிறது கஷ்டம்.''

ராஜு கடகட வென்று சிரித்தார்.

''நீ ஆயிரம் சொல்லு, சிவசங்கரம்! வேலைக்காரன் என்னிக்கும் வேலைக்காரன் தான். அவனுக்கும் நமக்கும் மத்தியிலே சம்பளம் ஒண்ணுதாம்பா உறவு. அதான் சொல்றேன். உனக்கு ரொம்ப வயசாயிடுச்சு.

இன்னும் அனுபவிக்க வேண்டியது நிறைய இருக்கு. கல்யாணம் செஞ்சுக்கோ சிவசங்கரம். வேலைக்காரனையெல்லாம் பெரிசா நெனைக்காதே.''

சிவசங்கரம்பிள்ளை யோசனையோடு விட்டத்தைப் பார்த்து ஒரு பெருமூச்சு விட்டார்.

''ராஜு! அந்தக் காலம் ஒண்ணு இருந்தது வாஸ்தவம். ஒத்துக்கறேன். இப்போ எனக்கு அதிலே ஆசையோ பாசமோ கிடையாது. சொன்னு, நீ சிரிப்பே. இனிமேல் நான் கல்யாணம் பண்ணிக்கக் கூடாதுங்கறதுக்குச் சங்குண்ணியும் ஒரு காரணமாகி விட்டான். அவன் என்னையே நம்பிட்டான். அவனும் கூடில்லாத பட்சி. நானும் கூடில்லாத பட்சி. எட்டு வருஷ காலமாக என்னுடைய வாழ்க்கையிலே அவனுக்குக் கொடுத்த இடத்தை இன்னொருத்திக்குக் கொடுத்துட்டு அவனை வெளியே அனுப்பறதுங்கறது முடியாத காரியம். இனிமேல் நான் கல்யாணம் செய்துக்க இஷ்டப்படலே. அது மூத்தவளோட போச்சு. அப்படி இஷ்டப்படறதுக்கு இனி முடியாது. ராஜு! வாழ்க்கையிலே அன்பு பாசம்னு எல்லாம் பெரிசாப் பேசறோம். ஏதோ சொற்ப சுயநலத்துக்காக ஒரு நிமிஷத்திலே எல்லாத்தையும் மாத்திக்கத் தயாராக இருக்கிறோம். இதெல்லாம் என்னப்பா? ஒன்றிலே திர்க்கமா நிற்க வேண்டாமா? அவன் என்னை நம்பிட்டான். நான் அவனை நம்பிட்டேன். காலம் கழியற வரைக்கும் இந்த வாசற்படியிலேயே அவன் கழிக்கத் தயாராயிருக்கான். அவன் வெறும் வேலைக்காரன் இல்லே. நீ புரிஞ்சுக்கணும், ராஜு. அவன் என்னுடைய மென்மையான சிநேகிதன்.''

ராஜு சற்று நேரம் வாயடைத்துப் போனார். பிள்ளை பேசிய பேச்சின் எதிரொலி படிப்படியாகக் கரைந்து அடங்கிய போது, கதவருகில் பூட்ஸ் ஓசை கேட்டது. ஒரு ஹெட் கான்ஸ்டபிள் மரியாதையுடன் உள்ளே பிரவேசித்து ''சார், இன்ஸ்பெக்டர் உங்களை அழைத்து வரச் சொன்னார். உங்க வீட்டிலே இருந்த வேலைக்காரன் இரண்டாயிரம் ரூபாயோட ரயிலேறப் போறான். அப்போ பிடிச்சட்டோம். கேட்டால், அது தன் பணம்னு சத்தியம் பண்றான். கொஞ்சம் ஸ்டேஷன் வரைக்கும் வந்து போங்க'' என்றார்.

ஒரு வெடிகுண்டு விழுந்து நாசங்கள் எல்லாம் நேர்ந்து போனபின் நிலவும் சூன்யம் அந்த அறையைச் சிறிது நேரம் கப்பியது. பனிச்சென்று மார்பிலே மின்னல் பாய்ந்தாற் போல் சிவசங்கரம் பிள்ளை நாற்காலியில் சாய்ந்தார்.

''பார்த்தீங்களா, நான் அப்பவே சொன்னேனே'' என்று ஆரம்பிக்கப் போன ராஜுவைத் தடுத்து அடக்கி, ''நீங்க போங்க... இதோ வந்துடறேன்'' என்று கம்மிய குரலில் ஹெட்கான்ஸ்டபிளை அனுப்பி வைத்தார் சிவசங்கரம் பிள்ளை. அவரால் இதை நம்ப முடியவில்லை. உலகமே தலைகீழாகப் புரண்டு விட்டது போல் அவருக்குத் தோன்றியது....

'இரண்டாயிரம் ரூபாய். ஆம், அது சங்குண்ணியுடையது. அதை அவன் கேட்டிருக்கலாம். கண்களில் ஒற்றிக் கொடுக்க நான் தயார். திடீரென்று அவனுக்கு என்ன நேர்ந்து விட்டது? அட ஆண்டவா? இது கொடுமை; ஏன், மனிதர்களெல்லாம் இவ்வளவு உறுதியாக நின்று விட்டு, ஒரு கணத்தில் விழுந்து விடுகிறார்கள்?'

கால்மணி நேரம் வரையில் சிவசங்கரம் பிள்ளையால் ஒன்றும் பேச முடியவில்லை. பின்னர் தெளிந்து எழுந்து, முகத்தைத் துடைத்துக் கொண்டு, போட்ட மேல் துண்டோடு அப்படியே ஸ்டேஷனுக்குக் கிளம்பினார். திடீரென்று அனாதையாகி விட்டது போல் அவர் மனம் தனிமையில் தவித்தது.

''இல்லே, இன்ஸ்பெக்டர் சார்! இது அவனுடைய பணம்தான்!'' என்று மூன்றாவது தடவை அடித்துக் கூறி விட்டு 'லாக் அப்' பக்கம் திரும்பிப் பார்த்தார்.

உதடுகள் நடுநடுங்கச் சங்குண்ணியின் பெரிய உருவம் சத்திய தேவதையே வெட்கப்படுவது போல் கூனிக் குறுகியவாறு, ''எஜமான்.....எஜமான்'' என்று சத்தமில்லாமல் முணுமுணுத்தது. சிறிதும் ஆத்திரமுறாமல் பரம வேதனையுடன் அவர் இன்ஸ்பெக்டரிடம் மறுத்ததையும், அவனைப் பார்த்ததையும் அவனால் பொறுக்க முடியவில்லை. லாக்கப்பைவிட்டு வெளியே வரும்போது தள்ளாடியவாறு வந்தான். சங்குண்ணியின் தோள் மீது கையைப் போட்டுச் சிவசங்கரம் பிள்ளை பேசினார்.

''சங்குண்ணி! மனுஷனுக்கு நம்பிக்கை பெரிசு. உன்னை நான் எவ்வளவு நம்பினேன், தெரியுமா? எதை வேணுமானாலும் சிதைச்சிடலாம். நம்பிக்கையை....? ப்சப்ச்..... சங்குண்ணி'' என்று மிகுந்த வருத்தத்தோடு நிறுத்தினார்.

''எஜமான்!'' என்று இரு கைகளையும் கூப்பிக் கொண்டே சங்குண்ணி தன் தலையைக் கவிழ்ந்து கொண்டான்.

''சேச்சே, சங்குண்ணி. இந்தப் பணத்துக்காக நான் வருத்தப்படல்லே. இது உன் சொத்து. என்னை நீ தட்டிக் கேட்டிருக்கலாம். நான் யாரு? என் கிட்டே நீ கேட்க உரிமையில்லையா? அதுகூட என் முக்கியமான வருத்தமில்லே. இந்தப் பணம் என்னை விட்டுப் பிரிகிற அளவுக்கு உன்னைக் கொண்டு வந்திடுச்சா? எட்டு வருஷ காலமா நான் உன்னை நம்பினேன்; என்னை நீ நம்பினே. கேவலம் காசு பணத்திலே இல்லே. எனக்கும் உனக்கும் நாமதான்னு நம்பினேன். இரண்டாயிரம் ரூபாயில்லே, சங்குண்ணி, எல்லாம் உன்னது தான். உனக்காகத்தான் நான் சம்பாதிக்கிறேன். நீ என் பேரிலே வைச்சிருக்கிற அன்பும் பக்தியும் இருக்கு பாரு. அதனாலே தான் இவ்வளவு சக்தியோட நான் வெளியிலே உலாத்தறேன். இது போயிட்டா அப்புறம் எது நிஜம் சங்குண்ணி?''

நடு வீதியில் சங்குண்ணி ஹோவென்று கதறி விட்டான். ''எஜமான், எஜமான், என்னை க்ஷமிக்கணும். புத்தி கெட்டுப் போச்சு. நான் பாவி. ஞான் பாவி.'' அவனுடைய மனத்திலிருந்து பார்வதிக் குட்டியின் சித்திரமும் குன்னிராமனின் கடிதங்களும் ஆவி போலக் கரைந்தோடி விட்டன. சிவசங்கரம் பிள்ளையின் இருதயத்திலிருந்து வந்த உணர்ச்சிப் பெருக்கில் அவன் மெய் சிலிர்த்தது. கூடில்லாத பறவை ஒன்றை விட்டுக் கூடு தேடிக் கொண்டு இன்னொரு பறவை போகக் கூடாது என்று ஒரு தீர்க்கமான தீர்மானம் அவன் நெஞ்சில் உதித்தது.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor. T. Sadasivam.

மகிழ்ச்சியான வைபவங்களை மேலும் ஆனந்த மாக்குங்கள்

**டீலக்ஸ் தந்தி வசதி**

மிகவும் அன்னி யோன்ய பாவத்துடன் செய்தி அனுப்ப டீலக்ஸ் தந்தி உள்ளது. உங்கள் விருப்பப்படி தந்தியின் வாக்கியத்தை எழுதுங்கள். விசேஷ குறிப்புகள் என்ற இடத்தில் "டீலக்ஸ்" என்ற குறிப்பிடவும்.

தந்தி விசேஷ வாழ்த்து பாரத்தில் அனுப்பி வைக்கப் படும்.

நல்வாழ்த்துக்கள் அல்லது மகிழ்ச்சிச் செய்திகள் அனுப்பவேண்டுமா? .. அவைகளை ஒரு வாழ்த்துத் தந்தி மூலம் அனுப்புங்கள்.

வாழ்த்துத் தந்திகள் விசேஷ படத்துடன் கூடிய பாரத்தில் எழுதப்பட்டு கவர்ச்சியான வர்ணக் கவரில் போட்டு விநியோகம் செய்யப் படுகின்றன.

சொந்தம் அல்லது பொதுக்காரியம் போன்ற எல்லா சந்தர்ப்பத்திற்கும் ஏற்ற பலவித மகிழ்ச்சியான வாழ்த்து வாக்கியங்கள் இருக்கின்றன. அவைகளிலிருந்து ஒன்றை பொறுக்கி எடுக்கலாம்

சாதாரண வாழ்த்துத் தந்தி அனுப்புவதற்கு குறைந்த பக்ஷ கட்டணம் 50 ந. பை. பிறகு ஒவ்வொரு கூடுதல் வார்த்தைக்கும் 7 ந. பை

# வாழ்த்துக்கள்
அல்லது
# டீலக்ஸ்
தந்திகள்
## என்று குறிப்பிடவும்

தபால் தந்தி இலாகா

DA 61/747

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon